ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# முதற்பதிப்பின் நூன்முகம்.

"அமிர்தராமாயணம்" என்னும் இச்சிறிய நூலானது "பரித்ராணய ஸாதூநாம் விநாசாயச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே" என்றவாறு பகவான் எடுத்தருளிய பல விபவாவதாரங்களில் ஒன்றாக, தருமஸ்தாபநார்த்தம் சக்கரவர்த்தித் திருமகனாய் அவதரித்த எந்தை எம்பெருமான் ஸ்ரீராமபிரான் திருச்சரிதமாம். ஸ்ரீமத் ராமாயணத்தை, வால்மீக, போதாயன மகரிஷிகளும் கம்பநாட்டாழ்வார் முதலிய பல மேதாவிகளும் சத்திய பத்திய ரூபமாகப் பாடியிருப்பது அனைவருக்குந் தெரிந்தவிஷயமே.

"குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடித் தரங்கநீ ரடைக்கலுற்ற சலமிலா வணிலும் போலேன்" ஆகிய அடியேன் எனது சிற்றறிவுக்கு எட்டிய வரையில் அன்பின் காரணமாகவும் "சரிதம் ரகுநாதஸ்ய சதகோடி பிரவிஸ்திரம், ஏகைக அக்ஷரம் புரோப்தம் மகாபாதக நாசனம்" என்று சொல்லி இருப்பதாலும், இந்த அமிர்த ராமாயணத்தை வெளியிட்டிருக்கிறேன். கல்வியை ஒரு சிறிதும் வாசித்துப் பயன் அறியாத அடியேன் எழுதின கவிநடை கற்றோர்க்குச் சற்றும் வாசிக்கப் பிரியந்தரமாட்டா தெனினும் ஸ்ரீமத் ராமாயணத்தில் அபிமானமுள்ள பக்தர்கள் இதன்கண் நீரில் கலந்த பாலை அன்னப் பக்ஷிகள் எவ்வாறு நீரைப் போக்கிப் பாலை அருந்துகின்றனவோ, அவ்வாறே இதன் கண் உள்ள குற்றத்தை நீக்கிக் குணத்தையே நாடுமாறு வந்தனத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இவ்விரண்டாம் பதிப்பாக விரித்துரைத்த இப் புதுப்பதிப்பை நன்காராய்ந்த ஜோதிஷ பண்டித ஞான லெக்சரர் ம-ா-ா-ஸ்ரீ R. S. ஞானசாமி பிள்ளையவர்கட்கும் இதனை அரங்கேற்றுவித் தருளிய வித்துவான் ஸ்ரீமான் ம. இராஜகோபால பிள்ளை அவர்களுக்கும்,

ப்ரஹ்மஸ்ரீ வரகவி-திரு. அ. சுப்பிரமணிய பாரதியாரவர்களுக்கும் என் மான வந்தனம் செய்கிறேன்.

இந்த இராமாயணத்துக்காக சகாயம் செய்த (Retired Postal Overseer) ம-ா-ா-ஸ்ரீ P. அப்பாய் நாயுடு அவர்களுக்கும், ம-ா-ா-ஸ்ரீ பூ. கோவிந்தராஜுலு முதலியாரவர்களுக்கும் வந்தனம் செய்கிறேன். மற்றும் Messrs. Hamsworth & Co., Proprietor சிரஞ்சீவி மதுரை முதலியாருக்கும், சிரஞ்சீவி திருவேங்கட பிள்ளைக்கும், சிரஞ்சீவி இராமசாமி நாயுடுக்கும், சிரஞ்சீவி தனபால் நாயுடுக்கும், சிரஞ்சீவி இரங்கநாத முதலியாருக்கும், Secunderabad சிரஞ்சீவி V. சாரங்கபாணி முதலியாருக்கும், B. N. Press Proprietor சிரஞ்சீவி நடேச முதலியாருக்கும் என் மனப்பூர்வமான ஆசீர்வாதம் செய்கிறேன்.

" இவ்வி ரண்டாம் புதுப்பதிப் பிற்கின்பாய்ச்
செவ்வி தினமைத் தேயருள் செய்வித்த
கவ்வு வமையு மேற்கிலா ஓவர்சீர்
தெவ்வ ரும்அப்பாய் நாயுடு சீரதே "

8, பாலமுத்து தெரு,
செட்டித் தோட்டம்,
மவுண்ட்ரோட்டு.

இப்படிக்கு,
அமிர்தகவி, திரு. ஆ. தருமலிங்க முதலியார்.



சென்னை, கோமளேசுவரன்பேட்டை, வித்வான் - ஸ்ரீமான்,

## ம. இராஜகோபால பிள்ளை அவர்கள்

### உதவிய எண்சீர் விருத்தம்.

தருமமெலாம் வளர்த்துலகந் தழைக்க வைத்த
    தண்ணருள்கூர் ஒருமங்கை தவழும் பாகத்
தொருமுதல்வன் றிருநாவி லுறையும் பெம்மான்
    ஒண்சரிதம் விருத்தத்தா லுவந்த ளித்தான்
திருமுதல வாம்பயன்கள் செகத்தோ ரெய்தத்
    திருதரும லிங்கமெனுந் திண்பா வல்லோன்
தருநிகரி ராமாபி தானந் தன்னைச்
    சாற்றுவோர் பிழையென்றுஞ் சாரா ரம்மா.

---

உ

செந்திலாண்டவன் திருவடி துணை.

இந்நூலாசிரியரின் உள்ளன்பிற் குரியவரான

## ஸ்ரீமத் வரகவி - திரு. அ. சுப்பிரமணிய பாரதியாரவர்கள்

### அருளிய எண்சீர் விருத்தம்.

தருமநெறி தவறாத தசர தன்றன்
    தனயனென வவதரித்துத் தருமங் காத்த
பெருமகன்றன் சரிதத்திற் பிறங்க வன்பால்
    பேசினான் பக்தரெலாம் விரும்ப மேவார் நூல்
அருமையெனுந் தமிழினதற் காய்ந்து தந்தான்
    அமிர்தரா மாயணமென் றழகு பேர்தான்
இருளகன்ற மனமுடையான் தரும லிங்கம்
    எனும்பேரா னமிர்தகவி யென்னத் தானே.

---

ஸ்ரீமான்-ஆ. மே. சென்னகேசவசுவாமிகளின் மாணவராகிய ம-ள-ள-ஸ்ரீ

## வலசை - கே. பாலகிருஷ்ண தாசரவர்களியற்றிய

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருவளருஞ் சென்னைநகர் புரசை யென்னுந்
    திருப்பதியிற் பிறந்துதமிழ் தெளிந்து நாளும்
மருவளரு மலிக்கேணி மலராள் நாதன்
    மலரடியைத் தஞ்சமென மனதிற் கொண்டு
தருவளரு மடவிதொறுஞ் சஞ்ச ரித்துத்
    தலையுருள வரக்கர்தமைத் தடிந்த ராமன்
உருவளருஞ் சரிதமதை யுரைப்பா ருய்ய
    வுண்மையெனத் தருமலிங்க முவந்தீந் தானே.

# பிழை திருத்தம்.

| காண்டம் | கவி எண் | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| பால | 41 | அறுபது ஆண்டாய் | அறுபதா யிரமாண் |
| | 75 | \|மன்னன் | \|டாய்மன் |
| | 95 | லல் | ல்ல |
| | 98 | ல் | ல |
| | 146 | ரா | ர் |
| | 205 | யிரா.மை | இராமை |
| | 66 | சுற்றும் | சுத்தும் |
| அயோத்தி | 93 | ல | ல் |
| | 99 | அஞ்ச | மஞ்ச |
| | 112 | வை | ஐ |
| | 140 | ரி | ர |
| | 169 | ன | ன் |
| | 177 | த.ரில் | த்தில் |
| | 200 | ஏ | எ |
| | 229 | அறுபது ஆண்டுசெய்த | அறுபதா யிரமாண் |
| | 427 | முத்தீ | முத்தி [டுற்ற |
| | 513 | யே | மே |
| | 63 | வு | யு |
| ஆரணிய | ,, | மரி | மர |
| | 139 | ற | ர |
| | 181 | முற்றும | முற்றும் |
| | 194 | லா | ல |
| | 6 | சா | ச |
| கிஷ்கிந்தா | 13 | என்றுன | எனறுன் |
| | 73 | துன்மை | நுண்மை |
| | 7 | ன்னே | ண்ணே |
| சுந்தர | 36 | பலியாக் | பலியாக |
| | 8 | பு.மை | பதுமை |
| யுத்த | 25 | யெ | எ |
| | 39 | ராமன | ராமன் |
| | 42 | பெற்றுக | பெற்றுப் |
| | 56 | வீ | வி |
| | 106 | இராண | இராவண |
| | 116 | எ | ஏ |
| | 243 | ளா | ள் |
| | 295 | சடை | கடை |
| | 301 | அனேக | அனகனே |
| | | கருணே | கருணை |



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ ஆஞ்சநேயர் துணை.

# அமிர்த ராமாயணம்

## காப்பு ஸ்துதிகள்

### சடகோபர் துதி.

ஓங்கி உலகளந்த உத்தமனின் காதையைபான்
நீங்கா தெழுத நிலத்திலே—தாங்கியெத்
தீங்கும் வராமலை சீடனைச் சடகோபா
பாங்காகக் காப்பதுன்பா ரம்.

### ஆஞ்சநேயர் துதி.

அஞ்சனை மகனாய்வந்த அண்ணலே வீரா போற்றி
பிஞ்சியி லினன்மேற் பாய்ந்த பெரிய தத்துவனே போற்றி
மஞ்சுமால் கடலைத் தாண்டும் மகாதீர சூரா போற்றி
அஞ்சலித் துணைப் பணிந்தேன் அப்பனே போற்றி போற்றி.

### ஜானகி துதி.

ஆய்மல ரமர்ந்த தாயே ஆதியே அருளே போற்றி
பேய்மக ளுயிரை யுண்டோன் பெட்புறு பவளே போற்றி
நேயமாய் அரியின் மார்பில் நீதியா யமர்ந்தாய் போற்றி
மாயவற் கிதமே சொல்லும் மாதாவே போற்றி போற்றி.

### ஸ்ரீராமர் துதி.

அண்டர்கள் ஏற்றும் ஈசா அயோத்தியில் வந்தாய் போற்றி
அண்டசன் கைகை சொற்கேள் அய்யனே துய்யா போற்றி
விண்டலர் துயரம் நீங்க வெவ்வனம் நடந்தாய் போற்றி
கண்டவர் புகழ்ரா மாவுன் கழலடி போற்றி போற்றி.

ஸ்ரீ

ஸ்ரீராம்ஜெயம்

# ஸ்ரீமத் ராமாயணம்

## பால காண்டம்

### காப்பு—வெண்பா.

மண்ணுண்ட னேபொன்னும் மற்றவைக ளும்தந்து
கண்ணைப்போல் காக்குமா கட்டிப்பொன்—மண்ணைதனில்
கண்டக ரைவெறுத்த கர்த்தன் கதைதன்னை
உண்டவர்க்கு உண்மைநிதம் உண்டு.

### நாட்டுச் சிறப்பு.

நிலமகள் தனது நல்ல நீண்முடி நடுவி லேயோர்
திலகம்போல் பொருந்தி யுள்ள திருமலர்ச் சரயு சூழ்ந்த
சலநிலை யாதுபுண்ய சாதுக்கள் தவத்தைச் செய்யக்
குலமகள் நிதமும் வாழும் கோசல்ய மென்னும் நாட்டில் (1)

அடிமுடி மலைத னைத்தான் அரசர்கள் உற்று நோக்கில்
தடியடி கையிற் கொண்டு தரணியைக் காப்ப தேபோல்
கொடிமுடி யேமரங்கள் கோர்த்துமா மணியாய் நிற்க
முடியடி நிலையா தந்த முக்கோணம் திகைப்பார் பார்த்து. (2)

முடிமலர் சேர்பெண் ணும்கொள் முன்னிலை யமர்ந்த வெண்மை
வடிவழ கன்தே கத்தில் வசுவினற் சுடர்தாக் குற்றால்
நொடியிலே களையைத் தீர்க்கும் நோக்கத்தைக் கொள்மே லான
கொடிமுல்லை சூழ்ந்த கானம் குணமாக நாட்டைக் காக்கும். (3)

கட்டும்தேன் கூடு பொங்கிக் கானகம் எங்கும் சூழச்
சுட்டதோர் மரம்பு சிக்கச் சுவையாகும் சலமே கொள்ள
நட்டநாற் றுக்கு நீர்பாய் நலமணி சாரம் பற்றத்
தட்டுவார் நாவை நித்தம் சமைத்துத்தின் பார்கள் மாதோ. (4)

வண்டுசெய் நாதங் கேட்டு வானுறை மாதர் வெட்கத்
தொண்டுசெய் ஓசைகொண்டு துன்பத்தைத் தேவர் கொள்ள
மண்ணுரை நிலைய நிந்த மன்னவர் திகைத்து நிற்கப்
பெண்ணுரை தொனியைக் கொள்ளப் பெரும்குயில் கூட்டம் காக் [கும்.

பரதனும் தனக்குப் பாட்டி பாவையர் கண்டால் வெட்கிக்
கரமதால் முகத்தை மூடிக் கானகம் மறைந்து போவாள்
பரனையே நாளும் கோறிப் பார்மீது நிலையாய் நிற்கும்
விரதமே மனதில் கொண்டு விவேகமாய் வாழ்வார் மாதோ. (6)

வயலிலே சிதறும் நெல்லை வாரியே யெடுப்போ ரங்கு
கையிற்பொன் கடகம் மின்னுங் கைவிரல் பச்சை ஆழி
பொய்யையெப் போதும் விட்டுப் பொறுமையே வாய்ந்து நின்று
மெய்நிலை தன்னை நாடி மேன்மையாய் ஆழ்ந்து வாழ்வார். (7)

## நகரச் சிறப்பு.

பெருவினை யுருமற் காக்கும் பெருமையே வாய்ந்து நின்று
அருமறை தினமே ஓத அயோத்திமா நகரில் வெய்ய
இருள்நீத்த மனமே கொண்டு இனிதுவாழ் பவர்கள் கொண்ட
அருமையைக் கூற அந்த ஆதிசே ஷனுக்கும் ஆமோ. (8)

குட்டும்குந் தும்ப ரங்கள் கொடுத்தவன் தன்னைப் பெற்ற
எட்டாத சடையில் தங்கி எவ்வுயிர் பவத்தை யெல்லாம்
சுட்டொழி சலமா துற்ற சுமைதனைத் தவிர்க்க வெண்ணித்
தொட்டுப்போ வதற்கா யாங்கு தோன்றவே ஆழ்ந்து நிற்பாள். (9)

குண்டுமல் லிகைநற் கந்தக் குங்குமந் தாரை முல்லை
சண்பகம் சூரிய காந்தி சந்திரக் காந்தி யோடு
குண்டுரோ ஜாஇர் வாகூழி குணங்கொள்செவ் வலரி யின்பக்
குண்டுசா மந்தி யாவும் குடையாகக் கவிழ்ந்து நிற்கும். (10)

அலையுறும் குடுமி யந்த அயோத்திமா கலசம் தன்னில்
மலையைநோக் கிடவாள் மன்னர் மரகதப் பச்சை தோற்ற
நிலையாகப் படிமேல் நின்று நெடுநேரம் உற்றுப் பார்த்து
இலையாரும் மரத்தைக் கண்டு ஈதென்ன புதுமை யென்பார். (11)

அங்கத்தி லரனுல் முன்னம் அழிந்தவன் தேவி கண்டால்
அங்கனம் மறைந்து தன்நல் அழகையும் வெறுத்துப் போவாள்
பொங்கியே வீழியு மன்னன் பொறுமையைக் கண்டு வெட்கப்
புங்கனுல் புகழத் தக்க புருடனைப் போற்றி வாழ்வார். (12)

வழிதனில் கிடைக்கும் பொன்னை வளைந்தெடுப் பவர்க ளைத்தான்
விழியில்கண் டால்தி கைக்க விலைபெறும் முத்தைச் சூடி
அழிவிலாப் பதவி யைத்தான் அடையுமோர் பயனைத் தேடி
மொழியும்தப் பாமல் நின்று முதல்வியோ டினிது வாழ்வார். (13)

நீரோடி மாத ராட நீங்காது தினமே யங்கு
வேரூறி மரமே கொண்டு விழுதுடன் தழைத்து நிற்கத்
தேரோடி வருமா தித்தன் தீண்டாவே புவியில் பொன்னும்
காரேகிப் படுவ தாகக் கண்டவர் ஓடி நிற்பார். (14)

முடிகோத தூபம் காட்ட முகிலைப்போல் நகரில் சூழப்
பொடிசிந்த வாயுக் கொள்ளப் புகைநனி கலந்து போகக்
குடிநீரும் மணம ளிக்கக் குணமான பனியே பெய்ய
முடிமன்னர் தினமே சேர மூதிரம் நோக்கி நிற்பார். (15)

கோட்டைச் சிறப்பு.

கடலினை யகழி யாகக் கமலமே சூழ்ந்து நிற்கப்
படியினைப் படிக மாக்கும் பன்னீரைப் பழிக்கும் நீராம்
கொடியினைப் பாரி ஜாதம் குணமான மலரே சூழச்
சடையிடம் தினமே யங்கு சபைகூடிப் பாடிநிற்பார். (16)

நீலக்கண் ணுடி வைக்க நிலத்தினில் படிக மின்ன
சோலைகள் சூழ்ந்தி லங்கச் சுழன்றுநற் சிலைகள் நிற்க
மாலையம் பொழுதி லங்கு மன்னவர் வருவா ராகில்
மூலைக்கு மூலை ஓடி முகம்வாடித் திகைத்து நிற்பார். (17)

மயிலெழில் கண்கள் கொள்ளும் மாளிகை வரிசை யாகக்
குயிலன்றன் பெரிய லோகம் குறைவெனக் கூற அங்கு
பயிலுடை சாலை யோடு எழுமிச்சை சோலை யார்ந்து
குயிலுடை மொழிகொள் மாதர் குணமாகப் பாடி நிற்பார். (18)

தினம்தினம் அங்கு வந்து திறைகட்ட மன்ன ரெல்லாம்
கனமான ஓசை தானும் காதுகள் செவிடா யார்ப்பத்
தனதன வான்க ளெல்லாம் தருமத்தை வியந்து நோக்க
வனம்உறை மக்கள் நாளும் வணங்கியே வாங்கிப் போவார். (19)

பெரும்உரை மனுவின் சொல்லைப் பெருமையாய்க் கொண்டு நின்று
கருவறுத் துத்தீ யோரைக் கமலம்வாழ் அன்னத் தைப்போல்
கருப்பினி யணுகி டாது கதிரவன் குலத்தில் வந்தோர்
தருமத்தைத் தவறி டாமல் தரணியை ஆண்டு வந்தார். (20)

### தசரதன் கதை.

அசனுக்கு மகவாய்த் தோன்றி அருங்கலை உணர்ந்த காலை
கௌசலை யென்னு மாதைக் கவின்பெற மாலை சூட்டி
அசைகொடி எங்கும் நாட்டி அரசர்க்கு மரச னாகித்
தசைபிணி வினையு மின்றித் தாழ்விலன் செவ்வே வாழ்வான். (21)

மெய்ம்மையே கொண்ட வம்ஸம் விளங்கிடு மாற்ற லோடு
கைகேயை மணந்து பின்னர் கருத்தினில் குறைகள் கொண்ட
செய்கையால் யாகஞ் செய்யுஞ் செய்வினை முடித்துத் தீரன்
பொய்மையே விடுத்து மேன்மை பொருந்தியே வாழ்ந்த நாளில் (22)

திமித்தவ னடிக்க வோடித் தேவர்கோன் மனங்கள் வாடித்
துமித்திகழ் முகத்த னாகிச் சுறுவையே வொருங்கு கூடிச்
சுமித்திரை கேள்வ னுவான் றொல்லர சவனே யென்னச்
சமித்திடு விமான மேறித் தசரதன் முன்னே நின்றான். (23)

மன்னவ னிறங்கி வந்து மனம்போலத் தழுவிக் கொண்டு
துன்பமே யொழிந்த தென்று துரிதமாய்ப் பீடம் தந்து
அன்புட னிங்கு வந்தாய் அரசனே யேதோ நீதான்
ஒன்றுமே கவலை கொள்ளா துரைசெய்வா யுண்மை யென்றான்.

### இந்திரன் தசரதனுக்குச் சொல்வது.

தசரதா உனது வீரம் சகலரும் சொல்லக் கேட்டு
விசையாக இங்கு வந்தேன் வேந்தனே உன்னைக் காண
அசுரர்கள் செய்யுந் துன்பம் அறையவும் முடியா திப்போ
வசமாக நீயே வந்து வானோரைக் காக்க வேண்டும். (25)

### தசரதர் இந்திரனுக்குச் சொல்வது.

அற்பமாம் பலமே கொண்டு அயோத்தியை யாளு மென்னால்
நிற்கவும் முடியு மோதான் நிலைபட வில்லை யன்றோ
கற்றதாம் வில்தி றத்தைக் கசடர்முன் காட்டி னாலும்
சற்றேனும் பயனே யாமோ சாந்தனே யோசிப் பாயே. (26)

### இந்திரன் தசரதனுக்குச் சொல்வது.

குடைவளர் தரவே யிந்தக் குவலய மெங்கும் போற்ற
நடைவளர் சிரேஷ்ட னாக நவலோகம் புகழப் பெற்றாய்
படைவளர் கையில் கொண்டு பலமோடு வாழு மிங்கு
முடிவளர் மன்னா உன்னால் முடியாத வினையு முண்டோ. (27)

### தசரதன் இந்திரனுக்குச் சொல்வது.

குடையோடு வாழு மன்ன குணத்தையே கண்டே னிப்போ
கொடியோடு நானே வந்து கோரிய படியே அங்கு
படையோடு நின்ற போதும் பாணங்கை சலியா தேவ
அடியோடு மண்ணில் தள்ளி அல்லலை யொழிப்பேன் கண்டாய்.

இந்திரன் அரசை வாழ்த்தி இருடியின் விடைகள் பெற்றுச்
சுந்தர விமான மேறிச் சுறுக்காய்த்தான் சென்ற பின்பு
தந்திர மாய்அ ரக்கர் தம்மையே ஜெயிப்ப தற்கு
மந்திரி தன்னோ டங்கு மன்னன்யோ சித்தான் மாதோ. (29)

### தசரதன் வைஜயந்தம் சென்றது.

வையகம் புகழும் வேந்தன் வைஜயந் தம்பா கத்தான்
கைகேயை யழைத்துக் கொண்டு கண்டக ரிடமே சென்று
கையினில் வில்பி டித்துக் கரையாத மனதே கொண்டு
செய்யும்யுத் தத்தைக் கண்டு தேவர்கள் களிகூர்ந் தாரே. (30)

அசுரரை அதமே செய்து அண்டரால் புகழும் பெற்றுத்
தசரதன் நகரை நாடித் தனிமையாய் வருகும் போது
அசுரர்செய் யுத்தம் தன்னில் அணுவேனும் இடர்நே ராமல்
வசமாகக் காத்த வர்க்கு வரத்தையே கொடுக்க வெண்ணி. (31)

### தசரதன் கைகேசிக்குச் சொல்வது.

பேயரால் சோர்ந்த என்னைப் பேருயிர் அழியா வண்ணம்
தாய்போல வந்தெ டுத்த தருணத்தில் காத்த தாலே
காயகச் செல்வ நங்காய் கைகையே வரமு னக்கு
வாய்மொழி தவறி டாமல் வஞ்சனை யின்றித் தாரேன். (32)

### கைகேசி தசரதனுக்குச் சொல்வது.

கொடுத்திடும் வரங்க ளைநான் குணவானே கேட்கும் போது
தடுக்காமல் தருவா யிந்தத் தருணத்தில் ஒன்றும் வேண்டாம்
இடுக்கங்கள் வருங்கா லத்தில் இவ்வரம் மறந்தி டாமல்
நடுநிலை தவறா வண்ணம் நாதனே கொடுக்க வேண்டும். (33)

கைகேசி சொல்லைக் கேட்டுக் கல்லென நகைத்து மன்னன்
தயவோடு தழுவி யந்தத் தருணமே முத்தம் தந்து
அயோத்திமா நகரைச் சேர்ந்து அசுரரை ஜெயித்த தற்கு
உயர்கொடி தன்னை நாட்டி உரமுடன் ஆண்டு வந்தான். (34)

### தசரதன் எக்கியதத்தன்மேல் பாணம் தொடுப்பது.

கானகம் சென்று வேந்தன் கடூரமாய் விலங்கைக் கொன்று
தானுமே திரும்புங் காலை ஜலம்சாது மகன்கைக் சேந்த
யானையின் குரலைப் போல அங்ஙனம் செவியில் கேட்க
மானவன் மார்பின் நேராய் மன்னவன் பாணம் விட்டான். (35)

தசரதன் பாணம் பட்டுத் தவமுனி மகனும் வீழ
விசையாக மன்னனோடி விழுந்தவன் தன்னைக் கண்டு
வசமாகக் கட்டிக் காத்தும் வையகம் விடுத்துப் போக
அசையாது சற்று நின்று அங்கன முனியைக் கண்டான். (36)

### தசரதன் எக்கியதத்தன் தந்தைக்குச் சொல்வது.

தவசியின் சேயின் மீதென் தனுவுமே பட்டு அன்னோன்
புவனத்தை விட்டுச் சென்றான் புண்ணியா பொறுப்பா யென்னச்
சவம்போலப் புளியில் வீழச் சாதனை யாமல் நின்று
பவத்தையே செய்தோன் தன்னைப் பலவாறு வைதான் மாதோ. (37)

### தசரதன் சாபம் பெற்றது.

தள்ளாத வயதில் நானும் தாரணியில் கண்ணூறு மற்றுப்
பிள்ளையை நம்பி நிற்கப் பேதைபோல் செய்தா யல்லோ
உள்ளமும் உருகு திப்போ துனக்கிது போல நாளை
பிள்ளைதான் உதவா னென்று பிடிப்போடு கூறி மாண்டான். (38)

### தசரதன் செயல்.

தவசியின் சொல்லைக் கேட்டுத் தசரதன் வாடிநின்று
இவ்வாது சொல்லால் ஐயோ இடர்வந்து சூழு மென்று
நவமணி முடியும் சோர்ந்து நகர்வந்து வசிஷ்ட னுக்குப்
பவுத்தின்துற் செயலைக் கூறிப் பலவாறு துக்கப் பட்டான். (39)

வரும்வினை தன்னைத் தாண்ட வையகத் தெவரா லாகும்
தருணத்தில் யாகம் செய்தால் தடையின்றி நீங்கு மென்னக்
குருவின்வாய் மொழியைக் கேட்டுக் குறைவின்றி ஓமஞ் செய்து
தருமத்தை விடாது நின்று தரணியை ஆண்டு வந்தான். (40)

அறுபது ஆண்டாய் மன்னன் அனேகயா கங்க ளோடு
அறத்தையே செய்து வந்தும் அருமக னிலாத தாலே
பிறந்தது வினை என்று பெருந்துயர் மனதிற் கொண்டு
துரவியின் பாதம் போற்றித் தடிக்கவும் தேக மெல்லாம். (41)

### தசரதன் வசிஷ்டனுக்குச் சொல்வது.

அரசனுக்கு மகனாய் வந்து அனேகநா ளரசை யாண்டும்
தசரதன் நாமம் சொல்லித் தரணியை யாள்வார் காணேன்
வசிகர மொழிந்த தாலே வைத்தியன் வாழ்வை நீக்கி
நிசமாகத் தவத்தைச் செய்ய நிலையுடன் எண்ணங் கொண்டேன்.

பிள்ளைகள் பெறாத வர்க்குப் பெருகிடும் நரக மென்று
உள்ளத்தில் நினைக்கும் போதே உருகுதே நெஞ்ச மையோ
தள்ளாத வயதும் ஆனேன் தவசியே எனக்கிப் போது
பிள்ளைகள் பிறக்கு மோதான் பேதைக்குச் சொல்லு வீரே. (43)

வாழைதான் வாழை யுண்டு வான்பனை கருப்பே யுண்டு
தாழைக்கும் மணமும் உண்டு தகவுநீர் தென்னைக் குண்டு
வாழவே வந்த வர்க்கும் வல்வினை பற்றிக் கொள்ள
ஆழிய துயரந் தன்னால் அலையுதே நெஞ்ச மையோ. (44)

மரபுதான் விளங்கா தென்று மாமுனி யெனக்கு முன்னே
பெரியவ ருரைத்தி ருந்தால் பெரும்பாரத் தைக்கொள் ளாது
அரசையும் அன்றே விட்டு அடவியே சென்றி ருப்பேன்
மரமது எட்டி யைப்போல் மண்ணுக்குப் பார மானேன். (45)

இரவோடு பகலு மாகி இதனையே கவலை கொண்டு
அரசையா ளுள்வ தற்கு அய்யரே மனமே யில்லை
இரவுடன் பகலும் போக இங்ஙனம் வனமே சென்று
வரந்தனைக் கொடுக்கு மந்த வரதனை யேத்த நின்றேன். (46)

### வசிஷ்டன் தசரதனுக்குச் சொல்வது.

ஆகமம் தேடிக் காணு ஆதியும் வினைக்குள் ளாகில்
சோகத்தை விடுத்திப் போதே சொல்வதைக் கேளு மன்னா.
தேகத்தில் பலந்தான் வேண்டும் தெரிதவம் செய்வா யாகில்
யாகத்தால் குறைகள் தீரும் ஆயாசம் கொள்ள வேண்டாம். (47)

### மந்திரி தசரதனுக்குச் சொல்வது.

நகர்வலம் வருகும் போது நான்குமா ரிஷிகள் கூடி
முகமலர்ந் தாங்கன் னோர்கள் முடிவாகச் சொல்லிக் கொண்டார்
மகவ்ரசை கொண்ட மன்னன் மகம்முனி வரரால் செய்தால்
ஜெகமது புகழத்தக்க செல்வனை யடைவா னென்றார். (48)

### வசிஷ்டர் தசரதனுக்குச் சொல்வது.

கலைக்கோட்டு முனியை நீதான் கண்டழைத் திங்கு வந்தால்
நலமாக யாகந் தன்னை நடத்தியே வைப்பார் பின்பு
உலகினில் புகழத் தக்க உத்தம மகாரைப் பெற்றாக்
குலமது அழியா திந்தக் குவலயம் அவர் ஆள்வாரே. (49)

இருடியின் சொல்லைக் கேட்டு இருள்நீத்த மனதோ டேகி
பெரும்வினை யெல்லாம் போகப் பெரும்படி நின்று போற்றத்
தருமத்தை விடாத மன்னன் தரணியில் புகழ்பெற் றோங்கத்
துரிதமாய் மந்த்ரி சென்று துறவியை யழைத்து வந்தான். (50)

அரசன்வே கமதாய்ச் சென்று அவரடி தொழுது நின்று
குருதனக் குரைத்த வண்ணம் குணமாகப் பூசை செய்து
வரத்தையே யளிக்க வந்த வரமுனி தன்னைப் போற்றிக்
கரத்தையே கூப்பி நிற்கக் காரணம் சொல்லு மென்றான். (51)

### தசரதன் கலைக்கோட்டு முனிக்குச் சொல்வது.

பெரும்புகழ் எங்கும் பெற்ற பெருமையை யிழக்க வேநான்
மரபினில் பிறந்த தோஷம் மகவற்று நின்று விட்டேன்
அரசுமே அழியா வண்ணம் அண்டினோர் தம்மைக் காக்கும்
விரதத்தைக் கொண்ட மிக்கோய் வினையைநீர் ஒழிப்பீர் என்றான்.

### கலைக்கோட்டுமுனி தசரதனுக்குச் சொல்வது.

சடையினில் வதியும் கங்கை சாந்தனே சிறுக வோடிக்
கடலினிற் பாய்வ தாகக் கண்டேன்நா னுமத றத்தைத்
தலையினி செய்யா திப்போ தசரதா யாகஞ் செய்தால்
முடிவுறக் கூடும் மேலாம் முகங்கொள்மக் களுழ திப்பார். (53)

### தசரதன் செயல்.

இடைநீள மன்க ளிக்க இருடிகோ டகனை நோக்கி
முடியாட முகம்வி ளங்க முத்தாரம் மார்பில் துள்ள
உடைதளர் தரவே யாடி யுடல்குலுங் கிடந கைக்க
சடைவிழுந் துருளச் சாது சனர்ஆசீர் வாதஞ் செய்தார். (54)

புண்ணியன் யாகஞ் செய்யப் புகழுமந் திரித்துச் சொல்ல
கண்யமாய் உடனே சென்று கருதின விதம்மு டிக்க
விண்ணவர் மனம் களிக்க விடாமலெ மழும் வளர்த்த
குண்டல மணிந்த பூதம் கொடுத்ததோர் கலசம் பெற்றான். (55)

2

பாதிகோ சலைக்குத் தந்து பாதியை இரண்டாய்ச் செய்து
நீதியாய் கைகைக் கொன்றும் நின்றபிச் சத்தை முற்றும்
காதலி சுமித்தி ரைக்குக் கனமாகக் கொடுக்கப் பெற்று
நாதன்பா தம்ப ணிந்து நங்கையர் சென்றா ரம்மா. (56)

பகவான் அவதாரம்.

மலையிலங் கேசற் கொல்ல மன்னவன் இந்தி ரன்தான்
கலைமகள் கமல ளோடு கரியமால் தன்னை யேற்ற
அலையாது பொறப்பீர் சற்று அயோத்தியின் செல்வ னாவேன்
கொலையறத் வேதரே நீர் குரங்கின மாகு மென்றான். (57)

கௌசலை ராமன் றன்னைக் களித்தளித் தாள்கை கேசி
திசைபுகழ் பரதன் றன்னைச் சிறப்புடன் பெற்றாள் மற்றும்
சுசிபெறு மிலக்கு வன்சத் துருக்கனைச் சுமித்ரை யீந்தாள்
தசகண்டன் மாண்டா னென்று சகலரும் சந்தோ ஷித்தார். (58)

தாதி தசரதனுக்குச் சொல்வது.

சித்திரை புனர்பூ சத்திற் சிறந்ததோர் நவமி தன்னில்
உத்தமி கோச லைக்கு உதித்தனன் செல்வ னென்று
பத்தியா யெடுத்துச் சொல்லப் பார்வேந்தன் மனம்ம கிழ்ந்து
முத்தாரம் கொடுக்க மற்றும் முச்சேய ருதிப்புஞ் சொன்னாள். (59)

தசரதன் செயல்.

பிறந்த நற்பலன் எனக்குப் பிரியமாய் வாய்த்த தின்று
அறக்தையென் மனம்போல் செய்து அலங்காரம் செய்வா யென்
துறவியின் சொல்லைக் கொண்டு துரிதமாய் நகர மெங்கும் [னத்
சிறப்பாக ஆழ்ந்து செய்யச் சேனையை அழைக்க விட்டான். (60)

சுமித்திரன் செயல்.

கொடிக ளெங் கும்ப றக்கக் கோபுரம் தீபம் நாட்டிப்
படிகள்தோ றும்பொற் றென்னை பலாவாழை களையும் நாட்டிக்
குடிகளின் வரியை நன்கு குறைத்துமே விடுவ தோடு
கடைகளை மூடு தற்குங் கட்டளை செய்தான் மந்த்ரி. (61)

மனம்போல அழகாய்ச் செய்ய மக்களும் மகிழ்ந்து கேட்டு
வனத்தில்வே கமதாய் ஓடி வாழைநற் கமுகு தென்னை
இணமான காய்க ளோடு இலையுந்தோ ரணமும் கட்டிச்
சனைநா ளைக்கொண் டாட சன்னதி யாவும் சென்றார். (62)

திடுதிடு திடுவென் றார்ப்பத் திருவீதி பறைகள் சாற்றக்
குடுகுடு குடுவென் றேயக் குடிமக்க ளோடி வந்து
விடுவிடு விடுவென் றோதி வேகமாய் மேல்வீழ்ந் தோடிக்
கொடுகொடு கொடுவென் றேங்கும் கோஷ்டத்தைச்
[சொல்ல வாமோ. (63)

ராமலெக்ஷ் மணசத் ருக்ன ரம்மிய பரதன் கூட
ஓமமும் தான முற்றும் ஒண்மையா யரசன் செய்தே
சேமமும் செயமு மோங்கச் செம்மைஜா தகமும் தீட்ட
நேமமாய் வசிஷ்டன் தன்னை நேமித்தா னுய்ந்து மாதோ. (64)

சாதகம் தன்னைமு டித்துச் சகலமும் எடுத்தே யோத
வேதனை யொழிந்து மன்னன் வெகுவாக அவரைப் போற்றி
வேதியர்க் கறுசு வைசேர் விமரிசை அன்ன மிட்டு
நீதியாய்த் தானஞ் செய்து நிலையான மனமே கொண்டான். (65)

புவியில்பே யரையொ ழிக்கும் புண்யரா மன்த னக்குப்
பவளத்தால் கால்கள் நாட்டிப் படிகமே டையைய மைத்து
நவமணி தொட்டி விட்டு நன்முத்து வரிசை சூழத்
தவமுனி வன்றே டேகித் தசரதன் சேயைக் கண்டான். (66)

தாதிகள் செயல்.—(வேறு)

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ
ஈராறு யாயிரத்தாண் டிறையோனும் செய்தவத்தில்
ஊராள மனமகிழ்ந்து உத்தமனே வானகராம்
ஏரான நிலையில்நின் றும் இறங்கிவந்தா யாராரோ. (67)

கண்ணும்செங் கமலம்எங்கள் கர்த்தனே கண்ணுறங்காய்
மண்மீது தவத்தில்வந்த மாமணியே ஆராரோ
கண்டவர்ம னதைக்கொள்ளும் காயாம்பூ ஆராரோ
கண்யமாய்ப்பு கழிஞேங்கும் காகுத்தா ஆராரோ. (68)

வேதமோர் நான்குமெய்ம்மை விளங்கும்சாஸ் திரமாறும்
கீதமே செய்யவந்த கிள்ளையே ஆராரோ
வேதனைக்கூற் றைத்தீர்க்க வேந்தன்றன் அறத்தில்வந்த
நாதனேகிட் டாத்தேனே நாடாள்வாய் கண்ணுறங்காய். (69)

### தசரதன் வசிஷ்டனுக்குச் சொல்வது.—(வேறு)

கண்ணிரண் டாலு மிந்தக் காயாம்பூ வண்ணன் சீரை
மண்ணுள்ள வரையும் என்னால் மாதவா சொலமா ளாது
புண்ணிய செயலா யிப்போ பொல்லாத வினைபோ யிற்று
கண்யத்தை யடையச் செய்த காருண்ய நிதியே போற்றி. (70)

### வசிஷ்டன் தசரதனுக்குச் சொல்வது.

அறுபதா யிரவாண் டாக அனேகயா கத்தைச் செய்து
பிறந்தசேய் அழுகை யந்தப் பிரமனும் கூற வாமோ
கறந்தகோ சலையின் நல்ல கர்ப்பம்வை குந்த மாகும்
அறந்தனைச் செய்து கெட்டோர் அவனியி லுண்டோ மன்னா. (71)

வரமுனி சொல்லக் கேட்டு வரத்தையெண் ணிப்பூ ரித்துக்
கரத்தினால் தழுவிச் சேயை கன்னத்தில் முத்தந் தந்து
இரவுநற் பகலும் அன்பார் இராகவன் தன்னை நீங்க
அரசன்மா மனம்வ ராமல் அடிக்கடி பார்த்துப் போவான். (72)

ஒளிதரும் கலிக்கி தூராய் ஒண்மையாய் முடியி லாட
வளமான பதக்க மின்ன வஜ்ஜிரத் தாழி மின்னத்
துளசிபோல் பச்சை நாட்டித் தொடுத்தநன் மாலை யோடு
இளையோனை விட்டு நீங்கா திராமனும் வாழ்ந்து வந்தான். (73)

### ஸ்ரீராமன் செயல்.

வழியில்கூ னியையே கண்டு வரதன்வில் லுண்டை வீச
அழுதோடி-க் கைகை யின்பால் அடித்ததைக் காட்டி நொந்த
மொழியைக்கேட் டுச்சி ரித்து முதல்வனைக் கண்டு வாரித்
தழுவியே முத்தம் தந்தேன் தாதியை அடித்தா யென்றாள். (74)

### ஸ்ரீராமன் கைகேசிக்குச் சொல்வது.

எல்லோரும் நிமிர்ந்து போக ஏனிவள் வளைவ தென்று
மெலல்வில் லால டித்தேன் மேலாக நடப்பா ளென்று
கல்லென நகைத்துக் கைகை கலகும்மந் தரையைத் தேற்றிச்
செல்வனை மடியில் வைத்துச் சிலைபோலப் பார்த்தின் புற்றாள். (75)

விட்டான்கோன் வசிஷ்டன் பக்கம் வித்தைக்காய் மகாரை யெல்
திட்டமாய் மறைகள் நான்கும் சிறுவரும் கற்றுத் தேர்ந்தார் [லாம்
சட்டமாய்ச் சடங்க ளைத்தும் சாந்தனும் இனிது செய்து
கட்டியே காத்து வந்தான் காகுத்தன் தன்னை அம்மா. (76)

அண்டர்தம் துயரம் தீர அயோத்தியில் வந்த செல்வன்
கண்டவர் மனங்க ளிக்க கையிற்கோ தண்ட மேந்தி
மண்டலத் தவரைக் காக்கும் மதிப்பொடு விளங்கப் பண்சேர்
வண்டுறை மாலை மார்பன் மங்களம் பெருக நின்றான். (77)

கௌசிகன் அயோத்தி வருதல்.

தவசியின் யாக மெல்லாம் தாடகை கெடுக்க வாடிப்
புவனத்தில் வந்து தித்த புண்ணியன் தனைநி னைந்து
பவசெயல் கடந்த நற்று பதனுமே அயோத்தி சேரத்
தவமுனி தன்னை டேகித் தசரதன் பணிந்தான் மாதோ. (78)

புரமெல்லாம் புகழ்பெற் றேன்யான் புண்யநின் வரவா லென்று
வரமுனி தன்னை மெத்த வாயாரத் துதியும் செய்து
துரிதமாய்க் கொண்டு சென்று தொழுதடி பீடம் தந்து
கரமதைக் கூட்டி நின்று கருணையுள் ளம்மே கொண்டு. (79)

தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

அற்பனேன் வாழும் சின்ன அயோத்திமா நகரி டத்து
முற்றுமே துறந்தோய் வந்தாய் முடிந்ததென் தவமு மின்று
விற்பிடி என்னைக் கோறி வேகமாய் வந்த நோக்கம்
சற்றுமே கவலை யின்றிச் சாற்றுவீர் விளங்க ஐயா. (80)

கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

சொன்னசொல் தவறு வேந்தே சுகமோநீ நீழி வாழ்க
மன்னரில் உனக்கொப் பாவார் மண்டலம் தன்னில் இல்லை
இன்னலை யொழிக்க வெண்ணி இங்குற்றேன் கவலை வேண்டாம்
நின்றது போது மன்னா நிலையிரு குறை சொல்வேனே. (81)

தாடகை யெனுமா ரக்கி தவசியின் யாக மெல்லாம்
தேடியே கெடுத்து வாராள் தேசேந்த்ரா யேது செய்வேன்
நாடிய துயரம் தீர்க்கும் நாதனிங் கிருப்ப தாலே
ஓடியே வந்தேன் உன்பால் உதவிநீ செய்ய நிற்பாய். (82)

தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

கனத்தையும் பெற்றே னின்று காதியின் மகனே உன்னால்
வனத்தினில் வேட்டை யாடி வருஷமு மனேகமாச்சு
கனமான சேனை கொண்டு கானத்தி லவளைக் கொன்று
உனதுயா கத்தைக் காக்க உடனேநான் வருவேன் என்றான். (83)

கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

அந்தத்தா டகையைக் கொல்ல ஆகாது உன்னால் ஐயா
எந்தன்மெய்த் தவத்தி னாலும் இயலாது சபிக்க அந்தோ
அந்தமா ரிசன்சுபாகு அழியவும் மார்க்க மில்லை
வந்துள்ள வீர னாலே வலிமைசார் அரக்கர் மாய்வார். (84)

தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

இரங்கியே வந்த வீரன் எனது தேசத்தி ருப்பின்
வரவழைத் தவனை யிங்கே வனத்திலும் போட னுப்பி
அரக்கியோ டசுரர் தம்மை அதோகதி யாகக் கொன்று
விரதமு முடிப்ப துண்மை விபரந்தைச் சொல்லு வீரே. (85)

கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

அலைகடல் துயின்ற ஈசன் அண்டர்கள் போற்றி செய்யத்
தொலைக்கவே யரக்கர் பூண்டைத் தோன்றினன் தரணி தன்னில்
மலைநிகர் கொடியா னைநின் மகன்ராமன் கொல்வா னென்று
அலைந்தோடி யிங்கு வந்தேன் ஐயனைத் தருவாய் வேந்தே. (86)

தவசியின் சொல்லைக் கேட்டுத் தசரதன் திகைப்பு கொண்டு
சவம்போல உடனே சாய்ந்து சற்றசை யாது நிற்க
சவிதாவின் குலம்வந் தோனைச் சரிசெய்து மந்த்ரி தேற்றத்
தவசியை யுற்றுப் பார்த்துத் தளர்ந்தவுள் ளத்தைக் கொண்டு. (87)

தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

பாலருந் திடுமிப் பாலன் பதகிதா டகையைக் கொல்ல
காலமோ ? எனக்குச் சொல்வீர் காதியின் மகனே மற்றும்
மாலையாம் பொழுதி லங்கு மலைவாழும் விலங்கைக் கண்டால்
பாலனும் பிழைப்பா னோதான் பதறுதே யுள்ள மையோ. (88)

கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

வாடியே யழுவ தேனோ வானவர் தேவ னுக்காய்
தேடியே வந்தேன் கண்டாய் தேவரைக் காத்தோ னென்று
தாடகி மக்கள் தாமும் தருவதால் துன்ப மங்கு
நாடினால் ராமன் முன்பு நமனூரைச் சேர்ப்பான் மன்னா. (89)

தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

யானைகள் பிளிரி யக்கால் அங்கனே தாய்பா லோடி
கூனிபோ லொடுங்கும் செல்வன் கொடியாளை எங்கன் கொல்வான்
கானகம் வாழு மந்தக் கள்ளமா ரிசன்சு பாகு
சேனையோ டெதிர்த்து நின்றால் சிறுவனும் தப்பு வானோ ! (90)

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

யானை கர்ச் சிக்கக் கேட்டு அஞ்சியே யொடுங்கும் அந்த
மானவன் தேவர்க் காய்முன் மந்தர கிரிசு மந்தான்
கானகம் வாழு மந்தக் கண்டகி நிகரோ சொல்லும்
சேனையோ டெதிர்த்த போதும் சிறிது மஞ்சாது கொல்வான். (91)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

விற்பிடித் தறியாப் பாலன் மீண்டரை யெதிர்ப்ப தெங்கன்
சற்றுமே யிரக்க மின்றிச் சாதுவே கேட்ப தென்னே
பற்களும் விழாத மைந்தன் பதகியைக் கண்டால் மீளான்
பெற்றவள் ஒப்பமாட்டாள் பின்னாக அனுப்பத் தானே. (92)

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

விற்பிடித் திடுமு னக்கு விளங்காது ராமன் மேன்மை
புற்பிடித் திடும்நா னன்றோ புங்கனுய் மதித்து விட்டேன்
பற்களும் விழாத அந்தப் பாலற்கு பலமோ மிக்க
முற்றமே துறந்தோ ரந்த முதல்வனை யறிவார் மன்னு. (93)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

ஆயிர மறுப தாண்டும் அடைந்தயா கத்தால் பெற்றேன்
பேயர்பா லவனைப் போக்கப் பேதைநெஞ் சுருகு தையோ
மாயஞ்செய் யரக்கி யென்றன் மைந்தனை மோசம் செய்தால்
காயமோ டுயிர்வாழ்வேனோ காதிபுத் திரரே சொல்வீர்.

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

எனக்குநேர் பகைமை யான இக்ஷ்வாகு குருவைக் கேட்டாய்
உனக்கொரு பயமுமின்றி உடனேநீ அனுப்பு மையா
கனல்போல் எதிர்வந் தாலும் கலங்காத மனந்தோ டேகித்
தினகரன் கொல்வா னென்று தீரமாய் நம்பு வாயே. (95)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

கோரமாய்க் கானில் வாழும் கொடியதா டகையே இந்தப்
பாரினில் அவள்தா னென்ன பலமும்பெற் றவள்நீர் சொல்லும்
வீரத்தஞ் சாது ராமன் மிரண்டரை மண்ணில் தள்ள
தீரந்தா னுண்டோ வென்று தெரிந்துகொள் முனியே யென்றன்.

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

அற்பமோ அவனின் வன்மை ஆயிரம் கரியை நேரும்
முற்றிலும் நோக்க ரூபம் முக்கூடல் கார்மே ரொவ்வும்
பெற்றதோர் மகனுக் கந்த பேய்களோ நிகரா கார்கள்
குற்றங்கள் வராது சேர்ப்பேன் கொடுப்பதுன் பாரம் மன்னா. (97)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

வலிமையோ சித்தி டாமல் வரத்தினால் பெற்ற சேயை
நலமோகேட் பதுநீர் சொல்லும் நாட்டையும் வெகுநாள் ஆண்டிடு
மலைதனை நகத்தால் பேர்க்க மகனையான் தரவே கேட்க
அலையுதே யெந்த னுள்ளம் ஐயோநா னேது செய்வேன். (98)

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

கண்ணிமை தட்டு தற்குள் காயாம்பூ வண்ண னிந்த
மண்ணொடு விண்ணும் சேர்த்து மன்னவா உண்பான் கண்டாய்
அண்டர்கள் துயரம் நீர்க்க அயோத்திவந் தவனுக் கந்த
கண்டகி நிகரோ சொல்லும் கலவரம் வேண்டாம் மன்னா. (99)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.—(வேறு)

கண்ணிமை தட்டு தற்குள் காகுத்தற் காமோ இந்த
மண்ணொடு விண்ணும் சேர்த்து மாதவா உண்ப தற்கு
விண்ணவ ரேற்று மந்த விமலனார் தனக்கே யல்லால்
மண்ணிலென் தவத்தில் வந்த மகன்றன்னா லாமோ ஐயா. (100)

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

வேதங்க ளிழைத்த மணி விதவிதமாய் நின்ற மணி
சோதியாய்த் துலங்கு மணி சுந்தரமாய் வந்த மணி
ஆதியாய் விளங்கு மணி அடைந்தவரைக் காக்கு மணி
ஓதமுடி யாத மணி உமக்கு தித்த திருமணியே. (101)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.—(வேறு)

காரிய முடிய வெண்ணில் காதியின் மகனே கேளும்
பாரில் மற்றோரை வாழ்த்திப் படிப்பது மியற்கை யன்றோ
வீரமா யெதிர்த்து நின்று விடாமற்பேய் களைப்பே கொன்று
பாரத்தைத் தீர்க்கும் வன்மை பாலனுக் கிலையே ஐயா. (102)

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

அலைகடல் வற்றச் செய்வேன் அண்டத்தைக் கவிழ்க்க வல்லேன்
மலையெனும் இமயந் தன்னை மனம்போல நடக்கச் செய்வேன்
உலகையே படைத்த வன்தன் உண்மையை யுரைத்து மின்னும்
குலமதின் அறத்தை விட்டுக் கோசிகன் தன்னையி கழ்ந்தாய். (103)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

கௌசிக முனியே உம்மால் கடியதா டகையைக் கொல்ல
இசையாது விட்ட போது இராமனே எதிர்ப்பான் கண்டாய்
தசரதன் நிலைமை கண்டுக் கருமமோ முனிவு கொள்ள
சிசமாக நானே வந்து நேரில்தா டகையைக் கொல்வேன். (104)

### கௌசிகன் செயல்.—(வேறு)

மண்ணதிர முகங்கருக மன்னவனும் பயந்துநிற்க
கண்ணிருள உடல் துடிக்க காதுகளில் புகை வரவும்
விண்ணதிர முகில்ஓட மீனுதிர இந்திரன் றன்
தண்ணதிர சபைஅஞ்சத் தசரதனுந் தனைநோக்க. (105)

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.—(வேறு)

சத்தியவா னென் றன்னை சாற்றவும் முடியா தந்தோ
முத்திநல் கிடுந்தெய் வத்தை முகங்கரு கிடச்சே யென்னப்
பித்தம்கொண் டலைய நின்றய் பேதைபோல் மதியாய் சுற்றம்
புத்திர களத்ர ரோடு பொருந்தியே வாழ்ந்தால் போதும். (106)

### வசிஷ்டன் செயல்.

கௌசிகன் தனைத் தொடர்ந்த கண்மணிக் கிடர் நேராது
நிசமான வார்த்தை சொன்னேன் நிலையாவா யென்று கூற
தசரதன் மனமும் தேறித் தவமுனி சொல்லைக் கொண்டு
திசையெங்கும் புகழும்அந்தச் சேயனை யழைக்க விட்டான். (107)

### ஸ்ரீராமன் செயல்.

கோதண்டம் கரம் பிடித்து கோசல்யை விடையைப் பெற்றுப்
பாதத்தை பணிந்து நிற்கும் பாலனைத் தழுவிக் கட்டி
வேதனை யாலே வாடி வேந்தனும் தேறி நின்று
காதியின் மகன்க ரத்தில் காகுத்தன் தனைக்கொ டுத்து. (108)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

ராமனே யென்ற னாவி ராமனே யெனது செல்வம்
தாமதம் செய்தால் தாயைத் தானினைந் தழுவான் ஐயா
தீமையே தாம்நா டாமல் சேய்க்குத்தா டகையாள் தன்னால்
சேமமாய் அழைத்து வந்து சேர்ப்பதே உமது பாரம். (109)

### கௌசிகன் தசரதனுக்குச் சொல்வது.

மூவுல கொன்று னாலும் முடியாதுன் மகனை வெல்லக்
கேவல மரக்கி யிந்தக் கேசவன் முன்நிற் பாளோ
பாவமாந் தொழிலைச் செய்யும் பாதகி யிவன்பா ணத்தால்
ஆவிநீங் குவது மெய்ம்மை ஆயாசம் வேண்டா மன்னா. (110)

### தசரதன் கௌசிகனுக்குச் சொல்வது.

விட்டிரா கவனை நீங்க வேகுதென் னுள்ள மையோ
பட்டேனன் வெகுபா டிங்கு பாலர்க ளிலாமல் ஐயா
கிட்டவே யிருந்தால் சேயைக் கேட்கலாம் மழலைச் சொற்கள்
எட்டிப்போய் விடுவா னானால் எப்படி நானும் வாழ்வேன். (111)

மங்களம் பெறுவா யென்று மன்னனை வசிஷ்டன் தேற்ற
அங்கமும் குளிர்ந்து நின்று அனுப்பவே தம்பி சேர
சங்கையும் முனிவன் விட்டுத் தசரதன் தன்னை வாழ்த்திக்
கங்கையின் வழியை நோக்கிக் கம்பீர மாய்ச் சென் றனே. (112)

கனலொடு வாயு கூடிக் கண்டகி தனையொ ழிக்கத்
தினகரன் தன்னோ டங்கு தீரலக் மணனும் சேர
இனமொடு வனமே வாழும் இராக்ஷதர் மாய்வா ரென்று
மனதினில் கவலை விட்டு மாமுனி மகிழ்ந்தான் மாதோ. (113)

காயாம்பூ மேனி யெல்லாம் காணமுத் தாக வேர்வை
மாயையாம் புலிவெ றுத்த மாமுனி யிரக்கம் கொண்டு
வாயார மனம் போல் வாழ்த்தி வனத்தினில் தங்க விட்டு
ஆயாசம் தீர மந்த்ரம் அதிபலை கூற லுற்றான். (114)

திடங்கொள்லக்ஷ் மணனி ராமன் தேவன்போல் விளங்கி யங்கு
நடக்கமுன் முனிவன் பின்னே நாடித்தா டகைவாழ் கானம்
கடல்போலப் பெருகி யோடும் கங்கையை மைந்தன் கண்டு
தடை கண்ணால் பார்க்க வேதான் கதைதனைக் கூறிச் சென்றான். ()

கங்கையைக் கடந்தோ டத்தில் கானத்தில் நடந்து போக
மங்கைதா னழிந்தா ளென்று மாமுனி யுளங்க ளிக்க
புங்கனை அண்டர் கண்டு பூமாரி விடாது பெய்ய
அங்கனம் அரக்கி வாழும் அடவியைக் கண்டார் மாதோ. (116)

கௌசிகன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கொடியவள் வாழும் கானம் கோதண்டா இதுவே கண்டாய்
தொடுப்பாய்வில் லில்பா ணத்தைத் தொலைக்கவே பேயை யிங்கு
இடரையே கொடுத்து வந்தாள் எனதுயா கத்துக் கெல்லாம்
தடையேதும் கூறா திப்போ தள்ளுவாய் நொடியி லென்றான். ()

ஸ்ரீராமன் கௌசிகனுக்குச் சொல்வது.

கொடியதா டகையாள் தன்னை கோசிகா பெற்றோர் யாவர்
அடுத்துயா கத்தை யெல்லாம் அழிக்குங்கா ரணந்தா னேதோ
திடமாக எதிர்த்து நின்று சேர்க்காது எானி டத்தே
விடுத்தது ஏதோ காணேன் விபரமாய்க் கூறு மையா. (118)

கௌசிகன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தருமத்தை விடாது தந்த தசரத செல்வனே கேள்
வரத்தால்சு கேதன் றானும் வஞ்சகி தனைப்பெற் றான்பின்
அரக்கியா யவளும் வாழ அகஸ்தியன் சபித்த தாலே
இருடிகள் தமக்கெல் லாம்புன் இடரையே கொடுத்து வந்தாள்.
மண்ணினில் அவளை வெல்ல மன்னவ ரெவரு மில்லை
அண்டர்கள் யெதிர்த்த போதும் அணுவேனு மஞ்ச மாட்டாள்
மண்ணையே வெறுத்தோ ராலும் மாளாது சபிக்கக் கண்டாய்
புண்ணியன் ஒருவன் நீயே பொல்லாளை யொழிக்க ராமா. (120)

தாடகை செயல்.

வனமுறு மரமுந் தாழ வஞ்சகி வரவே வேகம்
பனியிருள் மேகம் ஓட பறவையும் மாய்ந்து வீழ
கனலெரி காதி சேயுங் கண்டகி தனையுங் காண
மனமற ராமன் நோக்க மாயமாய் மறைந்தா ளம்மா. (121)

கௌசிகன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கண்டுதான் பயந்து ராமா கானத்தில் மறைந்து விட்டாள்
விண்ணவர் களிக்க நீயும் விடாமலே யெதிர்த்துக் கொல்வாய்
மண்ணில்யா கத்தை யன்பாய் மாதவர் செய்யா நிற்பர் [டாம்.
புண்ணியா உன்னால் எங்கும் புகழ்உண்டாம் பொறுமை வேணு

ஸ்ரீராமன் கௌசிகனுக்குச் சொல்வது.

பெண்ணாக இருப்ப தாலே பிரியமே யில்லைக் கொல்ல
மண்ணிலும் புகழ்த ராது மாமுனி யேகேள் பின்னும்
அண்டர்கண் டாலு மீதை அயோத்திரா மன்தா னேயோ
பெண்கொலை செய்தா னென்று பெற்றவர் தமைப் பழிப்பார். ()

கௌசிகன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பெண்ணாக நினைக்க லாமோ பேயிலும் கொடிய பேயை
மண்ணிலும் புகழே கொள்வாய் மன்னவா இவளைக் கொன்றால்
விண்ணவர் கண்டா ரானால் வீரனால் ஒழிந்தா ளென்று
எண்ணியே மதிப்பா ரெல்லாம் இழிவாகக் கூற மாட்டார். (124)

ஸ்ரீராமன் கௌசிகனுக்குச் சொல்வது.

பிடித்துக்கை யிற்கோ தண்டம் பெரியவா பாணத் தைநான்
விடுத்தடே யில்லை யிப்போ விரதத்தை யேதாய்த் தள்வேன்
கொடியபே யேயா னாலும் குலத்தின்நல் அறத்தை விட்டு
அடிப்பது மழகோ சொல்லும் அனேகநாள் தவமே செய்தீர்.(125)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பெற்றவர் சொல் நமக்கு பெருமையும் புகழு மாகும்
சற்றும்நீ கவலா திந்த சமையம்பா ணம்தொ டுப்பாய்
விற்பிடி வீரா வென்று தபசியும் வேண்டும் போது
பற்றுமோ பவந்தான் நம்மைப் பதகியைக் கொன்றால் அண்ணா. ()

தாடகை யோடி வந்து தசரதன் சேயைக் கண்டு
கோடிமம் பிறந்தா ளென்னக் கொடியகற் சனையே செய்ய
வாடியே தவசி யங்கு வரதன்பின் னாக நிற்க
நாடினாள் அஞ்சாள் சற்றும் நாதனை கெடுக்க வெண்ணி. (127)

வானவ ரேற்றும் ஈசன் வஞ்சகி மேல்அம் பேவ
யானைபோல் பிளிறிப் பாவி அங்கனம் மண்ணில் வீழப்
பூனைபோல் நின்ற மிக்கோன் புலிபோற்றுள் ளிக்கு தித்து
மானவன் ராமன் தன்னை மகிழ்ந்துமே தழுவிக் கொண்டு. (128)

கௌசிகன் செயல்.

பல்லாண்டு பல்லாண் டிராமா பலகோடி சதா யிரந்தான்
வில்லுக்கு வெகுபல் லாண்டு வீரனே புகழ்பல் லாண்டு
வல்வினை யொழிக்க வந்த வரதாஇன் னும்பல் லாண்டு
பொல்லாத பேயைக் கொன்ற புண்யாபல் லாண்டு வாழி. (129)

புற்பிடி கையர் கட்குப் பொல்லாது செய்தாள் தன்னை
விற்பிடி வீர னென்ன விட்டொழித் தாய்வை யத்தை
வற்றாத பலமே கொண்டு வஞ்சரை யெல்லாம் கொன்று
பெற்றவர்க் கிசையே தந்து பெருமையாய் வாழு மென்றான். (130)

### ஸ்ரீராமன் சித்தாசிரமம் சேருவது.

துட்டதா டகையாள் நீங்கத் துறவியுங் கண்டு கொண்டு
கட்டம்தீர் தெய்வ மென்று காகுத்தன் தனைக்கொண் டாடி
இட்டம் போல் யாகம் செய்ய இராமனைக் காவல் வைக்கத்
துட்டபா குமாளத் தூரமோ டினன்மா ரீசன். (131)

கௌசிகன் யாகம் முற்ற காகுத்தன் தங்க அங்கு
வசமான இடமே விட்டு வரமுனி வரர்கட் கோத
திசைகளி லுள்ளோர் செல்லாம் தேவனைக் கண்டு வாழ்த்தி
தசரதன் மண்ணில் செய்த தவத்தைக்கொண் டாடி னரே. (132)

### கௌசிகனுக்கு மிதிலை ஓலைவரவு.

மிதிலையின் தூதன் வந்து மிக்கோன் பால் ஓலைநல்க
விதிப்படி யாகம் செய்யும் விபரத்தை யதிலே கண்டு
சதிசெய்தா டகையைக்கொன்ற தசரத ராமன் தன்னை
மிதிலைமா நகர்க்க ழைக்க மெய்யனும் துணிந்தான் போக. (133)

அல்லல் நீக்கிய செல்வற்கு அழகான பெண்ணைத் தேடி
கல்யாணம் செய்ய அந்தக் காதியின் மகன்ந டக்க
கல்லான அகலி மீது காகுத்தன் பாதம் பற்ற
வல்வினை யொழிந்தெ ழுந்து வரதனை யவளுங் கண்டு. (134)

### அகலிகை செயல்.

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதன் அமர ரேறு அயோத்திமா நகரில் வந்து
துச்சதா டகையைக் கொன்று துறவியின் யாகம் காத்துப்
பச்சமாய் நம்மைக் காக்கப் பரிந்துவந் தவனே யாகும். (135)

### வேறு

வேதத்தின் மாமுதலே விண்ணோர் தமக்கீசா
நாதனே மெய்யான நாரணனே—காதகர்கள்
வேதனை தீர்க்கவே வேஷமது கொண்டவனே
பாதங்கள் போற்றி பரிந்து. (136)

சத்தியநல் ராமனே சானகிலீ லோலகனே
முத்தியையும் நல்கும் முதல்வனே—உத்தமனும்
பெற்றதொரு செல்வகனே பேதையையுங் காக்கவே
சித்தமுற்றாய் போற்றிதே வா. (137)

மண்ணும்விண்ணும் உண்ட மாதவனே கேசவனே
கண்ணாந் தனைமுடித்த இராமனே—மண்ணில்
அண்டரையும் காக்க அவதாரம் செய்துவந்த
புண்ணியனே போற்றிபோற்றி. (138)

அகலிகை ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கனத்தையே கண்டேன் கழலடித் தூளின்
வனத்தினில் வந்த வரதா—இனமாம்
ஜனகன் தவத்துப்பெண் ஜானகியைக் கொண்டு
மனம்போல வாழிவாழி. (139)

ஆண்டாண்டு மனேகர் அரசன் புரிந்ததவம்
மீண்டதோர் கீர்த்தி நிலைத்ததே—ஆண்டாண்டாய்
மாண்டுமே நின்றனளோ மண்ணில் சுகம்துய்க்கத்
தூண்டிவிட் டாய்சுந்த ரா. (140)

காயாம்பூ மேனி கமலமே கண்ணுகும்
தாயார் புரிந்தநோர் நற்றவமே—வாயார
சேயாய் அழைத்துன்னைத் தினமுந் தழுவியே
ஓயாக்கவலை ஒழித் தாள். (141)

காதி யளித்தமகன் காலின் பெருமைகண்டு
நீதியாய் காக்கவே நின்றதால்—ஆதியில்
ஓதியதோர் யானையை ஓடிவந்து காத்தவனே
வேதியர் போற்றும்விளக் கே. (142)

தாடகையைக் கொன்று தவசி தனைக்காத்து
தேடியே யிங்குவந்த செல்வனே—கோடிமாக்
கோடியாய் வாழும் குருராமா வஞ்சகரை
நாடி வெறுத்தால் நலம். (143)

எங்கும் நிறைந்து எங்கும் இல்லாமலுமே
அங்குமிங்கு மேநின்று ஆதரிக்கும்—புங்கவனும்
சங்கைதனை யொழித்து சாதுக்கள் போற்றிசெய
மங்களமாய் வாழ்வாய்மன் றே. (144)

மண்ணுள்ள பேர்களும் மாமுனியு மேயென்றல்
கண்ணியத்தைப் பெற்றார் காகுத்தா—பெண்ணாக
எண்ணான் சபித்த இருடிபால் சேர்த்தென்னை
எண்ணுமிட மேகுவா யே. (145)

ஸ்ரீராமன் கௌசிகனுக்குச் சொல்வது.—(வேறு)

உத்தமி யிவளோ சொல்லும் உலகையே வெறுத்த ஐயா
பத்னியாய் பிராமை யாலே பதியுமே சபித்தான் போலும்
புத்தியில் மேன்மை கொண்டோர் புவியில்பெண் களைச்ச பிக்கார்
முத்தியின் வழியில் நிற்கும் முனிவர்பின் னெவரோ சொல்லாய்.

கௌசிகன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பெண்ணெனும்முறற் கலமு ளிக்குப் பெரியகௌ தமர்க்குப் பன்னி
விண்ணுல காளும் வேந்தன் வினையினு லிவளைக் கூட
கண்யமாம் வாழ்க்கை விட்டுக் கல்லாகச் சபிக்கப் பட்டாள்
கண்டனன் உமது திவ்ய காலின்றன் பெருமை ராமா. (147)

கோதண்டன் மனமகிழ்ந்து கோதமர் தமையழைக்கக்
காதியின் மகனை வேண்டக் கானத்தில் முனியும் சேர
நாதனை அகல்யை கண்டு நலமாகத் துதியே செய்ய
ஆதியின் சேவை கண்டு ஆனந்தங் கொண்டு சேர்ந்தான். (148)

மனம்போல்கௌ சிகன்றன் முன்னே மாமுனி வனைவழுத்தி
னைந்தரு மோஉ மக்கு கன்னியைச் சபிப்ப தென்ன
மனம்போல நடவாச் சீரால் மன்னவா சபிக்கப் பெற்றாள்
இனமொடு புகழைப் பெற்றீற எந்நாளும் வாழி என்றான். (149)

வரமுனி விடையே பெற்று வனத்தில்மா துடனே போகக்
கரத்தால்ரா மனைத்தா னங்கு காதியின் மகன ழைத்து
அரசன்செய் தவத்தைப் போல அண்டத்தும் செய்தா ரில்லை
துரிதமாய் வாரு மென்று சுந்தரனைக் கொடுசென் றானே. (150)

வனங்களைப் பார்த்துக் கொண்டே வரமுனி தன்னோ டங்கு
தினகரன் போக அந்தத் தருணம்தே வர்களுங் கண்டு
ஜனகன்செய் தவத்தில் வந்த ஜனகியை மாலை சூட்ட
முனியுடன் போகு மிந்த முதல்வனைப் பாரு மென்றார். (151)

### ஸ்ரீராமன் கௌசிகனுக்குச் சொல்வது.

இன்னமு மிதிலை தேசம் எத்தனை தூரமோ தான்
என்னையே நினைந்து தந்தை ஏதாக வருந்து முரோ
சொன்னசொல் தவறி டாத சுந்தரமாய் நாட்டை யாளும்
மன்னவன் ஜனக னுக்கு மாதவா பிள்ளை யுண்டோ. (152)

### கௌசிகன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மன்னவன் ஜனகன் முன்பு மகாயாகந் தான்மு டிக்கப்
பொன்னேரை உழுத போது புவியில்கிட் டாப்பெண் காண
அன்றேதான் சீதை யென்று அரசன்பே ரிட்ட ழைத்த
மின்னல்போல் துலங்கும் பெண்ணை மிதிலையில் காண்பாய் ராமா.

நடையினில் ஒப்பு சொல்ல நாட்டினில் எதிரி காணோன்
சடையினு மீள மென்றால் சங்கரன் முடிக்கு மேலாம்
வடிவினைச் சுட்டிக் காட்ட வையம்வா னத்து மில்லை
நடையினி லுண்மை கூற நான்முக னாலு மாகா. (154)

தவசியின் சொல்லைக் கேட்டுத் தசரத சேய்ந கைத்து
நவமணி பதக்க மின்ன நல்முத்து மாலை துன்ன
சிவனது தனுவொ டித்துச் சீதையின் கரம்பி டிக்கப்
புவனத்தைக் காத்த ஈசன் பெருமையாய்ச் சென்றான் மாதோ.

### ஸ்ரீராமன் மிதிலை சேருவது.

ஈனகன்றன் நகரைச் சேரச் சகலரும் கண்டு மகிழ்ந்த
மனம்போல்யா வையுமே கண்டு மண்டப மருகே போக
வனமொழுங் காதி புத்ரன் வந்ததை யறிந்து வேந்தன்
இனமோடு சேர்ந்து வந்தே இருபு தாள் பணிந்தான் மாதோ. (156)

### ஜனகன் கௌசிகனுக்குச் சொல்வது.

கண்டவர் மனம் கவ ரும் கவசகுண் டலம ணிந்த
புண்ணியன் தன்னை பெற்றோர் புவியில்யா ரோநா னறியேன்
மண்ணொடு விண்ணு மெச்சும் மகாபல வான்க ளென்று
எண்ணமும் கொண்டேன் ஐயா ஏதுக்கா யழைத்து வந்தீர். (157)

### கௌசிகன் ஜனகனுக்குச் சொல்வது.

தருமமே யுருவாய் வந்த தசரதன் சேயாய்த் தோன்றி
இருடிகள் யாகம் தன்னை எந்நாளும் கெடுக்க லுற்ற
கருமலை யாக நின்ற ததகிதா டகையைக் கொன்று
கருணையா லகல்யை காத்துக் காணவே மிதிலை வந்தான். (158)

அகலி புத்திரன் சதாநந்தர் சொல்வது.

எட்டிலே ஜீவன் சேர்த்தெவ் வுயிருமே முத்தி யெய்த
தட்டாத சக்ர வர்த்தி தவத்தினி லுதித்த நாமம்
எட்டாத நிலையைப் பெற்றாள் எந்தனைப் பெற்ற தோர்தாய்
கிட்டாத தேனை யீன்ற கெற்பமே வைகுந் தம்மாம். (159)

வந்தி முனி சொல்வது.

மறைகள்நான் கோடு மின்னும் மற்றவை யொன்றாய்ச் சேர்ந்து
உறைபாத்தங் கமதா யென்றும் உலகெல்லா மேற்றும் நாமம்
அறத்தையே நிலையாய்ச் செய்ய அயோத்திமா நகரில் வந்து
பிறந்தோனைக் கையிற் கொண்ட பெருமையை யேது சொல்வேன்.

ஜனகன் கௌசிகனுக்குச் சொல்வது.

மண்ணொடு விண்ணும் கண்டு மாதவா அஞ்ச வில்லைக்
கண்யமா யிங்கு வந்த காயாம்பூ நிறத்த னிப்போ
எண்ணம்போல் வளைப்பா னானால் எனதுமா தவத்துப் பெண்ணை
மண்டல மெங்கும் போற்ற மாலையா னிடுவேன் கண்டாய். (161)

கௌசிகன் ஜனகனுக்குச் சொல்வது.

கண்டேன்கோ தண்டன் வன்மை கண்டேனி தாட கையால்
கண்டேன்கா லின்ப்ர தாபம் கல்லான வகல்யை தன்பால்
அண்டமும் புரண்டா லிந்த அயோத்திசெல் வன்க லங்கான்
எண்ணம்போல் வளைப்பான் மன்னா இங்குநீ கொண்டு சேர்ப்பாய்.

ஜானகி செயல்.

காயாம்பூ வணனைக் கண்டு களித்துவை தேகி யன்னை
வாயாரத் துதிபு ரிந்து வாதையால் மனம்வ ருந்தி
தாயார்தங் தையையே நொந்து தாதிக்கு ராமற் காட்டி.
ஓயாம லங்கு மிங்கும் ஓடோடி மகிழ்ந்தாள் பார்த்து. (163)

ஜானகி தாதிக்குச் சொல்வது.

மார்பினில் கமலம் தோன்றி மலர்ந்தென்னை யழைப்ப தாகப்
பார்வைக்குத் தோணு திப்போ பாங்கியே புதுமை யென்ன
பாராளும் மன்னன் தானோ பாற்கடல் படுப்பான் றானோ
நார்பெற்ற மணமே யாவேன் நாதனாய் வாய்த்தா லென்றாள். (164)

காயாம்பூ நிறமோ ஈது காதியின் மகன் தெரிந்து
மாயா வேஷந் தரித்து மன்னனைக் கொடுவந் தானோ
தாயாரு மெவளோ நல்ல தவம்செய்து இவரைப் பெற்றாள்
பேயாகப் பிறப்பி னும்மேல் பெம்மானை யடையேல் மாதே. (165)

வானோமா ருதமோ ஈது வாயோபார் பவளந் தானோ
கானோகா யாம்பூ மேனி கண்ணோநற் கமலந் தானோ
தேனோதே வர்களு முண்ணும தெவிட்டாசீ னிக்கற் கண்டோ
ஏனோநான் பிறந்தேன் பாரில் இவர்கரம் பிடிப்பே னோதான்.(166)

வேதத்தைப் பயனை நன்கு விரும்பிய முனிவர் கொள்ளும்
கோதிலின் கனியை யிப்போ குவலயம் வந்தி ருக்கும்
நாதனை வாய்த்தா லெற்கு நலம்பெற நோற்ற நோன்பு
நீதியாய் முடிந்த தென்றா நிலையாக வாழ்வே னன்றே. (167)

திருக்கண்டேன் கண்கு ளிர்ந்தேன் திருத்தோளின் வலியும் கண்
திருமலர்ப் பாதம் கண்டேன் திடபர மேன்மை கண்டேன் [டேன்
அருள்கண்டே யமுத முண்டு ஆனந்த முழுதும் கொண்டேன்
பொருபடி குணத்தைக் கண்டேன் போற்றாவில் வளைவென்றோ.

தாதி ஜானகிக்குச் சொல்வது.

அண்டமே யளாவி நிற்கும் அத்தனு சைவ ளைக்கப்
புண்ணியன் தனக்கு வீரம் போதுமோ சொல்வாய் அம்மா
விண்ணவ ராலு மத்தை வீரமாய்த் தாங்க லாகா
தெண்ணம்போல் நடக்கு மென்று எள்ளள வும்நான் நம்பேன்.

ஜானகி தாதிக்குச் சொல்வது.

வில்லையும் கொடுத்தா லிப்போ வீரனு மதனை யேயோர்
புல்லாக மதிப்பா ரென்று புகலுவேன் உண்மை யாக
வல்லமை யெலா மறிந்து வரமுனி கொண்டு வந்தார்
செல்லாது உனது வார்த்தை சீதையென் சொல்லின் முன்னே.

காதியின் மகன்தா னிங்கு கர்த்தனைக் கொடுவந் தற்காய்
ஏதுனன் தருவே னிப்போ தெனக்கேதும் தோன்ற வில்லை
சாதுவா யிருப்ப தாலே சங்கையா லிலையு துள்ளம்
ஓதினல் தோன்றாந் தன்மை ஒப்பினல் செய்வேன் அம்மா. (171)

### தாதி ஜானகிக்குச் சொல்வது.

எல்லாமு மறிந்தோ ராயும் இப்படிச் சொல்வ தாமோ
கல்லையும் பெண்ணாச் செய்த காகுத்தன் வலியோ டிங்கு
வில்லையும் வளைக்கு முன்னே வீணாக வலையா திப்போ
நல்வழி நிலைப்பீ ராளுல் நடப்பதைக் கண்டு சொல்வேன். (172)

### ஜானகி செயல்.

சலகமில் லாவோ டம்போல் சானகி திகைத்து நின்று
நிலையில்லாப் படகைப் போல நெஞ்சமும் துடிதுடித்து
மலைவாழைக் குருத்தைப் போல மண்மீது சோர்ந்து வீழ்ந்து
வலைபட்ட மானு யங்கு வருந்தற்காய் நொந்தாள் அம்மா. (173)

### ஜனகன் செயல்.

சனகன்றன் வில்லைக் கொண்டு சாதுக்கள் முன்னில் வைக்க
கனமான வில்லைக் கண்டு காகுத்தன் அச்ச மின்றி
மனம்போல வளைக்கச் சொல்லும் மாதவா வென்ன வேண்டத்
தனகரன் தன்னை நோக்கித் தவமுனி கௌசி கன்றுன். (174)

### கௌசிகன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சிவனது வில்லும் உன்றன் சிறந்ததோள் வலிக்கீ டாமோ
புவனத்தில் புகழே வாய்க்கும் புண்ணியா இதைவ ளைத்தால்
தவசியின் சொல்லை யிப்போ தடைசெய்து விட்டால் ராமா
தவத்தையே செய்து பெற்ற தந்தையும் மதியார் என்னை. (175)

### ஸ்ரீராமன் செயல்.

எடுக்கவே! ராமன் வில்லை எதிராகும் முனிகு திக்கப்
பிடிக்கவே கரத்தா லந்தப் பிரமனும் வியந்து நோக்க
ஒடிக்கப்பூ மாரி பெய்ய உலகேற்ற மாதா வைத்தான்
கொடுக்கவே சனக ளைப்பக் கோசிகன் வாழ்த்தி னானே. (176)

### ஜானகி செயல்.

ஓசையை ஜனகி கேட்க ஓடோடித் திசையைப் பார்க்க
ஆசையாம் மனதே கொள்ள ஆகாயந் தனையே நோக்கிப்
பூசையாம் உளத்தில் செய்து புங்கனைச் சேர்ந்து எந்நாள்
தேசம்போ வேனோ என்று தேங்கியே கவலை யுற்றாள். (177)

மன்னவன் ஜனகன் மெச்சி மானவ ரிருவர் தம்மை
அன்புடன் சேர்த்த ணைத்து அங்கன மழைத்துச் சென்று
துன்பமும் ஒழிந்த தென்று துறவியின் பாதம் போற்றி
அன்றேஒ லையுந்திட்டி அயோத்திக்கே யனுப்பி விட்டான். (178)

தசரதன் செயல்.

அரசனும் ஓலை கண்டு அங்குழு வர்க்கும் கூறி
வரமுனி தன்னைக் கொண்டு வசமான நாள் தெரிந்து
மரபுதான் விளங்க வந்த மைந்தன்மங் கலத்தைக் காண
புரமெலாம் புகழும் அந்தப் புண்ணியன் மிதிலை சென்றான். (179)

ஜனகன் செயல்.

மிதிலைசேர் தசர தேந்த்ரன் மிக்கமா ஜனகன் கண்டு
விதிப்படி தழுவிக் கொண்டு விநோதமாய் வார்த்தை யாடி
மதிநுதற் சீதை தன்னை மகனுக்குத் தருவே னென்றே
அதிபதி யோடு சொல்ல அயோத்திமன் னன்ம கிழ்ந்தான். (180)

வசிஷ்டன்மன் னன்த னக்கு மரபினல் விதமும் கூறித்
தசரதன் சேய்களுக்குத் தருவாய்நீ பெண்க ளென்ன
வசமான சொல்லைக் கேட்டு வாயாரத் துதியும் செய்து
நிசமாகத் தருவே னென்று நீங்காத மகிழ்வு கொண்டான். (181)

பரதனுக கழகில் மிக்க பாவைமாண் டவியும் வீர
உருவனும் லக்ம ணற்கு ஊர்மிளைப் பெண்ணும் மேலாம்
கருணைசேர் சத்ருக் கற்குக் காரிகை சிருத கீர்த்தி
வரமுனி பொருந்து மென்ன வணங்கிமன் ஒப்பினனே. (182)

## சீதா கல்யாணம்.

பவளத்தால் கால்கள் நாட்டிப் பார்புகழ் பந்த லிட்டு
நவமணி தொங்க விட்டு நல்வாழை கமுகும் நாட்டத்
தவசிக ளங்கு கூடத் தசரதன் வந்து சேரக்
கவசக்குண் டலனை யன்பாய்க் காணவே யெதிர் நின்றாரே. (183)

ஸ்ரீராமன் செயல்.

நவமணி முடியும் முன்சேர் நற்பச்சை கலிக்கத் ராயும்
கவசகுண் டலமும் காதில் கங்கணம் வைரோ யம்பொற்
பவளமும் பெருமுத் தோடு பதகமார் பினில்ஜொ லிக்கத்
தவஞ்செய்து பெற்ற சேயைத் தாய்மார்க ளழைத்து வந்தார். ()

மண்டபம் ராம னெய்த மன்னர்கள் மயங்கி விழப்
புண்ணியர் முனிவ ரெல்லாம் புராண்டுமே திகைத்து நின்று
அண்டர்கள் தினமே ஏற்றம் அயோத்திசெல் வனையே காண
மண்மீது சுகமே வாழ மனம்போல வாழ்த்தி னாரே. (185)

ஓமத்தைச் செய்யவே யங்கு ஓடோடி மறையோர் மேவ
க்ஷேமத்தைப் பெறவே மன்னன் சேர்த்தான்ஜா னகியைக் கொண்டு
ஓமத்தின் ஒளியா லங்கு உட்சுவர் ஜொலித்து நிற்கச்
சாமமும் ஒழிந்த தென்று தரணியோர் மகிழ்ந்தா ரம்மா. (186)

ஸ்ரீ ராமனுக்கு நலங்கிடுவது.

கண்ணும்செங் கமல மேநற் கமலமே கைக ளாகும்
மண்ணளா அம் பாதம் கொண்ட மாதவ னேவாழ் வாய்நீ
கண்மயகௌ சல்யை யீன்ற காயாம்பூ மேனி யண்ணால்
விண்ணவர் புகழ நின்று வீரனாய் வாழ்வாய் லாலி. (187)

சீதைக்கு நலங்கிடுவது.

திருமார்பு கமலம் வாழுந் தேவிபோ லென்றும் நின்று
தருமத்தை நிலைவி டாது தரணியில் வாழ்வாய் லாலி
கருணையே மனதில் கொண்ட காயாம்பூ வண்ண னாலே
புருடனைப் போற்றி நின்று புகழோடு வாழ்வாய் லாலி. (188)

மங்கலம் பெருகி நிற்க மற்றோர்க்கும் நலுங்கு பாட
அங்கனம் முனிவ ரோடு அரசர்ரா மனையே வாழ்த்த
மாங்கல்யம் தரித்தான் ராமன் மணப்பெண்சீ தையின்க ழுத்தில்
தங்களின் மணப்பெண் கட்கும் மங்கில்யம் தரித்தார் பின்னோர். ()

குலப்பெண்கள் ஒன்று கூடிக் குணமாக ஆய்ந்து பாட
வலம்வர மணைப்பந் தற்கண் வழக்கம்போல் அம்மி நாட்ட
அலைகடல் துாத்த ஈசன் அன்னையின் பாதம் தொட்டான்
கலைமகள் நாதன் கண்டு கல்லென நகைத்தான் மாதோ. (190)

மிதிலை தாதி சொல்வது.

விரிதலை வேட னைப்போல் வில்லையும் கரத்தில் தாங்கிக்
கரிவேட்டை யாடி வந்த காயாம்பூ வணன்த னக்குத்
திருமலர் அழகி னாளும் தேவியாய் வாய்ந்த தாலே
புரமெல்லா மேற்று மந்தப் புண்யனாய் விளங்கி னாண்டி. (191)

அயோத்தி தாதி சொல்வது.

வில்லையும் வளைப்பா ரின்றி வெகுநாளாய்க் காத்த வர்க்கு
கல்லையும் பெண்ணாச் செய்த காகுத்தன் வாய்த்த புண்யம்
சொல்லொண்ணா புகழி னோடு சுகமும்நேர்ந் ததையெண் ணாமல்
பல்லைக்காட் டும்ந ரீபோல் பரிகாசம் செய்தா யோடி. (192)

மிதிலை தாதி சொல்வது.

எவரேனும் மதிப்பா ரோதான் இராமன்றன் செயல்தா னென்ன
தவசியின் தந்தி ரத்தால் தனுசையே யொடித்தெ றிந்து
புவனங்க ளெங்கும் போற்ற பொற்கொடி வாய்த்த புண்யம்
நவமணி முடியைக் கொண்டு நாரண னாக நின்றான். (193)

அயோத்தி தாதி சொல்வது.

தசரதன் சேயாய் வந்த தனகரன் தன்னா லல்லோ
வசமான சுகத்தைப் பெற்று வாழநேர்ந் ததுநீ கண்டாய்
திசையெங்கு மறிகு வாரே தேவன்றன் புகழே யன்றோ
இசையோடு பாடி யேசல் இம்மட்டும் நிறுத்து வாயே. (194)

மிதிலை தாதி சொல்வது.

பெண்கொண்ட புாக்கி யத்தால் பெற்றவன் வாலி பன்றான்
கண்கொண்டு பாரா மல்வீண் கதையேதோ கூறி விட்டாய்
அண்டரால் துதிக்கப் பெற்ற அன்னைக்கொப் பாக வாய்த்தாள்
புண்ணிய பயனென் றெண்ணி பொருந்தியே நிற்பா யேடி. (195)

அயோத்தி தாதி சொல்வது.—(வேறு)

மங்கை குலுக்கு யாராலே மன்னவன்மீண்ட தாராலே
மங்கலம்பெற்றது யாராலே மகிமைவாய்த்தது யாராலே
சங்கையொழிந்த தாராலே சகமுமறிந்த தாராலே
அங்கம் குளிர்ந்த தாராலே ஆட்டம்பாட்டம் யாராலே. (196)

மிதிலை தாதி சொல்வது.

வில்லைவளைத்தது யாராலே வீரனாய் நின்றது யாராலே
கல்லைக்காத்தது யாராலே கண்டகிமாண்ட தாராலே
சொல்லுபொருத்த தாராலே சோகமும்தீர்ந்தது யாராலே
நல்லதுவாய்த்தது யாராலே நாட்டியமுந்தா னாராலே. (197)

அயோத்தி தாதி சொல்வது.

கொண்டைகுலுக் குனக்கேது கோதண்டன்வீ ரத்தாலடி
வண்டுதலையும் இப்போதடி மணம்பெற்றதை நீபெண்ணடி
தண்டைகொலுசு காலடி தளுக்குவார்த்தை யேதடி
புண்ணியன்வந்த சீரடி போதும்போதும் அடக்கடி. (198)

வேறு.

கன்னிகள் இசையோ டங்கு காருத்த னேசல் பாட
மன்னவன் தசர தன்நல் மாதர்கள் உளங்க ளிக்க
மன்னரும் முனிவரு ந்தான் மணக்கோலம் செய்து வைக்க
மன்னன்மா ஜனகன் வாழ்த்தி மாளிகைக் கழைத்துச் சென்றான்.

மணமக்களையும் அழைத்துக்கொண்டு போதும்போது
பாடுவது.—(வேறு)

லாலிஸ்ரீராகவாலாலி லாலிபுருஷோத்தமாலாலி
லாலிஸ்ரீவரதனேலாலி லாலிஸ்ரீகோதண்டலாலி
லாலிமணிவண்ணலாலி லாலிராஜேந்திராலாலி
லாலிமனோகராலாலி லாலிஸ்ரீராமனேலாலி. (200)

வேறு.

அரசர்களொருபுறம் அந்தணரொருசார்
வரமுனிவரரொடு வையகம்புகழ
வரிசையாய்உண்பதை வானோர்வியந்து
உருவமுமாறியங் குண்டுகளித்தார். (201)

அண்டர்கள் செயல்.—(வேறு)

அண்டராய்ப் பிறந்து மென்ன அமிர்தமே யுண்டு மென்ன
தொண்டனு யென்றும் நின்று துன்பத்தை யொழித்து மென்ன
வண்டுறை மாலை மார்பன் வரத்தின்மா மகன் மணத்தில்
உண்டின்பம் பெறுவ தற்கு உண்டோமே லான பாக்யம். (202)

ஊஞ்சல்.

வரிசையாய் தீபம் நாட்டி வர்ணத்தால் கோலம் தீட்டி
பரிமள தூபம் வைத்துப் பச்சையாம் ஊஞ்ச லிட்டு
திருமலர் தோர ணஞ்சேர் திவ்யமாய் நடனஞ் செய்ய
வரதனும் அன்னை யோடு வாத்யகோ லமொடே வந்தான். (203)

தந்தையோ டுவந்து வந்து தாய்மார்க ளும்க ளிக்கப்
பந்தாடும் பாலன் றன்னைப் பரிந்துகாத் தருளும் ஈசன்
சந்தனம் தாடை பூச சானகி மனம்பூ ரிக்க
சுந்தர பெண்கள் கூடிச் சுபம் காணப் பாடினாரே. (204)

## திருக்கோலம்.

முத்தான ரதமே முற்றும் முழுநவ மணியார் மேடை
சுற்றும்வா ழைகளும் பச்சை சுழல்குடை யாதி யான
ரத்தின மிழைத்தஸ் தம்பம் ரமிக்கவே ஜனக னங்கு
மெத்தநாள் தவத்தில் வந்த மெய்யனைப் புகழ்ந்தான் மாதோ. ()

தேரோட மலர்கள் சிந்த தேவர்கள் துதிக்க அந்த
ஊரோடு களிக்க மக்கள் ஓடிச்சீ தைவீட் டிற்கு
நேரோட மனம்பூ ரிக்க நீலம்போல் ஜொலிக்க எங்கும்
சீரோட ஜனக னங்கு செல்வனைக் கரிமே லேற்ற (206)

கரியேறி ராமன் போகக் கதிரவன் கண்டு வக்க
கரத்தினால் முத்தை வாரிக் கருணையாய் அங்கெ றிந்தார்
அரண்மனை வந்து சேர ஆலாத்தி வெகுவாய் செய்து
அரசன்மா ஜனக னார்தன் அழகிய மேடை சேர்த்தான். (207)

மானோடு புலியும் சேர மயிலோடு சர்ப்ப மாடக்
கூனோடு குண்டு றூக்கக் கோலோடு கோல டிக்க
வானோடு மண்ணும் வாழ்த்த வாளேந்தி வரிசை காட்டத்
தேனோடு பழம்சேர்ந் தாற்போல் தேவனும் மகிழ்ந்தான் கண்டு. ()

பரதலக்ஷ் மணசத் ருக்கர் பவனியாம் கோலம் சேர
அரசன்மா ஜனகன் கண்டு அகமெலாம் மிகப்பூ ரித்து
புரமெல்லாம் புகழே பெற்ற புண்ணியன் புறப்பா டிற்கு
வரத்தினில் வருந்பெண் கட்கு வரிசையும் ஈந்தா னம்மா. ((209)

## ஸ்ரீராமன் அயோத்தி போதல்.

கரிகளோர் புரமாம் நல்ல கால்படை யோர்பு ரந்தான்
வரிசைபின் னாக நிற்க வானவர் களிக்கக் கூடி
வரமுனி வரரும் வாழ்த்த வரதனும் அன்னை யோடு
பொருந்தியே ரதத்தி லம்மா புறப்பட்டான் நகரை நாடி. (210)

### வேறு.

மண்ணதிர மக்கள்வர மன்னனைக்கண் டேகளிக்க
விண்ணவர்பூ மாரிபெய்ய வேடர்கள்முன் னுகவுற
வண்டுறைதார் மார்பன்றன் வனத்தினில்முன் னேபோக
விண்டலங்கி.டுகிடென்ன வீரர்விரை வாய்ச்சென்றார். (211)

### பரசுராமன் செயல்.—(வேறு)

காதில்வெம் புகையே வீசக் கண்களில் கனல்ப றக்கப்
பாதத்தால் நடக்கும் வேகம் பார்த்துப்பார் அதிர்ச்சி யாக
வேதங்கள் தேடிக் காணு வீரன்முன் பரசு ராமன்
பாதையில் வரவைக் கண்டு பயந்துமே திகைத்தான் மன்னன்.

### தசாதன் பாசுராமனுக்குச் சொல்வது.

கையினிற் பரசை யேந்தும் கருணையங் கடலே போற்றி
பொய்வாழ்க்கை தனைவெ றுத்த புண்யரே போற்றி போற்றி
வெய்யிலில் விரைந்து வந்த விதத்தையுஞ் சொல்வீர் போற்றி
செய்தவத் தால்பெற் றேரமுன் சேவையே போற்றி போற்றி.(213)

### பரசுராமன் தசரதனுக்குச் சொல்வது.

அற்பமாம் வில்லொ டித்த அயோத்திரா மன்ப லத்தை
சற்றேயா னறிய வெண்ணி சடையமே யிங்கு வந்தேன்
பெற்றதோர் மகன்தா னிப்போ பெருமையாய் முன்னில் வந்து
விற்பிடித் தேநிற் பானேல் வேந்தனே மதித்துப் போரேன்.

### தசாதன் பாசுராமனுக்குச் சொல்வது.

பால்மற வாப்பா லற்குப் பலமுண்டோ எதிரே நிற்க
ஆல்கொள்பே யெதிர்த்தா லும்தான் ஆகுமோ ஜெயமே கொள்ள
மாலெனப் புகழே பெற்ற மகனைநீ யெதிர்த்து நின்றால்
மேல்வாழும் தேவ ரும்மை மேன்மையாய் மதிப்பா ரோதான்.

### பரசுராமன் தசாதனுக்குச் சொல்வது.

கௌசிகன் யாகங் காக்கக் கடியதா டகையைக் கொன்று
தசரதன் பெற்ற சேயாய்த் தாணியில் புகழே பெற்று
விசையாக மிதிலை சென்று வில்லையும் முறித்த ராமன்
நிசத்தைநா னறியா விட்டால் நிலைபட மாட்டே னுள்ளம். (216)

தசரன் பரசுராமனுக்குச் சொல்வது.

தவசியின் பலமே யன்ரே தாடகை யொழிந்த தன்று
புவனத்தில் பெற்ரோர் செய்த புண்யமே வில் முறித்தான்
எவரேனும் உமது சொல்லை ஏற்றுக்கொள் வாரோ ச்வாமி
தவத்தினல் பெற்ற சேய்க்குத் தருவது துன்பம் நன்ரே. (217)

பரசுராமன் தசரதனுக்குச் சொல்வது.

அண்டம்மா றியேவந் தாலும் அலைகடல் பொங்கி னலும்
மண்ணெடு விண்ணும் சேர்ந்து மன்னவா சொன்ன போதும்
கண்யமாய் வில்மு றித்த காகுத்தன் வலியை யிப்போ
புண்ணியா அறியா விட்டால் பொருந்தாது மனமே கண்டாய்.

தசிரதன் பரசுராமனுக்குச் சொல்வது.

மச்சகூர் மவரா கத்தின் வாமன நரசிம் மம்மாய்த்
துச்சமன் னவர்த மக்காய்த் தோன்றினீர் பரசை யேந்தி
பச்சமாய் காக்கா திப்போ பாலனை யெதிர்ப்பீ ராஞல்
தச்சணம் உயிரைப் போக்கத் தடையேது மில்லைக் கண்டாய்.(219)

பரசுராமன் தசரதனுக்குச் சொல்வது.

சிவனது வில்மு றித்த சிறந்ததோள் வலியைக் கொண்டு
தவத்தினல் பெற்ற சேய்க்காய் தசரதா பயமே வேண்டாம்
புவனத்தை யாளும் வேந்தர் புண்ணியன் தனையே விட்டால்
எவரிங்கு மதிப்பா ரென்னை எடுத்துச்சொன் னதுவே போதும்.

த்சிரதன் பரசுராமனுக்குச் சொல்வது.

முக்கால மறிந்தி ருந்தும் முடித்தகங் கணம்வாங் காத
மக்களை யெதிர்த்து நிற்க மனமுந்தான் துணிந்தீ ரல்லோ
சக்கரம் சங்கு மேந்து சகலலோ கேசா ஐயோ
திக்குவே றிலையெ னக்குத் தீதுநீ செய்ய வேண்டாம். (221)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

முற்றுமே துறந்தோன் யாரோ முன்வந்து தந்தை தன்னைச்
சற்றுமே மதித்தி டாமல் சர்ப்பம்போல் சீற லேனே
பெற்றதோர் தந்தை யுன்றன் பெருமையெல் லாம றிந்தும்
குற்றமும் யாதோ காணேன் கொடுமையைக் காண்போம் வாரீர்.

ஸ்ரீராமன் பரசுராமனுக்குச் சொல்வது.

பரசையே கொண்டு நீர்சூழ் பாரினில் புகழைப் பெற்ற
அரசரென் றெண்ணு மல்லீ அற்பமா யுரைப்ப தேனோ
புரமூன்று வந்த போதும் புண்ணியர் பெற்ற மக்கள்
கரத்தினில் கொண்ட வில்லைக் கண்டிக்க முடியா கண்டாய்.(223)

பரசுராமன் செயல்.—(வேறு)

சடையலேயக் கண்ணிருளச் சகலருமே கண்டஞ்சப்
படையலேய விண்நகைக்கப் பரசுரா மனைநோக்கத்
துடையதிரத் தன்சேயைத் துரிதமாய்ச் சேர்த்தணைக்க
முடியலேய மன்னனஞ்ச முதல்வனுந்தே றுதல்கூற. (224)

பரசுராமன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.—(வேறு)

சிவனது வில்லொ டித்துச் சீதையை மணந்த வீரா
நவலோகம் போற்றி நிற்பாய் நான்கொள்வில் லேயும்வ ளைத்தால்
தவசியா யெண்ண வேண்டாம் தருமத்தை காக்க வந்தேன்
புவனமூன் றிலுமென் முன்பு பொருந்தியே நிற்பா ரில்லை. (225)

ஸ்ரீராமன் செயல்.—(வேறு)

விற்பிடிக்க மனன்காண விண்ணவர்கள் மேல்நகைக்க
புற்பிடிக்கும் தவர்வாழ்த்த புண்ணியன்அந் சாதுசற்றும்
நற்பிடித்துநாணேற்ற நான்முகன்கண் டேகளிக்கப்
புற்கடித்த பரசங்கு பார்நோக்கித் தளர்ந்துநிற்க. (226)

ஸ்ரீராமன் பரசுராமனுக்குச் சொல்வது.—(வேறு)

வீரனே கொடுத்த வில்லை விடாதுநான் வளைத்து விட்டேன்
தீரனே யிதற்கிவ் வண்ணம் தேடிய தவத்தை நல்கும்
பாரினி லினிமே லெங்கும் பலமது செலமாட் டாது
சூரனாய் வந்தோன் றானே சோர்ந்துநிற் பதுமென் சொல்லே. ()

பரசுராமன் செயல்.

வேதங்கள் காணுத் தேவா விண்ணவ ரேற்றும் கோவே
நாதனாய் அயனைப் பெற்ற நாரண னை சோதி
பாதகன் றன்னைக் கொன்று பாரத்தை யொழிக்க வெண்ணி
ஆதியே யயோத்தி வந்தாய் அடியேனை யாட்கொள் வீரே. (228)

அசுரர்கள் கொடுமை தீர்க்க அவனியில் உதித்தாய் தேவா
திசைகளோ ரெட்டும் போற்றும் திவ்விய தனுசைக் கொண்டு
வசமாக வாழு மந்த வஞ்சரை யெல்லாம் கொன்று
தசரத செல்வ னென்று தரணியில் வாழ்வாய் போற்றி. (229)

கரியைரட் சித்துக் காத்த கார்க்கடல் வணன் மகிழ்ந்து
பரசுரா மனையே நோக்கிப் பலத்தையே கவர்ந்து கொள்ள
அரசனைப் புகழ்ந்து போற்றி அங்ஙனம் துதித்துப் போக
அருமறை யேற்றும் அன்னை ஆனந்தம் கொண்டாள் மாதோ. ()

அரசனும் மனம கிழ்ந்து அன்போடு சேர்த்த ணைத்து
வரத்திறற் பயனைக் கண்டேன் வாழ்வாய்மங் களமா யென்று
வரமுனி தன்னை யங்கு வாயாரத் துதியும் செய்து
துரிதமாய் நாட்டைக் காணத் தூதரை ஏவி னானே. (231)

## குடிகள் செயல்.

அரசன்றன் வரவைக் கேட்ட அயோத்திமக் கள்க ளித்து
வரிசையாய்த் தோர ணங்கள் வகையான மலர்கள் நாட்டி
பரிந்தழைத் தினிது செல்லப் பாதியாம் வழியில் சென்று
மரக்கிளை களிலே தங்கி மன்னனைப் பார்த்தா ரூரார். (232)

வையகம் வானம் போற்ற வரதன்றன் வரவைக் கண்டு
தெய்வம்போல் துதியும் செய்து தேவனோ டொருங்கு சேர்ந்து
செய்ததோர் தவத்தி னாலே சேமத்தை யடைந்தோ மென்று
அயோத்திமா நகரை நாடி ஆனந்த மாகச் சென்றார். (233)

திருவீதி வலமே யெய்த திருமலர் கொண்டு வீச
ஒருபுறம் மக்க ளாங்கு ஓடோடி வந்து வக்கத்
திருமாளி கையிலி றங்கத் திவ்யஆ லாத்தி செய்ய
மரபுதான் விளக்கும் சேய்க்கு மங்களம் பாடி னாரே. (234)

மங்கள மாய்வந் தோனை மன்னன்மா ளிகையிற் சேர்த்து
தங்கத்தைச் செதுக்க விட்ட தாமரை நிகர்பீ டத்தில்
புங்கனைப் பொருந்தச் செய்து பொன்னும்தா னங்கொ டுத்து
எங்குமே புகழ நின்று எழிலரா சாண்டு வந்தான். (235)

பால காண்டம் முற்றிற்று.

ஸ்ரீராமஜெயம்:

# அயோத்தியா காண்டம்.

அலைபாய ஆழியே கொள் அயோத்திமா நகர்வி ளங்க
மலையூரய ஆதி சேடன் மாளிகை யாய மர்ந்து
தலைகளா யிரம தாகத் தம்பிலயஞ் மணன்றன் காக்கத்
தலைவிவை தேகி யோடு தரணியான் வாழ்ந்து வந்தான். (1)

பரதன் கேகயன் நாட்டுக்குப் போவது.

மானவன் பரதன் தன்னை மாமன்நாட் டுக்க னுப்ப
வானவர் தினமே யேற்றும் வரதன்றன் பாதம் போற்றிச்
சேனைநற் சத்து ருக்கன் சேரவே துணையாய்க் கொண்டு
கானகம் நடந்தான் ஒல்லை காராக்கே கயன்றன் நாட்டை. (2)

குடிகள் செயல்.

மரபுதான் விளங்க வந்த மகன்றனக் கரசை நல்க
அரசன்றாள் பணிந்தன் னேனும் அயோத்திவாழ் குடிகள் வேண்ட
புரமெல்லாம் புகழே பெற்ற புண்ணியன் மனம்பூ ரித்துக்
கரத்தினால் தழுவிக் கொண்டு கண்யமாய் சபையை நோக்கி. (3)

தசரதன் குடிகளுக்குச் சொல்வது.

அறுபதா யிரமாண் டாக அரசையே நடத்தி யாங்கு
குறையுண்டா னலிப் போது கூறவீர் தெரிந்து கொள்ள
அறத்தையே யறியா முன்னே அபிஷேகம் செய்த போதும்
சிறியவன் தன்னு லிந்தச் செகந்தாங்க முடியா தம்மா. (4)

குடிகள் தசரதனுக்குச் சொல்வது.

ஆண்டதில் குறையே யில்லை அரசரே கவலை வேண்டாம்
ஆண்டுஆ யிரம்பத் தாறு அனேகயா கங்கள் செய்து
வேண்டியே பெற்ற ராமன் வினோதத்தைக் கண்ணால் கண்டு
மாண்டாலுங் குற்ற மில்லை மறக்காமற் செய்வீ ரென்றார். (5)

புரமெல்லாம் புகழே பெற்ற புண்ணியன் தனக்கொப் பாவோர்
தாணியி லெங்கு மில்லை தருமநல் நிலையில் நின்றோர்
அரசையே திடமாய்க் கொண்டு அபிஷேகம் செய்து விட்டால்
விரதமும் முடியும் பின்னால் வேறேதும் கவலை யில்லை. (6)

தசரதன் குடிகளுக்குச் சொல்வது.

நீர்மிசை குமிழிக் கொப்பாம் நிலையில்லாக் காய மீது
பார்மீது வெகுநா ளாகப் பண்ணின யாக மெல்லாம்
கார்முகில் நிறத்த னுமென் காகுத்தன் அபிஷே கங்கண்
பார்க்கவும் நேர்ந்த தாலே பாலர்காண் பொறுப்பீர் சற்று. (7)

தசரதன் செயல்.

இருடியின் பாதம் போற்றி இரக்கமாய் ஆய்ந்து நாளை
தெரிந்தெடுத் தேமைந் தற்குத் தேசத்தைக் கொடுக்க வேண்ட
அரசனுங் களிக்கு மாறு அபிஷேகம் தன்னைச் செய்ய
வரமுனி நாளைக் கண்டு மக்களின் புறச்சொன் னனே. (8)

வரமுனி சொல்லைக் கேட்டு மன்னவன் மனம்ம கிழ்ந்து
அரசையெங் கும்கொண் டாட அலங்காரம் செய்யச் சொல்லிக்
குருவின்பா தம்ப ணிந்து குடிகளைத் தேற்றி விட்டு
வரத்தினில் பெற்ற சேயை வாழ்த்தவே கமதாய்ச் சென்றான். (9)

தசரதன் செயல்.

பத்தினி கௌசல்யா முன் பாலனை வரவ ழைத்துப்
புத்தியில் ஸ்ரேஷ்ட னென்று பொருந்தியே ஆய்ந்து வாழ்த்தி
எத்திக்கும் புகழ வேநான் இன்பமாய் அபிஷே கிக்க
சித்தம்செய் தேன்ம வும்யான் சிறப்பாக ஆள்வா யென்றான்.(10)

பரதசத் துருக்க ரிங்கு பதாதே யில்லை யென்று
வரவழைக் கவுமெண் ணுற்றால் வரதனே வெகுநாள் செல்லும்
வரமுனி சொல்தட் டாமல் மனமதை நிலையாய்க் கொண்டு
அரசாள நிற்பாய் கண்டாய் அதனாலே குறைகள் நேரா. (11)

சிற்றன்னை யிதனால் கைகை சிறிதுமே கவலை கொள்ளாள்
பெற்றவள் தனக்கு மேலாம் பிரியம்வைத் தவள்தா னன்றோ
சற்றும்சோ கங்கொள் ளாதே சமையத்தி லென்று கூறி
மற்றதை முடிக்க வெண்ணி மகன்றனைத் தழுவிச் சென்றான்.(12)

கௌசல்யை ஸ்ரீ ராமனுக்குச் சொல்வது.

இந்துமா மதிதந் தைக்கன் றிராமனே பரிந்து சொன்ன
மந்திரஞ் சொல்வே னிப்போ மனதில்நீ விடாது கொள்வாய்
தந்தைபோல் அறத்தைச் செய்து தாரணி யெங்கும் போற்றச்
சுந்தர மாகவாழ் வாய் சொல்லைத்தள் ளாதே யென்றாள். (13)

* தசரதன் தாய்.

தாயார்கூ றியதைக் கேட்டுத் தாள்பணிந் தேற்றி நின்று
வாயாரப் போற்றும் சேயை மார்புட னணைந்து கொண்டு
சேயாகப் பிறக்க நானும் செய்தேன்பன் னாள்தவத்தை
ஓயாத கவலை யென்னை ஒழிந்தது இன்றென் றாளே. (14)

குலத்தையே விளக்க வந்த கோதண்டன் தனக்கனேக
நலமுற வெண்ணம் கொண்டு நாதன்ரங் கனையே போற்றி
நிலையாக விரதம் செய்ய நேமித்து மகனை விட்டுக்
குலத்தோர்செய் ஓமந் தன்னைக் கோசலை நடத்தச் சென்றாள். (15)

சுமந்திரன் செயல்.

விண்ணொடு மண்ணும் போற்ற விநோதமா யலங்கா ரங்கள்
தண்டுக ளுள்ள வெல்லாம் தருணத்தில் வந்து சேரக்
குண்டுகள் சுடவி டாமல் கோட்டையில் தானம் நல்க
கண்யமாய்ப் பணிக ளிட்டான் கருதின வாறே சென்றார். (16)

கோட்டை அலங்காரம்.

சேலையாம் மதில்கள் கட்டச் சிறந்தநன் மலரைக் கொண்டு
மாலைபோல் அழகாய்ச் சூடி மயில்போல அலையக் கூந்தல்
சாலைக ளதனைக் கண்டு சர்ப்பம்போல் கொடியும் வாழைச்
சோலைகள் வரிசை விட்டுச் சொகுசாக விளங்கி நிற்க. (17)

குடிமகார் ஒன்று யங்கு கூடியே விரைந்து சென்று
ஓடிமலர் தன்னைக் கொண்டு உருவம்போல் செய்து கட்ட
செடிமலர் தன்னைக் கொண்டு சேலைபோல் அழகாய்ச் சூடக்
கொடிமலர் சிலபேர் கொண்டு கோர்த்துமே வரிசை யிட்டார். (18)

தென்னையும் பனையும் கண்டு தேசத்தை யாள வந்த
மன்னன்மங் களம்பெற் றோங்க மலர்போலக் குருத்தைக் கொண்டு
பின்னல்மா சடைத ரித்துப் பிறந்தபா ளையைப்போல் தாழப்
பின்னாற்கட் டினசி லங்கை பேரோசை செய்த தம்மா. (19)

பஞ்சிட்ட வயிற்று மானும் பறவையும் மயில்க ளும்தான்
உஞ்சலில் தெருவி லாட உயிரில்லாப் பேய்கு திக்க
மஞ்சள்பூ சியப ணையால் மண்டபம் செய்து கட்ட
நஞ்சில்லா சர்ப்ப மங்கு நடனத்தைச் செய்ய விட்டார். (20)

முன்னதிர் பறைகள் சாற்ற முடியாட மக்கள் மேவ
பொன்சித றூனே போகப் புரண்டுமே குடிகள் சூழப்
பின்புற மண்ப றக்கப் பெண்ணொடாண் வேக மாக
இன்னும்போந் தலைய விண்வாழ் இந்திரன் திகைக்கக் கண்டு. (21)

குண்டிடி போல்வெ டிக்கக் குதிரையிற் படைகள் மேவத்
தண்டொரு பக்கம் சூழத் தடதடென் றோடத் தேர்கள்
வண்டுகள் பறக்க எங்கும் வாத்தியம் ஓசை செய்ய
விண்டலஞ் சூழத் தூசி விண்ணவர் கவலை கொள்ள. (22)

கரிபடை யொருபு றத்தே கடல்போலப் பெருகிச் சூழ
எரிபடை சிதற மண்ணும் இடிபோலத் திரண்டு மேவ
வரிபடை மற்றோர் பக்கம் வாத்தியம் ஊதிச் சூழ
சரிபடை வந்து சேரச் சலம்போலப் பரவி நிற்க (23)

மன்னவர் சிலரு மங்கு மாமுனி வரும்வந் தெய்த
இந்நகர் வான மோவென் றிருடிகள் ஐயங் கொள்ளப்
பின்னுமங் கமைத்து வைத்த பேரழைக் கக்கண் டேக
மன்னர்கோன் கேட்டு நன்கு மாளிகை திட்டம் செய்தான். (24)

ராமன்றன் உருவைப் போல ரமயமாய்த் தக்கை கொண்டு
சாமள நிறத்திற் செய்து சகலபூ ஷணங்க ளோடு
நேமமாய் ரதத்தில் வைத்து நீலணி குதிரை பூட்டி
சாமரம் கொடிக ளோடு சாலைகள் சுற்றி வந்தார். (25)

மரங்களெங் கும்தீ பங்கள் ஒளிசெய மக்க ளோட
புரங்களெங் கும்ஜொ லிக்கப் புகையும்வா னத்தைப் பற்ற
சிரங்களுஞ் சுளிக்கிக் கொள்ளச் சிலையைப்போல் நிலையாய் நிற்கக்
கரங்களும் வலித்துக் கொள்ளக் கண்களும் நிலைத்த மாதோ. (26)

## கூனியின் செயல்.

படியேறக் கூனு முட்டப் பாதங்கி தவறி வீழ
இடையொடு கண்கள் வாட இருள்சூழ மூக்கி யேறக்
குடிதளர் எண்ணம் கொள்ளக் குதித்துவே கமதாய் மேவப்
படிவிழுந் தொடியப் பற்கள் பன்றிபோல் உருமிச் சென்றாள். (27)

* சுமந்திரன் ஸ்ரீ ராமனுக்கு திருஷ்டி நோரதவண்ணம் செய்த ஸூக்ஷம்.

கூனி கைகேசிக்கு சொல்வது.

மலையென வந்த தல்லல் மன்னனு னுனக்குத் தாயே
அலையுதே யென்றன் உள்ளம் ஐயோயி தென்ன தூக்கம்
கலைத்துமன் னவனுள் ளத்தை காகுத்தற் பெற்ற பாவி
உலைவைத்து விட்டா ளந்தோ உனதுசேய் பரத னுக்கே. (28)

கைகேசி கூனிக்குச் சொல்வது.

எனதருஞ் சேயி ராமற் கினியபி ஷேகஞ் செய்ய
இனமான பரத னுக்கு இடரேது இழைத்தாள் மூத்தாள்
உனது மாயத்தை யெல்லாம் உண்மையாய் நம்ப மாட்டேன்
கனமான வார்த்தை போதும் காதகி நடப்பாய் தூரம். (29)

கூனி கைகேசிக்குச் சொல்வது.

ராமனுக் கீந்தால் பட்டம் ரம்மிய பரத னுளான்
சேமத்தைக் கூற வந்தால் தீதான வார்த்தை சொன்னாய்
காமதம் செய்தால் துன்பம் சாருமே பின்னால் கைகாய்
காமத்தால் மன்னன் சூதைக் கருதாது விட்டா யல்லோ. (30)

கைகேசி கூனிக்குச் சொல்வது.

பரதனை விடஎன் றன்னைப் பட்சமாய்க் காப்பான் ராமன்
தரணியி லெவரு மில்லை தருமத்தி லவனுக் கீடே
புரமூன்றும் கெடினும் கேள்பொல் லாதுசெய் யான்எ னக்கு
அரசனீ தறிந்தா லுன்னை அயோத்தியில் வாழ வொட்டான். (31)

கூனி கைகேசிக்குச் சொல்வது.

பச்சத்தால் ராம னுக்குப் பரதனை விட்டுப் பட்டம்
இச்சையா யளிப்பான் வேந்தன் இதனையோ சித்துப் பாரும்
நிச்சயம் கஷ்டம் நேரும் நீனிறன் அன்னை யாலே
துச்சனை யிப்போ தேநீ தூரமே விடுப்பாய் கண்டாய். (32)

கைகேசி கூனிக்குச் சொல்வது.

ஒன்றமே யறியா மல்நான் உலகினில் பிறந்து விட்டேன்
என்னமாய் வனஞ்செல் கென்பேன் எனக்கொன் றும் தோன்ற [வில்லை
மன்னவர் எனதுசொல்லால் மகனைக்கான் போக வொட்டார்
இன்னலே இளையா ளாதல் என்றுமிவ் வுலகத் தென்றாள். (33)

### கூனி கைகேசிக்குச் சொல்வது.

முன்பெற்ற வரங்க ளாநீ முடிவாய்விட் டாயோ கைகாய்
மன்னவன் வந்தா லின்று மனம்போல வரத்தைப் பெற்று
இன்றோரா மன்கான் செல்ல ஈரேழு வருஷம் வஞ்சம்
ஒன்றமோ ராவுன் மைந்தன் உலகத்தை யாளச் செய்வாய். (34)

### கைகேசி செயல்.

மண்ணாளும் தேவி கைகை மந்தரை வலையிற் பட்டு
எண்ணமு முடிய வெண்ணரி இருள்சூழ்ந்த அறையில் சென்று
கண்யமாய் வரத்தைப் பெற்றுக் காகுத்தன் வனமே யேக
மண்ணினில் மரம்போல் வீழ்ந்து மன்னவன் வரவைப் பார்த்தாள்.

### தசரதன் செயல்.

இந்திர லோகம் சற்றும் இணையாகா நகரைக் கண்டு
மந்த்ரியை வெகுவா கத்தன் மனம்போலப் புகழ்ந்து பேசி
சுந்த்ரமாய் சபையைத் தானும் சுறுக்காகச் செல்ல விட்டு
யந்த்ரத்தில் கைகை தன்னை மன்னவன் காணப் போனான். (36)

கீச்சுகீச் சென்ற பேச்சும் கிஞ்சித்தும் செவிப டாமல்
நாச்சிமார் கூட்ட மங்கு நடைபெறு ததனைக் கண்டு
மூச்சுவிட் டயர்ந்து நின்று மோசமே தோவெ னக்கோ
காய்ச்சின ஈயத்தைப் போற் கலங்கியே ஓடி னானே. (37)

மன்னவன் தசர தன்றான் வந்துமண் மேல்வீழ்ந் துள்ள
தன்துணை வியைக்கண் டேங்கிக் கரங்களால் தழுவி வாரி
ஒன்றும்தோன் றாமல் நின்று உள்ளத்திற் கவலை கொண்டு
என்னவுன் விருப்ப மென்று இரக்கமாய் வேண்டி னானே. (38)

### தசரதன் கைகேசிக்குச் சொல்வது.

கண்ணைப்போல் கட்டிக் காத்த காயாம்பூ வண்ண னுக்கு
மண்ணினில் அபிஷேகிக்க மாமுனி நாள்நே மிக்க
கண்ணேநீ கவலை யோடு களைத்துமே படுத்தி ருக்கும்
எண்ணந்தான் ஏதோ எற்கு எடுத்துமே சொல்வா யென்றான்.

காணமே குறையு னக்கு கைகேசி சொல்லெ னக்குப்
பூணம்பட் டதைப்போ லிப்போ பதைக்குதே யுள்ள மையோ
ஆணையிட் டேன்கண் டாயவ் வருந்தவ மைந்தன் பேரில்
மாணவன் பரத னில்லா வருத்தமோ சொல்வா யென்றான். (40)

### கைகேசி தசரதனுக்குச் சொல்வது.

ஆதியில் தரும்வ ரத்தை அரசேநீ தந்தா லிப்போ
வேதனை நீங்கி வாழ்வேன் வேறேதும் எனக்கு வேண்டாம்
மாதராய்ப் பிறந்த பின்னர் வாழ்நல்மூத் தாளாய் மேலாம்
பாதகம் செய்த தாலே பாவிபின் னவளாய் வந்தேன். (41)

### தசாதன் கைகேசிக்குச் சொல்வது.

கொடுத்தேன்நான் வரமு னக்குக் குறைகளுண் டாயி னெல்லாம்
எடுத்துநீ யுரையிப் போது இனிதுடன் முறைதப் பாமல்
அடுக்குமோ உனக்கிச் செய்கை அற்பத்துக் காய்மண் மீது
படுப்பதிப் படிபோ சொல்வாய் பயித்தியம் கொண்ட மாதே. (42)

நாளையே மகுடஞ் சூட்ட நாடியே யிருக்கும் காலை
காளிபோல் தலைவிரித்துக் கண்ணேநீ! யிருப்ப தேனோ
மூளையும் கலங்கு மன்றோ முகத்தினல் லழகும் போமிவ்
வேளையே தடைசெய் யாமல் வேண்டுவ கேளா யென்றான். (43)

அயோத்தியை யாளு மன்னன் அன்பான தேவிக் காயிவ்
வையகம் கிடையா தேனும் வரவழைப் பேனிப் போதே
செய்யாத யாகஞ் செய்து சேனநாள் தவத்தில் பெற்ற
ஐயனுக் கபிஷே கம்காண் ஐயோயி தென்ன கோலம். (44)

### கைகேசி தசாதனுக்குச் சொல்வது.

மன்னவா வரத்தை நல்கி மனம்போல நடப்பீ ராஞல்
முன்னிலும் உமது சொல்லே முப்புவி புகழு மன்றோ
இன்றேயீ ரேழாண் டேக இராமனும் வனமே யொன்று
அன்பின்நற் பரதனுக்கு அரசினைக் கொடுப்ப தொன்றும். (45)

### தசரதன் செயல்.

இடிவிழு மரத்தைப் போல எதிரேமன் னவனும் வீழ
முடியினற் கற்கள் சிந்த முத்தார மலைய வெங்கும்
உடைகளும் பழுதே கொள்ள உடலெலாம் புழுதி பற்ற
அடிக்கடி ராமா வென்றே அங்கணம் புரண்டெ ழுந்து. (46)

### தசரதன் புலம்பல்.

ஐயோரா மனையோ கைகாய் ஐயோரா மனையோ கைகாய்!
மெய்யோசொல் லெனக்கு நானே மெத்தநாள் தவத்தைச் செய்
ஐயோரா மனையோ கைகாய் ஐயோரா மனையோ கைகாய் [தேன்
செய்யவே துணிந்தாய் ஐயோ செல்வனுக் கின்று மோசம். (47)

தசரதன் கைகேசிக்குச் சொல்வது.

என்னையே சோதிக் கத்தான் இப்படி சொன்ன யோநீ
இன்னம்இவ் விதமே சொன்னால் எனதுயிர் நிலாது கண்டாய்
பொன்னையே கருதித் தப்பாய் பொல்லாத மொழி சொன்னயே
அன்னமே யழச் செய்யாதே அடியையான் தொடவும் நின்றேன்.

கைகேசி தசரதனுக்குச் சொல்வது.

பரதனும் பிள்ளை யல்லோ பதறாமல் வீண யிப்போ
மரவுரி கொண்டு சேயை மன்னவா வனம னுப்பும்
இரக்கமாய் வேண்டி னாலும் இனியேதும் பயனே யில்லை
பரிந்தழு ததுவே போதும் பாலனை யழைப்பீர் நாதா. (49)

தசரதன் புலம்பல்.

ஐயையோ யிதுதா னென்ன அனியாய கால மோதான்
கைகேயி கெடுத்தா ளிப்போ கமலகா குத்தன் வாழ்வை
அயோத்தியை முடித ரிக்க ஆவலா யிருக்கும் காலை
கொய்தாளே சிரசை ஐயோ குழந்தாய்நா னேதாய் வாழ்வேன். ()

தசரதன் கைகேசியை வேண்டுவது.

தவம்செய்து பெற்ற சேயைத் தருமமோ வனம னுப்பப்
பவத்தைச்செய் யாதே கைகாய் பாதக நரகம் வாய்க்கும்
தவசிகள் கேட்டா லித்தைத் தசரத னென்றே யென்னைக்
குவலயத் துரையார் வாழாள் கோசலை யறிந்தா லித்தை. (51)

கைகேசி தசரதனுக்குச் சொல்வது.

வரங்களைக் கொடுத்த பின்பு வஞ்சிக்க வேண்டா மென்னைப்
பரதனும் அயோத்தி வந்தால் பலமாக எதிர்ப்பான் ராமன்
மரவுரி தரித்து மைந்தன் மன்னவா கானம் சென்றால்
அரசையென் மகனே யாள்வான் அறத்தையே விடாது கண்டாய்.

தசரதன் கைகேசிக்குச் சொல்வது.

உனதுசேய் பரதன் நன்றாய் உயரர சாண்டா லும்தான்
எனதுசேய் ராமன் வீட்டி லிருக்கட்டும் அவனை நானும்
வனம்புகச் சொல வெனக்கு வருமோதான் மனமும் நங்காய்
உனதுதாள் தொடுவேன் கண்டாய் உடனேயென் னத்தை நீக்கே

### கைகேசி தசாதனுக்குச் சொல்வது.

எனதுசேய் பரத னுக்கு இடரொன்று மணுகா வண்ணம்
உனதுசேய் ராமன் நாளை ஊர்வெளி வாழ வேண்டும்
மனம்போல மகவும் நிற்க மன்னவா வொப்ப மாட்டேன்
கனமுள வரத்தைப் பெற்றேன் கலங்குவ தேனோ வீணாய். (54)

### தசாதன் கைகேசிக்குச் சொல்வது.

சரயுமா நதிதீ ரத்தில் தனியேமா ளிகையைக் கட்டி
வரத்தினில் பெற்ற சேயை வாழவே விடுவா யாகில்
இரவோடு பகலு மாக இதமேநான் செய்து நிற்பேன்
பரதனே ஆட்சி தன்னை பரிவுடன் ஆளட் டுங்காண். (55)

### கைகேசி தசாதனுக்குச் சொல்வது.

கொடியகா னகமே யேகிக் கோதண்டன் பதினன் காண்டு
கெடுப்படி வந்தா லிங்கு கிடைக்குமிவ் வரசு மன்னு
அடிமைபோல் செய்யத் தொண்டு அழகாக மாட்டீர் கண்டீர்
படித்தவை யெல்லாம் போதும் பரதனை யழைப்பீர் இங்கே. (56)

### தசாதன் கைகேசிக்குச் சொல்வது.

சூரிய னின்றிப் பாரில் சுகமாக வாழ லாகும்
மாரி யில்லாமல் பைங்கூழ் மனம்போல விளைய லாகும்
ஏரியில் லாமல் மக்கள் இடரிலா துறைய லாகும்
நேரில்ரா மன்இல் லாமல் நிமைப்போதும் வாழ மாட்டேன். (57)

அல்லலே யடைந்து பெற்ற அன்பனைக் கெடுத்து என்னைக்
கொல்லவந் தவள்நீ யென்று குணத்தையா னறிந்தே னிப்போ
இல்லத்தில் வாழ வேவந் தெனக்குக்கோ டாலி யானாய்
நல்லது நீயேவாழ் நான் நாளையே யிருப்ப தில்லை. (58)

### சுமந்திரன் செயல்.

மந்திரி விரைவாய் வந்து மன்னவன் கோலங் கண்டு
விந்தையாய் முடிந்த தென்று வெகுவாகக் கவலை யுற்றுத்
தந்திர வார்த்தை கூறி தசரதன் தன்னை யேந்திச்
சுந்தர மூகா இந்தச் சோகத்தை விடுமென் றானே. (59)

சுமந்திரன் தசரதனுக்குச் சொல்வது.

வண்டேதப் புலியு மோடி வாடியே யொளிந்த வாபோல்
பெண்ணாத மனம்த ளர்ந்து பெரும்வலி விட்ட ரல்லோ
மண்ணாதும் முனமெ ழுந்து மதிதரும் வழியைக் கூறி
விண்ணாத நாளே யேநீர் வேடிக்கை காண நிற்பீர். (60)

தசரதன் சுமந்திரனுக்குச் சொல்வது.

கொல்லும்வேங் கையையு மந்தக் குடியனை வெறிய னோடு
பல்லுள்நஞ் சினையே கொண்ட பாம்பைசெய் யானை யும்பின்
பொல்லாத அரக்க ரோடு பூதம்பேய் நம்ப லாகும்
சொல் கேளாப் பெண்ணை நம்பி சுகமாய் வாழ்ந்த வருமுண்டோ.

மேல்விழும் மாதர் தம்மை மேலாக விடுவோ மாகில்
நூல்கொண்டு கோத்த வாறு நொடியில்தீங் கிழைப்பர் கண்டாய்
மால்கொண்டு மூன்ற டிப்பார் மண்விண்ணும் கொண்ட வாபோல்
பால்குடி சேயை நீங்கப் பாதகி வரத்தைப் பெற்றாள். (62)

ஊசியின் முனையி லிந்த உலகு முற்றும்மே கோத்து
நாசியின் முனைதொங் கச்செய் நயவஞ்சம் போல்கெ டுத்தாள்
ஆசையை யகற்றப் போமோ அலைதனை நிறுத்தி னாலும்
மோசம்செய் தவள்மாங் கல்யம் முடிவாய்நில் லாது கண்டாய். ()

முடிமன்னர் பணியும் நானே முழுமதி ராமன் தன்னால்
அடிபணிந் திரந்து மந்தோ அணுவுமே யிரங்க வில்லை
கொடியகா னகத்தில் வாழும் கொள்ளிவாய்ப் பேயென் சேயை
அடித்தருந் திடவே யெண்ணி அயோத்திவந் திருக்க லானாள். ()

சுமந்திரன் கைகேசிக்குச் சொல்வது.

மண்ணொடு விண்ணுக் கெட்டா மாறாத மனதைக் கொண்ட
புண்ணியர் தமக்கு வீணாய்ப் பொல்லாங்கு செய்தல் நன்றோ
எண்ணம்போல் உனது சேய்க்கிங் கரசையான் தரச்செய் கின்றேன்
அண்டர்கள் தினமும் போற்றும் அன்பனை வனம்வி டாதே. (65)

கைகேசி சுமந்திரனுக்குச் சொல்வது.

சுமந்திர ரேநில் போதும் சொகுசாக இங்கு வந்து
சமையம் போல பேசமீது சபையன்று கண்டாய் நானே
அமரர்கள் தடுத்த போதும் அயோத்தியில் வாழ வொட்டேன்
எமனூர்தா னிவர் சென்றாலும் எனக்கேதும் பழுதே யில்லை. (66)

சுமந்திரன் கைகேசிக்குச் சொல்வது.

உன்னைப்போல் பாவி யிந்த உலகினி லொருவ ரில்லை
மன்னவன் தவத்தில் வந்த மகனைநீ கெடுத்த தல்லால்
என்னமாய்த் துணிந்தா யையோ எமனூரைச் சேர்க்க வேந்தை
பின்னையே கஷ்டங் கொள்வாய் பெருமையாய் வாழ நிற்பாய். (67)

கைகேசி சுமந்திரனுக்குச் சொல்வது.

உனக்குத்தான் தகுமோ சொல்லும் உலகாளும் தேவி தன்னை
மனம்போலப் பமதாய்ப் பேச மகாராஜன் நேரில் நின்று
கனமான சேனை விட்டுக் காகுத்தன் முடியைச் சூட
மனமும்தான் துணிந்த தல்லோ மன்னவர் தனக்குக் கண்டாய். ()

சுமந்திரன் கைகேசிக்குச் சொல்வது.

இட்சவாகு குடியி லேதான் இப்படி நடந்த தில்லை
பட்சத்தால் பரத னைப் பார்மன்ன ரொப்ப மாட்டார்
புஷ்பமாம் குணமூத் தானைப் போகவே விட்டுக் கானில்
இஷ்டம்போல் முடிப்பா யாகில் இருடியால் சாபம் கொள்வாய். ()

கைகேசி சுமந்திரனுக்குச் சொல்வது.

இருடிகள் சபிப்ப தாலும் இனியேதும் தப்ப மாட்டேன்
அரசுக்கு உரிய னுனன் அன்பான பரதன் கண்டாய்
பெருமைதான் தருமோ சொல்லும் பெரியவனிங் கிருந்தால்
ஒருவன்கான் போவ தாலே உலகினில் பழிக்க மாட்டார். (70)

தசரதன் சுமந்திரனுக்குச் சொல்வது.

பேயுந்தா னறியுமோ சொல் பிள்ளையி னருமை கண்டாய்
ஆயிர் மறுபதாண்டு அறஞ்செய்து பெற்ற சேயோ
தாயினு மேலா வெண்ணித் தளராமல் நடந்தான் றன்னை
வாயினும் கூசாள் சொல்ல வாடுதே யுளந்தா னையோ. (71)

பாலுடன் கலந்த நீரைப் பவம்புசிப் பதுவோ ராது
நூலுடன் கோத்த கல்லை நோன்மையா யெண்ண னன்றே
சூலுடன் வாழும் பேயைச் சொகுசாகக் கட்டி காக்கக்
காலும்ரச் சித்த சேயைக் கான்விடச் சொன்னாள் பாவி. (72)

பல்லிகள் பகர்வதா லென் பாவிகள் படித்த தாலென்
செல்லுகள் பிறந்த தாலென் சிலந்திதான் வளர்ந்து மென்ன
மல்லர்கள் பெருத்து மென்ன மதமலை கொழுத்து மென்ன
இல்லவள் பதியைக் காக்காள் இனிமையாய் வாழ்ந்து மென்ன. ()

கல்வியும் மதியு மேற்றும் கர்த்தனும் பொன்னும் நிற்க
சொல்லையும் இவ்வூ மேற்காள் சோகமு மொழிய மாட்டா
மல்லிகை முல்லை சேர்ந்த மணந்தனைத் தினமே கொண்டு
புல்லையும் மோந்து வாழார் புண்ணியர் உலகில் கண்டாய். (74)

நடந்ததைக் கூறு தங்கு நம்பும்ரா மனையிப் போது
உடனேநீ ரழைத்து வாரும் ஒழிந்தது எனது வாழ்க்கை
உடலோடு உயிரும் கேளாய் உலகோடு பூண்டு மந்தக்
கடலோடு துரும்புந் தானே கலங்காதே நின்ற துண்டா. (75)

மன்னவன் சொனதைக் கேட்டு மரமென அசையா நின்று
முன்னாளில் செய்த ஊழ்தான் முடிவாக வாய்த்த தாலே
இன்றோடே யொழிந்து விட்ட திவாது புகழே யென்று
மன்னவன் றாள்ப ணிந்து மகன்றனைக் காணச் சென்றான். (76)

சுமந்திரன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

குவலயம் எங்கும் போற்றும் கோசலை பெற்ற செல்வா
தவம் செய்து ஈன்ற தந்தை தருணத்தி லழைக்க விட்டார்
புவிதனை யாள வந்தோர் பொறுமையை விடார்க ளென்று
தவசிகள் சொல்லக் கேட்டுச் சமையமுன் றனக்குச் சொன்னேன்.

ஸ்ரீராமன் செயல்.

சுமந்திரன் சொல்லைக் கேட்டு சுந்தரன் முகம லர்ந்து
சுமத்திரை சேயோ டங்கு சுறுக்காகத் தாயைக் கண்டு
அமரர்க ளேற்றும் மன்னன் அழைக்கவிட் டதையே கூறிச்
சமையம்தந் தையையே காணத் தாயையும் எதிர்பார்த் தானே. (78)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பெற்றநல் பரத னின்மேல் பிரியமாய் காத்து வந்த
சிற்றன்னை கைகை யேதோ செல்வனே சொலவ ழைத்தாள்
சற்றும்நீ யெதிர்த் திடாமல் சாந்தமாய் சொல்வ தேற்றுப்
பெற்றதந் தையைப்ப ணிந்து பெருமையாய் வாழ நிற்பாய். (79)

கௌசல்யா சொனதைக் கேட்டுக் கார்வணன் மனம்க ளித்து
தசரதன் தன்னைக் காணத் தம்பியோ டிரத மேறி
விசையாகப் போகு மந்த வீரனை மன்னர் வாழ்த்த
வசமான வாக்கைப் பெற்ற வஞ்சகி மனையைச் சேர்ந்தான். (80)

காதில்குண் டலம்ஜொ லிக்க சமுத்தில்முத் தார மாடக்
கோதண்டம் கையில்வி ளங்கக் கோத்தமா வணிபோல் மின்னப்
பாதரட் சைசப் திக்கப் படிகளைக் கடந்து சென்று
வேதனை படைத்த நாதன் வேந்தனைக் கண்டு சேர்ந்தான். (81)

மன்னனை யுற்றுப் பார்த்து மனம்கடு மாறி நிற்கத்
துன்பமே நேர்ந்த தென்ன லக்ஷ்மணன் துடிது டிக்க
அன்னையாம் கைகை தானும் ஆவலாய் வரவே யோடி
அன்பாயன் னவளைப் போற்றி அரசன்சே தியையே கேட்டான்.

கைகேசி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

எனதுசேய் பரத னுக்கிவ் வரசினைத் தந்தார் தந்தை
வனமேநா டாக வாழ்ந்து வருவாய்நீ பதினான் காண்டு
மனமும் சொல்லாம லந்தோ மன்னவர் படுத்து விட்டார்
எனதுசொல் தட்டா தின்று இருள்சூழ்முன் னுகப் போவாய். ()

சிற்றன்னை மொழியைக் கேட்டுச் செம்மையாய் முகம லர்ந்து
சற்றுமே கவலை யின்றித் தனயனும் தொழுது நிற்க
பற்றவே வில்லை பின்னோன் பரிந்தவன் றனையே தேற்றிப்
பெற்றமா தாவைக் காணச் சென்றனன் பெருமா னம்மா. (84)

தசரதன்.

பாவிகை கேசி சொல்லால் பாலன்வ தாய்நொந் தானே
ஆவிநீங் காமற் போமோ ஆரண்யம் சென்றால் மைந்தன்
தேவிகோ சலையுந் தோராள் திருமகன் றனைப்பி ரிந்து
பாவமே திழைத்திட் டானோ வனம்நாடிப் பாலன் செல்ல. (85)

ஸ்ரீராமன் செயல்.

மதிபெறு மன்னை யிப்போ மனம்போல்செய் வாளோ வந்த
மிதிலையின் பெண்ணும் கேட்டால் விடாதுகாண் நடப்பளோதான்
கதிரவன் தன்னைக் காணுக் கமலம்போல் முகமும் வாடி
அதிவிசை யாகச் சென்று அன்னையின் முன்னால் நின்றான். (86)

கலங்கியே நிற்க ராமன் கறந்தகௌ சல்யா முன்னில்
குலந்தன்னை விளக்க வந்த குழந்தையைச் சேர்த்தே கொண்டு
நலமான வார்த்தை சொல்லி நடந்ததைக் கேட்கத் தாயும்
கலங்கின வுள்ளத் தோடு கைகேசி சொல்லச் சொன்னாள். (87)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

காயாம்பூ மேனியா வக் கைகேசி யேது சொன்னாள்
தாயானு ளவளு னக்குத் தகாதன செய்ய மாட்டாள்
சேயாய்நீ பிறந்தா லெற்கு செயத்தையே பெறுவாய் மைந்தா
ஆயாசப் படாம லிப்போ தப்பனே உண்மை சொல்வாய். (88)

உனக்கபி ஷேக வேளை உவகையோ டவளே செய்ய
மனதினில் எண்ணம் கொண்டு மன்னைக் கேட் டிருப்பி னுந்தான்
எனக்கேதும் துன்ப மில்லை என்னைப்போ லவளும் தாயே
கனமாக வாழ நின்றால் கர்த்தனே யதுவே போதும். (89)

மூவற்குள் மூத்தோ ளாக முடிவாக வந்த தாலே
ஆவலாய் உனக்கே யன்னாள் அபிஷேகம் செய்ய நின்றாள்
தேவிமூ வரில்கை கேசி சிரேஷ்டமாய் நின்றாள் கண்டாய்
தேவனே குறைவற் றிந்தத் தேசத்தை யாண்டாற் போதும். (90)

ஸ்ரீராமன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

தம்பியாம் பரத னுக்குத் தந்தன ரரசைத் தந்தை
கம்பீர வனத்திற் கேக கடும்விடை தந்தாள் அன்னை
இம்பரில் நடந்த தங்கு இதுவேதான் பயண மம்மா
நம்பியே யிருந்த தாய்க்கு நலம்செய்யா தேகின் றேனே. (91)

கௌசல்யா சோர்ந்து வீழ்ந்து காதலைக் கண்ணால் பார்த்து
நிசமோநீ சொல்வ தென்று நெடுநேரம் கவலை யுற்றுத்
தசரதர் பெற்ற மைந்தன் தருமோகான் போக வென்ன
அசையாமல் படுத் திருக்கும் அன்னையைத் தேற்றி னானே. (92)

லக்ஷ்மணன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

அன்னையே கலங்க வேண்டாம் அண்ணனார் தமக்கு நாளை
மன்னவன் றனையெ திர்த்து மகுடம்நான் தரிப்பேன் கண்டாய்
இன்றோடே யொழிந்து விட்ட ராஜதர் மங்க ளெல்லாம்
ஒன்றுக்கு அஞ்ச வேண்டாம் உண்மையீ துணரு வாயே. (93)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

அன்னையின் சோகம் கண்டு ஆத்திரத் தாலே சொன்னை
என்னுடன் பிறந்த வர்க்கும் ஏற்காயிவ் விதமே சொல்ல
மன்னவர் வார்த்தை விட்டால் மகனெனச் சொல்வா ரோதான்
என்னமாய் பரதன் தன்னை எதிர்த்துநீ நிற்பாய் கண்டாய். (94)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மன்னவன் தனக்கு யானே மனைவியாய் வாய்த்த நன்மை
அன்பனை விட்டு நீங்கி அலையவு மாமனை னயோ
என்னமாய் வாழ்வே னேயிங் கெதிராக இலாம லோநான்
பின்னாக வனத்தில் வந்து பெரிதுமே கட்டிக் காப்பேன். (95)

லக்ஷ்மணன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

காமத்தில் இச்சை கொண்டு கைகேயி வார்த்தை கேட்டு
சேமமாய் வாழ்வெண் ணாது செல்வனை கானம் விட்டார்
தாமத மிலாம லிப்போ தாயேநீ கவலை நீங்க
ராமன்பின் னாக வந்தான் ராஜ்யத்தை ஆளச் செய்வான். (96)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

காமத்தா லோமற் றேதோ கடூரமாய் தண்டிக் கத்தான்
ஓமத்தைச் செய்த வற்கே உரிமைவாய்த் திருக்க வாவல்
சாமத்தா லலையும் தாயை சமயம்காக் காமல் விட்டு
ராமன்பின் னானே வென்று ராஜ்ஜியம் நகைக்க நின்றாய். (97)

ஸ்ரீராமன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

அழுவதால் பயனு முண்டோ அம்மணி சொல்லக் கேளாய்
பொழுதுசாய் முன்பே நானும் புறப்பட வேணு மம்மா
பழுதுநே ராதே யங்கு பரதனும் அரசை யாள
எழுந்திருப் பாய்நீ தாயே என்மீது கவலை வேண்டாம். (98)

கௌசல்யா சுமித்திரைக்குச் சொல்வது.

வேயுமுன் முடியை வாங்கி விட்டன ளோகை கேசி
காயொடு கிழங்கைத் தின்றால் காயம்பூ மேனி வாடும்
ஆயிர மறுப தாண்டும் அரசாளப் பெற்று மன்னர்
பேயும்செய் யாதவேலை பேதைசெய் தாளே வையோ. (99)

சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

எங்கணு நிறைந்த ராமன் எவ்விட மிருந்தா லென்ன
மங்களப் பெருமை யோடு மைந்தனும் வனத்தில் வாழ்வான்
சங்கைவே ண்டாமு னக்குத் தனயனும் பின்னே சென்று
அங்குநற் புகழைப் பெற்று அயோத்திவந் தணுகு வானே. (100)

ஸ்ரீராமன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

தம்பிநற் பரத னேசெய் தடைசெய்ய வேண்டா மென்னைக்
கெம்பீர வனத்தி ருந்து கேண்மையாய் வருவே னிங்கு
தம்பிலக்ஷ் மணநி னக்கித் தருணமே தொண்டு செய்வான்
நம்பிவந் தடைந்த மாதை நலமாகப் பார்ப்பீர் நீரே. (101)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

எப்படிப் பிரிந்தி ருப்பேன் எனதுசெல் வனேநா னிங்கு
இப்படி யெனக்கும் ஆமோ இக்ஷ்வாகு குலவி ளக்கே
தப்பிநீ திரும்பு வாயோ தண்டக வனமே சென்று
ஒப்பியன் னவளு ரைத்த துருக்குதென் னுளத்தை யையோ.(102)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

ஆவலாய்ப் பெற்ற தாயை ஆதரிப் பதுதா னன்மை
சேவித்துத் தொண்டு செய்தால் க்ஷேமமாய் வாழ்வா ரன்னை
மூவுல கேத்த நின்றோர் முடியாதோ தாயைக் காக்க
ஆவிதான் துடித்தி டாதோ அன்னையைக் காப்பீ ரண்ணா. (103)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

தாடகை வனத்தி லன்று தம்பிதா னெனக்குச் சொன்ன
பாடங்கள் எல்லாம் விட்டுப் பயனற்ற வார்த்தை சொன்னை
மாடமா ளிகையும் மேலோ மன்னவர் சொல்தான் மேலா
கூடநீ பிறந்தும் தம்பி கோபத்தால் தப்பி னாமோ. (104)

வனம்போகச் சொன்ன சொல்லே வரமுடன் தவமு மாகும்
கனமாய்வாழ்ந் தாலு மிங்கு கைகேசி மதிப்பா ளோநான்
வனத்தினி லிருந்து வந்து வரத்தில்பெற் றவளைக் காண்பேன்
வினைப்பய னென்னைச் சும்மா விடுமோநீ சொல்வாய் தம்பி.(105)

லக்ஷ்மணன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

மெத்தநாள் தவத்தில் பெற்ற மகனுடன் வனத்தில் மேவி
எத்திசை யவரு மஞ்ச எதிர்த்தவர் தம்மை வென்று
பத்தியாய் இருந்தெப் போதும் பாரில்வில் தாங்கி நின்று
சத்தியங் காப்பேன் தாயே சற்றுமே கவலை வேண்டாம். (106)

ஸ்ரீராமனும், இளையவனும், ஜானகியின் அந்தப்புரம் போதல்.

அன்னைஜா னகியைக் கண்டு அய்யனு மன்பரிப் பேசி
மன்னவன் தேவி சொல்லை மகிழ்வுட னவட்குக் கூற
மின்னலின் கொடிபோல் சீதை மேலாக மரம்போல் வீழ
தன்னிலை மறந்தி ராமன் தம்பிமேற் சாய்ந்து விட்டான். (107)

ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சந்திர ளொளிநேர் சீதை தானும்பின் வருவேன் கண்டாய்
சுந்தர மாமோ இங்கு சொல்வீர்நான் சிறையி ருக்கப்
பந்துவைப் பிரிந்திட் டாலும் பதியைப்பத் தினிநீப் பாளோ
மந்திரத் திருப்பே னென்று மன்னரே யெண்ண வேண்டாம். ()

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

வனத்தில்நீ வாழ மாட்டாய் வரவேண்டா மென்பின் னேதான்
சனகன்சு தறிந்தால் சோகம் தான்கொண்டு விடுவா னங்கு
மனம்போல வாழ விங்கு மன்னவர் கிருபை வைப்பார்
கனமதாய் வைப்பா ளென்னைக் கண்ணிணை யிமைபோல் தாயும். ()

ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பரிந்திங்கு காத்திட் டாலும் பதியிடம் சிரமம் மேலே
வருவினை வந்த காலை வாழ்வரோ வேந்தை விட்டு [சே
இருவர்தம் முடலு மொன்றென் றெனக்குச்சொன் னதுமே போச்
இருப்பது இனிமேல் பொய்யே இங்குவிட் டிப்போ னுலே. (110)

வலைப்பட்ட மானு யங்கு வரதனும் மனது நொந்து
தலைவிபின் னவனோ டேதான் தசரத னிடமே போக
அலையைப்போல் குடிகள் வந்து அங்ஙனம் துயரங் கொள்ள
நிலையாகப் பரதன் தன்னை நேசித்து வாழச் சொன்னான். (111)

கல்லையும் பெண்ணுச் செய்த காகுத்தன் மகிழ்ச்சி யோடு
கல்லான மனதைக் கொண்ட கைகேசி முன்னே நிற்க
அல்லலே பெரிதும் பட்ட அரசனும் சோகம் கொள்ளச்
செல்வனைக் கண்டு கைகை மரிவுரி சேர்த்தாள் கொண்டு. (112)

மரவுரி தரிக்க ராமன் மன்னவன் கண்டு வாட
பரதனு டாளப் பெற்ற பாக்யத்தால் கைகை பொங்க
வரத்தைப்பெற் றவளை ராமன் வணங்கியே விடையும் பெற்றுக்
கரத்தில்கோ தண்ட மேந்திக் காணவே தாய்பாற் சென்றான். (113)

தசரதன் சுமந்திரனுக்குச் சொல்வது.

இலக்மணன் துணையாய் நின்று என்மனத் துயரொ ழித்தான்.
உலகமுள் ளளவு மன்னன் ஒப்பறு புகழைப் பெற்றான்
கலகமற் றவள்தா னென்று கண்டனன் சுமித்ரை தன்னைக்
குலத்தைவாழ் விப்போன் றன்னைக் கொடியது செய்தாள் பாவி.

கானகம் போக ராமன் கருதினல் அவன்பின் போக
சானகி துணிந்த தாலே சகலமுந் திட்டம் செய்வாய்,
யானையே முதல்நாற் சேனை ஆரண்யத் திருக்க வேணும்
தானங்கள் செய்ய அங்கு தருகுவாய் பொருளைக் கண்டாய். (115)

கானக மழிக்கப் பின்னே கால்படை போக வேணும்
மானவர் வாழ அங்கு மண்டப மமர்த்த வேணும்
சேனையால் தின்னும் பண்டம் சேர்க்கவும் தினமே கொண்டு
தேனையே கறக்கும் கோக்கள் தெரிந்தனுப் பிடுவாய் கண்டாய். ()

கைகேசி தசரதனுக்குச் சொல்வது.

கொடுத்திட்ட வரமே போதும் குழந்தைமுந் தவன்முன் னுக்கு
அடுக்குமோ ஈதுன் மேன்மைக் கனைத்தும்ரா மனுக்க னுப்பக்
கடுகள வாய்ப்பொன் னேனும் சாகுத்தன் பின்போ காது
விடுத்திடு மிந்த மட்டும் வீணான ஆசை மன்னா. (117)

தசரதன் கைகேசிக்குச் சொல்வது.

எனதாவி யுடல்போ னாலும் எள்ளேனும் தப்ப மாட்டேன்
எனதுசேய் நிலையி னீங்கா னினுமேது வாய்த்திட் டாலும்
வனமேக மனமே கொண்டான் வஞ்சமாய்ப் பொருளை வேண்டான்
எனதுயிர் ராமன் பின்போம் எண்ணிய படிசெய் கைகாய். (118)

தசரதன் ஸ்ரீராமனை நினைத்துப் புலம்புவது.

பாலுட னமுத நல்ல பாயச மிங்கி ருக்க
காலமும் உனக்கா யிற்றோ காட்டில்நீ கனிகள் தின்னக்
கோலத்தைக் கண்டு வக்கக் கோறினேன் வெகுநா ளாகப்
பாலனே வனம்போ வென்றாள் பாவினா னேது செய்வேன். (119)

தசரதன் கைகேசிக்குச் சொல்வது.

திருமலர்க் கண்கள் கொண்ட தேவனைத் தவத்தில் பெற்றேன்
கருணையில் லாமல் சற்றும் காலத்தை முடித்தாய் அல்லோ
தருமத்தை விடாது சேயைத் தண்டக வனமே விட்டுப்
பெருமையாய் வாழப் பார்த்தாய் பெற்றசேய் சொல்லைக் கேளான்.

மரவுரி தரித்தி ராமன் மகிழ்வுடன் போகக் கண்டு
கரங்களா லறைந்து கூவிக் கண்ணனைச் சூழ்ந்து நிற்க
புரமெல்லாம் புகழே பெற்ற புண்ணியன் அறத்தைக் கூறித்
துரிதமாய்ச் சென்று தாயைத் தொழுதடி நின்றான் மாதோ. (121)

கௌசல்யா ஸ்ரீராமனைப் பார்த்துச் சொல்வது.

இந்தக்கோ லங்காண் டற்கோ இரங்கியே தவத்தால் பெற்றேன்.
சந்தேக மொழிந்த தின்று சமயமே யென்னைப் பாராய்
வந்தாளோ கைகை யிங்கு வனத்திற்கே யனுப்ப வுன்னை
தந்தையெப் படித்து ணிந்தான் தருமத்தை விட்டா னையோ.(122)

சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

தருமத்தில் நின்றோ னுக்குத் தாராதே துன்பம் அம்மா
பெருமையாய் வனத்தில் வாழ்ந்து பிள்ளையும் வந்து சேர்வான்
கருணையாய் சேயை வாழ்த்திக் கானகம் அனுப்ப நிற்பாய்
தருமத்தில் கட்டுப் பட்ட தசரத ரேதா னோ. (123)

ஜானகி கௌசல்யைச் சேவிக்கக் கௌசல்யா சொல்வது.

மகனுடன் வனமே செல்ல மனதிடம் இல்லை யம்மா
சுகமாய்நீ வாழ்வா யிங்கு சொல்லத்தகா தே சீதாய்
அகங்கொள்மண் ணதிற்பி றந்தே அயோத்தியில் வாழ வந்தாய்
தகுமோவுன் றனக்கிப் போது தண்டக வனமே போக. (124)

ஜானகி கௌசல்யாவுக்குச் சொல்வது.

கதியென நம்பி வந்தேன் கணவரே தெய்வ மென்று
மிதிலையின் பெண்ணைக் கொண்டு மீளொண்ணாத் துயரா யிற்று
விதிப்பய னென்னை மட்டும் விடுமோயோ சிக்க வேண்டும்
பதியைநான் பிரிந்தி டாமல் பட்சமாய் விடைநல் கம்மா. • (125)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

குடைநிழ லிருந்து மைந்தா குவலயம் ஆள் வந்து
சடைமுடி தரித்துக் காணச் சாந்தனே விதியோ வாழ
விடைதரக் கேட்ட போதே வனம்போக வேண்டா மென்று
தடைபுரிந் திருந்தால் தந்தை தரணியை யாளு வாயே. (126)

### சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

தண்ணீர்மேல் கமலம் போலத் தவிக்கும்சே யைவீ ணுகப்
புண்ணுகச் செய்யா தின்று பொருந்தியே வாழ்த்த நிற்பாய்
மண்ணோடு விண்ணும் போற்ற மகனல்நேர்ந் ததுஉ மக்கு
எண்ணம் போல் அனுப்பி வாழ்த்தி இறைவனைக் காண வாராய்.()

### கௌசல்யா சுமித்திரைக்குச் சொல்வது.

அபிஷேகக் கோல மோதான் ஆவலாய் வாழ்த்தச் சொல்லும்
தபசியா யேகும் சேயைத் தட்டாமல் வாழ்த்து வேனோ
சுபத்தையே காண வெண்ணிச் சுமத்திரா யிக்கா லத்தில்
உபவாச மாக நின்றும் உயிரற்ற உடலா னேனே. (128)

### கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மன்னர்சொல் காப்பதே போல் மாதாவின் சொல்காக் காமல்
துன்பத்தா லலைய விட்டுத் தூரமாய் போதல் நன்றே
என்னவாய்ப் பிரிந்தி ருப்பேன் எனக்கேதும் தோன்ற வில்லை
பின்னுக வழைத்துச் சென்றால் பெற்றதோர் தவத்தைக் கொள்வேன்.

### ஸ்ரீராமன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

அரசருந் தவனை நீங்கி அயோத்தியைச் சேர்ந்த பின்னர்
வரத்தின்மெய்ப் பயனைக் கொள்வீர் வாடுவ தேனோ வீணாய்
இரண்டையும் ஏக காலத் தென்னமாய் முடிக்கப் போவேன்
அரனோமற் றயனோ வல்லால் ஆதியோ சொல்வாய் அம்மா. (130)

### சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

துக்கமே யுளத்தில் கொண்டு துடிப்பதால் பயனே துண்டு
எக்காலும் புகழே பெற்றாய் இராமனை யீன்ற தாலே
தக்கதோர் மதியைக் கூறித் தடையேதுஞ் செயாதிப் போது
மக்களை யனுப்பி வாழ்த்தி மன்னனைக் காண வாராய். (131)

### கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கனமான வினையைக் கொண்ட கர்ப்பத்தில் தரித்த தாலே
மனம்போல்வா மூரம விங்கு மைந்தனே கெடுத்த துன்னை
இனமான தம்பி யோடு இருடியர் தம்மைக் கண்டு
வினத்தில்நீ சுகமே வாழ்ந்து வருகுவாய் வாழி வாழி. (132)

வெய்யிலில் நடக்க வேண்டாம் விளைந்ததை யெண்ண வேண்டாம்
பொய்யரோ டிணங்க வேண்டாம் புகையின்றித் தங்க வேண்டாம்
செய்யாது செய்ய வேண்டாம் சிறுவனைத் தூற வேண்டாம்[டாம்
அயோத்தியைத் தட்ட வேண்டாம் அன்னைசொல் மறக்க வேண்

வானத்தில் நனைய வேண்டாம் வழிதப்பிப் போக வேண்டாம்
தானங்கள் பெறவே வேண்டாம் தந்தையை யிகழ வேண்டாம்
மானையும் பிடிக்க வேண்டாம் மரங்களில் தங்க வேண்டாம்
கானகர் பகையும் வேண்டாம் கன்னியைப் பிரிய வேண்டாம். ()

விலங்கையும் கொல்ல வேண்டாம் விண்ணவர் பகையும் வேண்டாம்
நிலத்தினில் படுக்க வேண்டாம் நேரத்தில் நடக்க வேண்டாம்
அலகைவாழ் இடமே வேண்டாம் அறத்தையே வெறுக்க வேண்
மலையேற நேர்ந்த காலை மாதுவை விடவே வேண்டாம் [டாம்

நதியினில் இறங்க வேண்டாம் நாகத்தை யடிக்க வேண்டாம்
எதிர்த்தரக் கருமே நின்றால் இளையனைக் காட்ட வேண்டாம்
உதித்திடிற் பசியே தேனும் உண்ணா மிருக்க வேண்டாம்
கதியென வடைந்தோர் தம்மைக் காக்காமல் விடவே வேண்டாம். ()

பச்சியைப் பற்ற வேண்டாம் பாவைசொல் கேட்க வேண்டாம்
மெச்சுபூப் பறிக்க வேண்டாம் புற்றிடம் மேவ வேண்டாம்
இச்சைபோ லலைய வேண்டாம் இருடிசொல் தட்ட வேண்டாம்
இச்வாகு குலத்தின் சீரை எந்நாளும் கெடுக்க வேண்டாம். (137)

லக்ஷ்மணன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

ஆண்டறு பதாயி ரத்தால் அறத்தினில் பெற்ற சேய்க்காய்
தூண்டிலில் பட்ட மீனைத் துடிப்பதும் அறியேன் ஏனோ
ஊண்உறக் கம்மில் லாமல் ஊழியன் சிலந்தி யாகக்
கூண்டிட்டு முன்னாய் நிற்கக் கொசுக்கள்அண் டிடுமோ அம்மா.

கௌசல்யா லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

உன்னைப்போல் தம்பி வாய்த்த துத்தமி கர்ப்ப பாக்யம்
கன்றையே பிரிந்த தேனுப்போல் கலங்காம லிருப்பாளோ தாய்
துன்பத்தா லலையு மைந்தன் துறுவா னென னுன்னை
ஒன்றுமே கவலை யின்றி ஒழுக்கமாய் நிற்பாய் கண்ணே. (139)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தம்பிலக்ஷ் மணனை யங்கு தனியாகப் பிரிந்தி ராதே [வான
சிம்மத்தின் தொனியைக் கேட்டால் சிறவனும் பயத்தைக் கொள்
இம்மடி வாழி டத்தில் இரவிலே நடக்க வேண்டாம்
கம்பீர சொல்வி டாது கட்டியே காத்து வாராய். (140)

லக்ஷ்மணன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

வானமே யிடிந்த போதும் வலிகொள்பே யர்வந் தாலும்
யானைவந் தேகின் றாலும் அக்கினி யெரிந்த போதும்
மானலக்ஷ் மணன்நான் சற்றும் மனந்தள ராம லந்தக்
கானத்தில் மகனைக் காப்பேன் கலங்காதே வீணாய் அம்மா. (141)

சுமித்திரை லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

துரிதமா யோட வேண்டாம். தூரமாய் நடக்க வேண்டாம்
வருத்தத்தால் வாட வேண்டாம் வனத்தினில் பிரிய வேண்டாம்
இரவினில் படுக்க வேண்டாம் இளைத்திட்டால் கலங்க வேண்டாம்
கருத்தையே தட்ட வேண்டாம் காலத்தை நோக வேண்டாம். ()

அடிக்கடி யங்கே தேனும் அண்ணனுர் சொன்ன போதும்
துடிதுடிக் காது நின்று தொழுதடி பேவல் செய்வாய்
கடிகடித் துக்கோ பித்துக் கனிக்காகத் துரத்தி னாலும்
செடிசெடிக் கோடித் தேடி சேர்க்காம லெதிர்க்க வேண்டாம். ()

வனத்தினில் இருளே சூழ்ந்து மழைபெய் தாலும்ஓ யாமல்
கனமான வெள்ள மங்கு கடல்போலோ டியகா லத்தும்
மனம்போல எதுசொன் னாலும் மறுத்திடா மலேநீ காத்து
இனமான தம்பி யென்று எங்குமே புகழச் செய்வாய் (144)

அரக்கர்தஞ் சேனை யோட அடவியி லெதிர்த்த போதும்
மரபுதான் விளங்க வந்த மகனுக்கு முன்னாய் நிற்பாய்
கரத்தில்கோ தண்டம் கொண்ட காகுத்தன் பின்னாய் நிற்கப்
புரமூன்று கூடி னாலும் பொல்லாங்கு நேரா தப்பா. (145)

அன்னையாம் மதனி யங்கு அன்புடன் எதுசொன் னாலும்
துன்பமே மனதில் கொண்டு தூரமாய்ப் போக வேண்டாம்
பின்னாக நடப்ப தாலே பெருமையா யெண்ண வேண்டாம்
சொன்னசொற் படியே நின்றால் சுந்தரம் பெறுவா யன்றோ. (146)

சடைமுடி நற்கோ தண்டம் சகலசம் பத்தைவிட்டு
இடையில்வாள் கொண்ட தாலே ஏதுதான் பயனே கண்டாய்
குடைநிழல் வாழ வந்த குணநிதி பின்னைச் சென்று
நடைமெலி யாது காத்தால் நாடெங்கும் புகழ நிற்பாய். (147)

பொன்பூண்ட முடியி லிப்போ புல்லையே தரித்த தாலே
என்னுடை மைந்த னென்று எள்ளள வெண்ண மாட்டேன்
முன்னவன் நடக்கும் மார்க்கம் முழுதும்குற் றம்இல் லாதுஞ்
பின்னவன் தடாமல் காத்தால் பிள்ளையா யழைப்பேன் கண்டாய். (148)

லக்ஷ்மணன் சுமித்திரைக்குச் சொல்வது.

அண்டரால் புகழப் பெற்ற அரசரே தடுத்த போதும்
அண்ணனார் பின்னைச் சென்று அலைபோ லோ யாமற் சற்றும்
கண்ணிமை போல நின்று கானத்தில் கட்டிக் காக்கக்
கொண்டதோர் கோலம் தாயே குறையாது சொன்னேன் சத்யம். (149)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

எனக்குநீ மகனாய் வந்து ஏதிங்கு சுகமே பெற்றாய்
கனலாக வெரியு துள்ளம் காகுத்தா யெங்கன் வாழ்வேன்
சனகன்றன் நகர்பி றந்த சானகி வனத்தி லங்கு
பனியுடன் பசியால் வாடப் பதறுதே யுள்ள மையோ. (150)

ஜானகி கௌசல்யாவுக்குச் சொல்வது.

பனியுடன் பசிசே ராது பலவான்லக்ஷ் மணன்றான் காப்பான்
இனிமையாய் வாழ நிற்பாய் இடரேதும் நேரா தங்கு
கனிபுசித் திடவெ னக்குக் கருத்துண்டு வெகுநா ளாக
முனிவர்கள் வாழி டத்தில் மோசமும் உண்டோ அம்மா. (151)

கௌசல்யா ஜானகிக்குச் சொல்வது.

கண்டதைக் கேட்க வேண்டாம் காவலற் றிருக்க வேண்டாம்
புண்படச் சொல்ல வேண்டாம் பொறுமையை விடவே வேண்டாம்
தொண்டையுங் குறைக்க வேண்டாம் துன்பத்தால் கலங்க வேண்டாம்
வண்டுசே ரிடமும் வேண்டாம் வார்த்தையை மறக்க வேண்டாம். (152)

மிதிலைவாழ் வெண்ண வேண்டாம் மேல்முடிவாங்க வேண்டாம்
பதிவாக்கை மீற வேண்டாம் பசியினால் களைக்க வேண்டாம்
உதிக்கும்கால் தூங்க வேண்டாம் ஒண்டியாய் நடக்க வேண்டாம்
மதிதனை விடவும் வேண்டாம் வரதனைத் தூற வேண்டாம். (153)

கண்டவா றேக வேண்டாம் கரேமாய்ச் சொல்ல வேண்டாம்
மண்ணதிர் நடையும் வேண்டாம் மனதினில் கிலேசம் வேண்டாம்
கண்யத்தை விடவே வேண்டாம் கானக நேசம் வேண்டாம்
அண்டரை யிகழ வேண்டாம் அருமைசொல் தட்ட வேண்டாம்.

பின்னாக நடக்க வேண்டாம் பிரியன்கை விடவே வேண்டாம்
முன்னாகப் போக வேண்டாம் மூத்தோர்சொல் தள்ள வேண்டாம்
மன்னனை யிகழ வேண்டாம் மாமியைச் சபிக்க வேண்டாம்
பன்னசா லையைவிட் டேகிப் பனியினில் நனைய வேண்டாம். (155)

தருமத்தைத் தட்ட வேண்டாம் தரணியில் பழியும் வேண்டாம்
கருணையை விடவே வேண்டாம் கடந்ததை யெண்ண வேண்டாம்
துரும்புக்கும் இச்சை வேண்டாம தோஷமாஞ் செயலே வேண்டாம்
வுரும்வினைக் கஞ்ச வேண்டாம் மனதிடம் விடவும் வேண்டாம். (156)

சடையினம் பெண்ணைக் கண்டால் சங்கையே யுளத்தில் வேண்டாம்
துடிப்புசேர் குணங்கள் வேண்டாம் துறவிபால் அச்சம் வேண்டாம்
கொடிமலர் மணத்தைக் கண்டால் கோலத்தை யிகழ வேண்டாம்
அடிக்கடி கனிகட் காக அருஞ்சேனை யனுப்ப வேண்டாம் (157)

அந்தியில் உறங்க வேண்டாம் அழகினைக் குறைக்க வேண்டாம்
நிந்தையாம் வார்த்தை வேண்டாம் நெடுநேர மாட வேண்டாம்
விந்தையாய்ச் சொல்ல வேண்டாம் வீணாகத் துரத்த வேண்டாம்
மந்த்ரமாய்ச் சொன்ன தெல்லாம் மகளேநீ மனதில் கொள்வாய். (158)

தாடகை தனைக்கொல் சேயும் தம்பியும் அருகி ருக்கக்
கோடிதுன் பம்வந் தாலும் குறைகள்சார்ந் திடுமோ அம்மா
மாடமா ளிகையும் நல்ல மண்டப மில்லை யென்று
வாடிநில் லாது கானில் வாழ்ந்துநீ வருவாய் வாழி. (159)

புள்ளிமான் அழகைக் கண்டால் பொருந்தாதுன் மனமோ அங்கு
பிள்ளைபோல் அதைவ ளர்க்க பிரியமும் எவர்க்கு முண்டு
கொள்ளிவாழ் பேய்கள் வாழும் கொடியகா டாத லாலே
எள்ளள விச்சை யின்றி இருந்திடல் நலமே கண்டாய். (160)

பெரும்துயில் கொள்ள வேண்டாம் பேய்களுக் கஞ்ச வேண்டாம்
பெரும்குர லோசை வேண்டாம் பிணிக்கிடம் தரவே வேண்டாம்
பெரும்கானம் தங்க வேண்டாம் பெற்றோரை நினைக்க வேண்டாம்
பெரும்காற்றில் புகவும் வேண்டாம் பெருஞ்சொல்லை மறக்க வேண்டாம்.

சிறுவழி போக வேண்டாம் சிலைகள்மேல் குந்த வேண்டாம்
சிறுதூறல் நடையும் வேண்டாம் சீவனைக் கொல்ல வேண்டாம்
சிறுபாம்பும் தொடவே வேண்டாம் சிற்றூறல் அருந்த வேண்டாம்
சிறுவன்சொல் தட்ட வேண்டாம் சிறுகோடும் தாண்ட வேண்டாம்.

தங்கைகள் கவலை வேண்டாம் தண்டக காகூழி வேண்டாம்
திங்கள்முன் உலாவ வேண்டாம் செவியிடம் ஓத வேண்டாம்
புங்கனை மறக்க வேண்டாம் புதரிடம் போக வேண்டாம்
மங்கல மாய்க்கான் வாழ்ந்து மகனேநீ வருவாய் வாழி. (163)

சூரியன் நிழல்பட டாது சுகமாக வாழ்ந்த பின்னேன்
பாரினில் புகழை யெய்தப் பரிந்துமே துணையாய் நின்றான்
நேரத்தில் தனியே நின்றும் நிலையாகக் காத்து நிற்க
மாரியில் விடாம லங்கு மைந்தன்போற் காத்து வாராய். (164)

ஜானகி கௌசல்யாவுக்குச் சொல்வது.

முன்னுளின் தவமே யாகும் மூத்தமா மியாய்நீ வாய்த்தாய்
பின்னேனை என்று மங்கு பிள்ளைபோல் காத்து நிற்பேன்
மன்னனை வருநாள் மட்டும் மகன்துயர் கொளாது செய்வீர்
சொன்னவை மனதில் கொண்டேன் சோகத்தை விடுவீ ரம்மா.()

கௌசல்யா ஜானகிக்குச் சொல்வது.

இந்தநல் வயதி லந்தோ இப்படி நேர்ந்த தல்லோ
மந்த்ரத்தின் சுகவாழ் வின்றி மந்தரை செய்த தாலே
முந்தின வினையின் கூற்றாய் முடிந்ததை மனதில் கொண்டு
தந்தையின் தவத்தை இந்தத் தாரணி புகழ நிற்பாய். (166)

சொன்னதை யேநீ சொல்லிச் சோர்வுடன் படுக்க வேண்டாம்
குன்றின்மேல் ஓட வேண்டாம் கோபத்தால் நீங்க வேண்டாம்
சின்னசொல் கூற வேண்டாம் சீரற்ற செயலும் வேண்டாம்
நன்றியை மறக்க வேண்டாம் நாட்குமேல் தங்க வேண்டாம்.(167)

குளவிபோல் நிற்க வேண்டாம் குகையிடம் போக வேண்டாம்
குளத்தினில் இறங்க வேண்டாம் குடியையும் பழிக்க வேண்டாம்
கிளைகளில் தங்க வேண்டாம் கிட்டாத கேட்க வேண்டாம்
வளையிடம் படுத் திடாமல் வாழ்ந்துநீ வருவாய் வாழி. (168)

கானத்தில் இளையோன் தானும் காளைபோல் பயமோ ராமல்
யானையைக் கண்டால் செல்வான் அதனைநீ தடுத்து நிற்பாய்
வானத்தில் சொலைவிட் டாலும் வரிசைதப் பியகா லத்தும்
மானவன் தன்னை யன்பாய் மகவுபோற் காத்து வாவா. (169)

பொல்லாத கால மங்கு போக்குநல் வழியு ணர்ந்து
வல்வினைப் பயனால் வாடும் வரதனைக் காக்க நிற்பாய்
கல்லின்மேல் எழுத்தும் போல கருணையாய் உனக்கிப் போது
சொல்லிய தைவி டாமல் சுகமாக வருவாய் வாழி. (170)

ஜானகி கௌசல்யாவுக்குச் சொல்வது.

ஓமஞ்செய் பயனால் அங்கு ஒன்றமே இடர்நே ராது
சேமமாய் வனத்தில் வாழ்ந்து செய்களு மயோத்தி சேர்வார்
சாமத்தால் அலைய வேண்டாம் சாதுக்கள் இடமே நிற்போம்
தாமத மிலாம லிந்தத் தருணமே விடைஅ ளிப்பீர். (171)

கௌசல்யா ஜானகிக்குச் சொல்வது.

உமதுகற் பின்மாண் பாலே ஒப்பில்லாப் புகழும் பெற்றுச்
சுமந்தகெற் பமுமே மண்ணில் சுகம்பெற நிற்ப தாலே
அமரர்கள் தினமே அந்த அடவியில் வருவ துண்டு
கமலம்வாழ் அன்னத் தைப்போல் கருத்தொடு வாழ நிற்பாய். ()

சொன்னதெல் லாம்உ னக்குச் சுகம்பெற வழியே யாகும்
துன்பமே மனதில் கொண்டு துடிக்காதே வீணாய் அம்மா
முன்னாளில் வினையு மங்கு மூண்டாலும் கலங்கி டாமல்
இன்னலே சாரா வண்ணம் இக்ஷ்வாகு குலத்தைக் காப்பாய். (173)

முக்கால மறிந்து செய்யும் முழுமதி கொண்ட மன்னன்
எக்கால வினையி னாலோ இப்படி செயத்து ணிந்தார்
திக்கற்றோ ராகி அங்கு சீரற்று நிற்கும் என்றன்
மக்களும் அலையா வண்ணம் வனத்தில்நீ நடந்தால் போதும். ()

ஜானகி கௌசல்யாவுக்குச் சொல்வது.

மகனது சொல்லை அங்கு மறுத்துநான் விடுவ தில்லை
பகைவர்க ளெதிர்த்த போது பலவானைப் பிரிவ தில்லை
வகையற்று நின்றோ மென்று வனத்தில்வா டுவது மில்லை
அகம்கொண்டு முன்நின் றோனும் அழியாமல் வாழ்வ தில்லை. ()

கௌசல்யா ஜானகிக்குச் சொல்வது.

ஆண்டாண்டு தவத்தைச் செய்து அரசாளப் பெற்ற தந்தை
நீண்டநாள் கானம் விட்ட நீங்காத துயரந் தன்னால்
தூண்டிலில் பட்ட மீன்போல் துடிக்கவே வைத போதும்
ஊண்உறக் கமில் லாமல் ஊழியந் தட்ட வேண்டாம். (176)

மனதினில் இலேசம் கொண்டால் மனைவியை வைவ துண்டு
இனத்தினில் கலகம் நேர்ந்தால் ஏமனையு மழைப்ப துண்டு
தனம்குறைந் திட்ட போது தர்மத்தை வெறுப்ப துண்டு
வனம்வாழ நேர்ந்த காலம் வாழ்க்கையை வெறுப்ப துண்டு. (177)

பிணியினால் அலையும் காலம் பெண்ணையே வெறுப்ப துண்டு
துணையின்றி நிற்க நேர்ந்தால் தூரத்தை வெறுப்ப துண்டு
கணையினால் துடிக்கும் போது கர்த்தனை வெறுப்ப துண்டு
குணம்வாய்த்த பெண்கள் மண்ணில் கோபத்தை வெறுப்ப துண்டு.

ஜானகி கௌசல்யாவுக்குச் சொல்வது.

கோபமென் றுரைக்கும் வார்த்தை குவலயம் கேட்ட தன்றி
பாவத்தை செய்தே னில்லை பயம்கொள்ள வேண்டாம் வீணாய்
ஆபத்தும் அணுகா தங்கு அயோத்திக்கு வந்து சேர்வோம்
சாபத்தால் அலையும் வேந்தைச் சமையமே தேற்று வாயே. (179)

பதியையே சேர்ந்து வாழாப் பாவையர் பதரே யாவார்
மதியையே சிதற விட்டோர் மண்ணூசிக் கிணையு மாகார்
எதிர்த்துமே பதியைச் சொன்னோர் ஈனரா யிகழைச் சேர்வார்
சதிசெய்தோர் சர்ப்ப மாவர் சாதுக்கள் சொல்லைக் கேட்டேன். ()

கௌசல்யா ஜானகிக்குச் சொல்வது.

கருப்பமே வினைகொண் டாலும் கண்ணும்புண் ணியம்பெற் றில்லை
பெரும்பாவம் செய்த தாலே பிரியவே செய்த தன்னைத்
திரும்பியே வருகும் நாளில் தேகமும் கெடாமல் வாழ்ந்து
திருஉள்ளம் கொண்டு நிற்கச் செய்தேனே தவமும் காணேன். ()

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

துஷ்டஜெந் தழிக்க நேர்ந்தால் தூரமாய் மறைந்த டிப்பாய்
கஷ்டங்கள் வாய்க்கா வண்ணம் காலத்தை நினைத்துச் செய்வாய்
இஷ்டராய் அடைந்த போது எதிர்காலம் நோக்கிக் கொள்வாய்
நிஷ்டையில் சாது கண்டால் நில்லாது நேராக் காண்பாய். (182)

உபாயத்தை யறிந்து செய்தால் உலகினில் எவருக் கும்தான்
அபாயமும் நேர்வ தில்லை அப்பனே மனதில் கொள்வாய்
கபாலத்தைக் கையிற் கொண்டான் கயிலைவாழ் ஈசன் தானும்
சுபாவத்தை விடவே வேண்டாம் சுந்தர பெண்ணைக் கண்டால். ()

வாலற்ற குரங்கு வாழும் வனத்தினில் தங்க வேண்டாம்
பாலற்ற கனியைக் கண்டால் பறித்துநீ புசிக்க வேண்டாம்
காலமற் றிடுகா லத்தில் கனலிடம் நிற்க வேண்டாம்
கோலமுற் றெப்போ காண்பேன் குழந்தாய்நா னேது செய்வேன்.

ஸ்ரீராமன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

தள்ளாத வயதி லிங்கு தவிக்காதே வீணாய் அம்மா
எள்ளள விடர்நே ராது இளையோனைக் கட்டிக் காப்பேன்
கொள்ளிவாய் அரக்க ரேனும் கோதண்டன் முன்னே நில்லார்
உள்ளம்போல் வனத்தில் வாழ்ந்து ஊழியம் வருவேன் செய்ய. ()

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சந்தேகம் கொள்ளி டத்தில் தம்பியை விடுக்கா தங்கு
முந்திப்பா ணம்வி டாதே முனிவர்கள் வாழி டத்தில்
தந்தையும் நினையா தன்று தவசியின் சேயைக் கொன்றார்
மந்த்ரமாய்ச் சொன்ன தெல்லாம் மகனேநீ மனதிற் கொள்வாய். ()

கொடுமைக ளிழைக்க போதும் கோபத்தை மனங்கொள் ளாமல்
நடுநிலை யாக நின்று நலமான வார்த்தை சொல்வாய்
தடுத்துமே விடுவா ராஞல் தசரத மகன்றா னென்று
விடுத்துப்பா ணத்தை யங்கு வீரனுய் வருவாய் வாழி. (187)

அற்பவல் லமையுள் ளோர்கள் அடவியிற் றெடுத்த போதும்
விற்பிடி கண்டி ரங்கின் விண்ணவர் புகழக் காப்பாய்
பெற்றதந் தையின்பு கழ்க்கும் பெருமைக்கும் அழிவு றாமல்.
நற்குணம் வாய்த்து நின்று நாட்டுக்குள் வருவாய் வாழி. (188)

சீரங்கன் கமல பாதம் சிரத்தையாய்த் துதித்து நின்றால்
பூரண கிருபை யோடு பொல்லாங்கு இன்றிக் காப்பார்
வீரமே யிருந்த போதும் விமலனு ளருளில் லாது
காரியம் முடிய மாட்டா காகுத்தா மனதில் கொள்வாய். (189)

கௌசல்யா லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

அண்ணனார் மனங்கொள் ளாமல் அடவியி லெதுவு மிஞ்சி
எண்ணம்போல் செய்ய வேண்டாம் இடர்வந்து நேரும் கண்டாய்
விண்ணவர் உலாவும் பூமி வினையாக மூனு மப்பா
கண்யமாம் எனது சொல்லைக் கண்ணேநீ மனதில் கொள்வாய். ()

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சரயுமா நதிதீ ரத்தில் சாதுக்கள் இடமே யுண்டு
பரதன்றான் வருநாள் மட்டும் பதறாமல் அங்கு நிற்பாய்
அரசரெண் ணத்தை மாற்றி அபிஷேகம் தன்னைச் செய்ய
பரிந்துனை யழைப்பா ரென்று பாலனே தோன்று தப்பா. (191)

அபகாரம் செய்த போதும் அரசதின் புகழ்கெ டாமல்
உபகாரம் செய்ய நிற்பாய் உனக்கேதும் இடர்நே ராது
அபசார மாய்ச்சொன் னாலும் அடவியில் வாழும் மக்கள்
உபசார மாகக் கொண்டு உலகினில் கீர்த்தி கொள்வாய். (192)

ஸ்ரீராமன் செயல்.

கௌசலை சுமித்ரை போற்றிக் கனமாக விடையைப் பெற்று
தசரதன் தன்னைக் காணத் தம்பியோ டாங்கு போக
அசையாம னின்றே யன்னை அன்பனைக் கண்டு ஏங்க
விசையாக நடந்து ராமன் வேந்தனுக் கெதிரே நின்றான். (193)

தசரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

புடித்துநான் படித்தி ராமா பலவாறாய்ச் சொல்லிக் காலைப்
பிடித்துக்கொண் டும்கை கேசி பிரியச் செய்தாளே யுன்னைத்
துடிக்குதே யென்ற னுள்ளம் தோகைபோல் சேர்த்துத் திவ்ய
முடியில்புல் [illegible]து முன்னால்வந் ததனைக் கண்டு. (194)

அபிஷேகம் செய்யும் காலை அயோத்தியி லெங்கும் போற்ற
சபைதனை யலங்க ரிக்கச் சமர்ப்பித்தேன் ஆறி லட்சம்
உபவாச மிருந்தே னிங்கு உனக்காகக் கொலுவின் முன்னே
தபஜியாய் நிற்கக் கண்டு தசையுந்தான் துடிக்கு தையோ. (195)

முன்னூறி லட்சத் தேயோர் முத்தாரங் கொண்டேன் மைந்தா
முன்கட்டும் கழிக்கத் ராயி மூவாய்ர லட்ச மாச்சு
பன்றிதான் மணமோ ராப்போல் பாவிகை கையு னக்கு
என்னமாய்த் துனரிந்தா லேயோ மரவுரி ஈயத் தானே. (196)

கடம் ஒன்பா மூன்றாலட்சம் கணையாழி நூறு லட்சம்
இடையினி லணிபொன் னாடை இரண்டரை லட்சம் ராமா
முடியினி லணிகி ரீடம் முப்பது லட்சங் கண்டாய்
கொடிமறை மரம்போல் நல்ல கோதண்டம் பிடித்து நின்றாய்.(197)

முடிக்கபி ஷேகம் செய்து முகம்பார்க்க எண்ணம் கொள்ள
உடுத்திடும் ஆடை தானே உரகமாய்த் தீண்ட என்னைக்
கடித்திடு விஷம்என் னோடு காகுத்தன் றன்னைப் பற்றாங்
கொடியசர்ப் பத்தைப் போலக் குவலயம் கண்ட தில்லை. (198)

அருந்தவஞ் செய்து பெற்றேன் அரசாள மகனே யானும்
மாவுரி யதனைத் தந்தாள் மாபாவி யேது செய்வேன்
புரமெல்லாம் புகழப் பெற்ற புண்ணியன் ஜனகன் பெண்ணே
கரிகளைக் கண்டா லஞ்சும் கமலினை தேற மாட்டேன். (199)

அறுபது ஆண்டு செய்த அருமையாம் தவத்தால் பெற்றாங்
துறவிபோல் வனமே யேகத் துணிந் திட்டாய் தீரன்போல
மறுத்தனள் கைகை தானும் மகனேநான் செய்த வெல்லாம்
அறுபது லட்சம் தானும் ஆணிமுத் தைக்கொண் டேகாய் (200)

கானகத் துன்னைக் காக்க காவலும் மறுத்து விட்டாள்
கானலைக் கண்டா லங்கு கலங்குமே நெஞ்ச மையோ
மானத்தைக் கெடுத்தாள் தன்னை மனம்போல வாழ விட்டு
சேனையோ டுன்னைக் காக்க செல்வனே வருவேன் பின்னால்.(201)

### ஸ்ரீராமன் தசரதனுக்குச் சொல்வது.

உலகெல்லாம் போற்ற நின்ற உத்தமா மகனு லங்கோ
கலங்காத நெஞ்சம் கொண்டு கைகேசி வரத்தைக் காப்பீர்
பலவான்நற் பரதன் தன்னால் பாரினில் புகழைக் கொள்வீர்
நலமாக விடையே தாரும் நாழிகை யாகு தெந்தாய். (202)

### தசரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கண்ணாரக் கண்டு எம்போல் கலிதீர்க்க இங்கு என்றன்
கண்களும் காட்சி யற்ற கையேனும் பிடிக்க வாராய்
எண்ணமும் தடுமா றாங்காண் என்னையும் விடுத்துப் போனால்
மண்மீது வாழ மாட்டேன் மகனே நான்கொடிய காலம். (203)

ஸ்ரீராமன் தசரதனுக்குச் சொல்வது.

தவத்தினால் என்னைப் பெற்ற தந்தையே தாளப ணிந்தேன்
தவசிக ளிடமே வாழ்ந்து தடையின்றி வந்து காண்பேன்
புவனமும் புகழச் செய்யும் புனிதன்நற் பரதன் தன்னைப்
பவத்தையே செய்த வற்றால் பார்க்கவும் சமய மில்லை. (204)

தசரதன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

அண்ணனை வனத்தில் காக்க அப்பனே துணிந்த தாலே
மண்ணொடு விண்ணும் போற்ற மலையைப்போல் முன்னே நிற்பாய்
புண்ணியன் பரதன் தானும் பொருந்தியே வாழா னென்று
எண்ணமே உதிக்கு தையோ ஈசன்றன் செயல்தான் யாதோ.(205)

தந்தையின் கோலங் கண்டு தாட்டீக மனதே கொண்டு
மந்திரம் விட்டு நீங்க மன்னனைப் பணிந்து போற்றி
சுந்தர கைகா தானும் சொன்னவை யெல்லாம் கேட்டு
அந்தர மனையை விட்டு அயோத்திமா வீதி வந்தான். (206)

அயோத்திவாழ் குடிக ளெல்லாம் அன்பனை யடர்ந்து சூழ்ந்து
கைகேசி தனைவெ றுத்துக் கானகம் வருவோ மென்ன
மெய்ப்பத மளிக்கும் தேவன் மெய்சொலித் தடுக்கப் பின்பு
ஜெயஜெய வென்று கூற ஜெயராமன் ரதம்சேர்ந் தானே. (207)

* ஸ்ரீராமன் செயல்.

சித்திரை பூர்வ மைந்தில் சீதையும் தம்பி தானுஞ்
சித்திர ரதத்தி லேறச் சிறப்புடன் விடுத்தான் சென்னி
பூத்துகொண் டோனைக் கொல்லப் பணிவாக அண்டர் வேண்ட
மெத்தநாள்தவத்தைச் செய்தோன்மேல் நின்றுமகனைப் பார்த்தான்.

தசரதன் செயல்.

அழகொடு வருமி றப்போ அபிஷேகம் செய்து கொண்டு
விழிசுழல் கிறதெ னக்கு விநோதத்தைக் காண மைந்தா
வழியாக வருவா யென்று வஞ்சகி யின்கால் பற்றிப்
பழியெனக் கெய்தா வண்ணம் பட்டங்கட் டுவனென் றானே. ()

பித்தம்கொள் பேதை யாகிப் பெருமூச்சு விட்டு மன்னன்
கத்தியே யழுதான் கண்டு கரத்தினால் தழுவத் தாதி
சித்திரப் பதுமை போலச் சிறுவனை யுற்று நோக்கிப்
புத்தியு மாறி யந்தப் புண்ணியன் மரம்போல் வீழ்ந்தான். (210)

---

* 25-வது வயதில் சென்றான்.

பாம்பினைக் கொடுவந் திங்கு பாலூட்டி வளர்க்க வேநான்
காம்பீர தவத்தில் பெற்ற கண்ணனை வனத்தில் விட்டாள்
தீம்பிவள் செய்வ தாகத் தெரிந்திருந் தாலெ னக்கு
காம்பிலே கிள்ளு மாபோல் கானத்தில் விட்டி ருப்பேன். (211)

கட்டியே விடாது காப்பேன் ராமனைக் கண்போ லென்று
சட்டமாய் சொன்னு ளிந்தச் சமையத்தில் செய்தாள் மோசம்
எட்டுமா திசையும் போற்ற எழிலரா சாண்டு வந்தும்
துட்டிகை கேசி யென்று தோணுது விட்ட தையோ. (212)

சிம்மத்தைக் கொடுவந் திங்கு சிறப்பாக ஊட்ட லாகும்
கொம்புள்ள காண்டா மாவைக் குழந்தைபோல் காக்க லாகும்
வெம்புலி கரடி கோநாய் மேவியே வாழ லாகும்
கெம்பீர மகனை விட்ட கெடுகாலி யாகா தப்பா. (213)

எட்டிக்குப் பாத்தி கட்டி இளநீர்விட் டேவ ளர்த்துச்
சுட்டுண்டா லும்காய் தன்னைச் சுவைதரா ததுவே போல
தொட்டது முதல்கை கேசி துன்பங்கொள் ளாது காத்தும்
விட்டாளே மகனைக் கானம் வேகுதே யுளந்தா னையோ. (214)

தள்ளாத வயதி லுன்னைத் தவத்தையே செய்து பெற்றும்
கள்ளக் கைகேசி யின்று கலங்க விட்டாளே ஐயோ
எள்ளுநீ ரும்இ றைப்பாய் எனதரு கிருந்தால் மைந்தா
கள்ளள வும்பெண் டீரை ஏதாக நம்பு வேனே. (215)

கைகேசி யைக்காண் போதே கண்ணுக்கு விலங்காய்த் தோற்ற
நையுதே யுளந்தா னிப்போ நான்நெடு நாட்கள் வாழேன்
கைபிடித் தவனை வீணே கலங்கவே விட்ட தல்லால்
வையகம் புகழு முன்னை வனத்தில்விட் டாளே ஐயோ. (216)

**ஸ்ரீராமன் சென்றதுகேட்டு கௌசல்யா சுமித்திரைக்குச் சொல்வது.**

பஞ்சணை படுத்த ராமன் படுப்பதேன் புழுதி தன்னில்
நெஞ்சமு முருகு தையோ நினைக்கநி னைக்கத் தானே
வஞ்சனை செய்தாள் பாவி வரத்தினில் பெற்ற சேய்க்குப்
பஞ்சைபோல் வனத்தி ருந்தால் பாலனும் பெருமை சேரான். (217)

சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

இந்திரன் முதலாந் தேவர் இருஷிகள் சித்தர் போற்ற
மந்தரஞ் சுமந்த ஈசன் மகனென வந்தா னம்மா
விந்தைதா னேதோ செய்ய வினையேதோ தூண்டி னன்கோன்
சுந்தரன் புகழைக் கொள்வான் சோகமும் விடுவாய் அம்மா.(218)

கௌசல்யா சுமித்திரைக்குச் சொல்வது.

மன்னவன் ஜனகன் புத்ரி மகனுடன் வனமே சென்று
என்னமாய் வாழ்வா ளங்கு எனக்கேதும் தோன்ற வில்லை
கன்னியா ளுடன்கான் வாழ்ந்தால் கண்டகர் தான்வந் தங்கே
துன்பத்தைக் கொடுத்தால் வெல்லுந் தோள்வலி மக்கட் குண்டோ.

சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

தாடகை தனைக்கொல் ராமன் தனைத்தேவ ரெதிர்க்க லாற்றார்
வாடவேண் டாம வற்காய் வரந்தரும் தேவ னவான்
ஈடிலான் முன்னில் லார்கள் இராக்கதர் வனத்தி லங்கு
ஆடவர் வருவா ரின்பாய் ஆயாசம் வேண்டா மம்மா. (220)

மன்னவன் தசர தன்தான் மகவுக்காய் அழப்பு ரண்டே
அன்னைகோ சலைப டுத்து அடர்ந்ததுக் கத்தால் வாட
பின்னுகச் சென்றோ ரெல்லாம் பெம்மானை விட்டு வந்து
துன்பமாம் மனதோ டேகித் துடிதுடித் தேகின் றார்கள். (221)

வனம் புகுதல்.

கங்கையிற் கரைபோய்ச் சேர்ந்து கர்த்தனுங் * குகனட் புற்று
மங்கள சுமந்தி ரன்றன் மனம்போல விடைபெற் றேக
அங்குள்ள விநோத மெல்லாம் அன்னைஜா னகிக்குக் காட்டக்
கங்கையைக் கடந்து போகக் கரையிலோ டத்தைச் சேர்த்தான். ()

குகன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பாதமே கல்லிற் றுக்கப் பாவையாய் நின்ற தாலென்
நாதனே சொலவுங் கேட்டேன் நடந்தது நிசமே யானால்
ஓதிடில் எனக்கு முன்னர் ஓடத்தி லுள்ள கற்கள்
வேதனை யனுகா வண்ணம் வெளியிலே யெறிவேன் கண்டாய். ()

* சிருங்கிபேரத்திலிருக்கும் கிராத ராஜன்.

ஸ்ரீராமன் குகனுக்குச் சொல்வது.

இந்தக் காலோட்ட கல்லில் எனதுகால் பட்ட போதும்
சந்தேகம் வேண்டா மையா சாராது பெண்ணு கத்தான்
சுந்தர ஓடத் தேற்றிச் சுறுக்காகச் சேர்ப்பா யென்ன
அந்தநல் வார்த்தை கேட்டு அன்னையும் நகைத்தாள் மாதோ. (224)

கடல்போலப் பெருகி யோடும் கங்கையி லோடம் போகத்
திடமற்று அன்னை தானும் தேவனைச் சேர்த்த ணைக்கக்
கடைக்கண்ணி னருளால் தேற்றிக் காகுத்தன் குகனை யங்கு
விடச்சொல்லி யோடம் மெள்ள விநோதமாய்ப் போய்ச் சேர்ந்தாரே.

கங்கையின் கரையைச் சேர்ந்த காகுத்தன் விடையும் பெற்று
மங்கள கரமா யுள்ள மரத்தடி தங்கக் கண்டு
அங்கனம் ஜனகி தானும் அடவிதா னிதுவோ வென்ன
மங்கையைத் தேற்றி யன்பாய் மன்னவன் இருள்க ழித்தான். ()

வானகம் வையம் போற்ற வரமுனி சொல்லைக் கொண்டு
தானகேள் பலவுஞ் செய்து தரணியை யாளப் பெற்ற
மானவ ரிருவ ரங்கு மாமுனி வரரைத் தேடிக்
கானத்தில் நடந்து போகக் கதிரவன் வாட லானான். (227)

பரத்துவா சரையே கண்டு பாதங்கள் பணிந்து நின்று
மரவுரி கொடுவந் தத்தை மகிழுட னெடுத்துக் கூறக்
கருவற அரக்கர் முற்றும் காகுத்தன் வந்தா னென்று
கரத்தினால் தழுவிக் கொண்டு களையைமாற் றினன்காண் மாதோ.

எத்திக்கும் புகழே கொள்ள இருடியின் சொல்லைக் கேட்டுச்
சித்திர கூடம் அன்பாய் சேரவே யயோத்தி செல்வன்
முத்தீயீ தெய்வ மென்று முனிவர்கள் வந்து கண்டு
நித்தியம் ஓமம் செய்து நிலையாக வாழச் சொன்னார். (229)

ராமனும் பன்ன சாலை ரம்யமாய் கட்டக் கூற
தாமதம் செயாம லங்கு தம்பியும் கட்டி யாக்க
சேமத்தை அடைய வெண்ணி சீதையோ டதிலே தங்கி
ஓமத்தை மனம்போல் செய்து உண்மையாய் வாழ்ந்தான் மாதோ.

சுமந்திரன் அயோத்திவருதல்.

அயோத்திமந் திரிதான் சேர ஆவலாய்க் குடிகள் சூழ்ந்து
செய்யாத மகத்தில் பெற்ற செல்வனை விட்டி ரோதான்
தெய்வத்தின் செயலே யாகும் தேறுவீர் வருவா னென்று
மெய்யன்சே தியைவி ளம்ப வேகமாய் மனையிற் சென்றான். (231)

அண்டரால் புகழப் பெற்ற அரசன்றன் கோலம் கண்டு
கண்கள்நீர் சொரிய வேபூங் கரங்களால் பாதம் தீண்ட
வண்டுறை மார்ப னங்கன் வந்தமந் திரியைக் கண்டு
கண்யன்வந் தானோ வென்னக் கலவரம் கொண்டெ ழுந்து. (232)

தசாதன் சுமந்திரனுக்குச் சொல்வது.

தாயைத்தான் நினைந்து மைந்தன் தம்பியோ டிங்குற் றானே
பேய்கள்வாழ் மனையி லேதான் பிரியனே விடவும் வேண்டாம்
மாயவித் தையாற்கெ டுத்த மாதங்கி யென்செய் வாளோ
தாயிட மேசேர்த் துப்பின் தானத்தை மனம்போல் செய்வாய். ().

சுமந்திரன் தசாதனுக்குச் சொல்வது

மகன்ராமன் வரவே யில்லை மன்னவா வனத்தில் விட்டேன்
செகம்புகழ் சீல னங்கு செய்தான்பல் வந்த னங்கள்
குகனுடன் நேசம் செய்து குணமாய்க்கங் கையைக்க டந்தான்
சுகமாக வந்து சேர்வான் சோகத்தை விடுவீ ரென்றான். (234)

தசாதன் செயல்.

மண்மீது குந்த வோவென் மைந்தனே தவத்தைச் செய்தேன்
கண்யமாம் நிலையை விட்டுக் கானத்தில் வாழ நின்றாய்
கண்முன்னே யிருப்ப தாகக் காகுத்தா தோற்றுதே யான்
பண்ணின பாவம் ஏதோ பாராமல் உயிரைப் போக்க. (235)

வனத்திலே யேதா யிப்போ வருந்துவான் மகன்றா னேயோ
எனதுசே யினைக்கெ டுக்க எமனுய்வாய்த் தாளே பாவி
வினைப்படி உயிரை யேநான் விடும்போதென் னருகிலே தான்
தினகர னின்றிப் போகத் தீதேது செய்தே னையோ. (236)

காளம்தொட் டால்வி ஷம்தான் கள்ளிதேள் விஷமும் கொட்டில்
காளிந்தி விஷங்க டித்தால் கடுபூண்டு விஷம்நீர் மோந்தால்
வாளமும் விஷம்பு சித்தால் வண்டுநீர் விஷம்வி ழுந்தால்
ஆளனை மதியா மாதர் அருகிருந் தால்வி ஷங்காண். (237)

குச்சியிற் சூஸ்த்ரம் செய்து கோந்தாக யென்னைக் கட்டிப்
பட்சியைப் பிடிப்ப தேபோல் பாதகி மண்ணில்ப டுத்து
உச்சித கோலம் நீத்து உன்னைவிட் டாளே காணம்
மெச்சினேன் கைகை நுட்பம் மேலென்செய் வாளோ ராமா. ()

பச்சையை யொத்த மேனி பானுவைப் போல்ஜொலிக்க
இச்வாகு குலமு மோங்க இதமுட னவத ரித்துப்
பச்சைப்புல் மேல்ப டுத்துப் பசியினால் மனமும் வெம்ப
இச்சையை முடித்துக் கொள்ள இழைத்தாளே கொடுமை ஐயோ.

கழுத்திலா ரங்கள் மின்னக் கவசகுண் டலமு மாட
அழகுட னோடி வந்து அண்ணாவென் றழைப்ப தெப்போ
தழுவியே முத்தம் தந்து தவத்தின்றன் பயன்தீர்க் காது
பழுதுசெய் தாளே யிப்போ பதைக்குதே யுள்ள மையோ. (240)

தரணியோ தேரு மாகும் சலமது கயிறு மாகும்
இரவுமே பகல தாகும் எரிகல்லுங் கனியே யாகும்
வரதனை வனமே விட்ட வஞ்சகி முடியை யிந்தக்
கரங்கொண்டு அவிழ்க்க மார்க்கங் காணேனே புவியி லையோ.(241)

மாலைகொள் கைகை தானும் மண்மீது படுத்தி ருந்து
பாலனே கெடுத்தா ளென்னைப் பதறுதே யுள்ள மையோ
சேலைகொள் மாதை நம்பிச் சேமமா யுலகில் வாழ்ந்த
காலந்தான் கிடையா தென்று கருதாமல் கெட்டேன் பாவி.(242)

கல்லுமே கரைந்து போமே காகுத்தன் அழகைக் கண்டால்
கொல்லும்வெம் விலங்கா னாலும் கொடுமையை யிழைக்கா தையோ
பல்லியின் சொல்லைக் கேட்டுப் பாலையே யெறிந்த வாறாய்ப்
பொல்லாதாள் சொல்லைக் கேட்டுப் புண்ணியன் தனைக்கெ டுத்தேன்.

சுமந்திரன் செயல்.

மன்னனைச் சேர்த்த ணைத்து மகன்சீரா மன்த னக்கு
ஒன்றுமே பழுது றாது உலகாளும் வேந்தே கேளும்
இன்னமும் பதினான் காண்டு எண்ணிய அறத்தைச் செய்தால்
அன்பனும் வருவா னென்று அரசனைத் தேற்றிச் சொன்னான். ()

கௌசல்யா சுமித்திரைக்குச் சொல்வது.

வனவாசஞ் சென்றென் மைந்தன் வருமட்டும் வாழ்வே னுதான்
கனமாக வரத்தைப் பெற்ற கைகேசி பதம்ப ணிந்து
எனதுயிர் நீங்கு மட்டும் இங்ஙன மிருந்து பின்னால்
வனம்போகச் செய்யக் கேட்பேன் வாருங்காம் அவள்பால் போவோம்.

சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

மண்ணொடு விண்கெட் டாலும் மைந்தனே தவற மாட்டான்
எண்ணம்போல் வந்து சேர்வான் இடரேதும் நேரா தங்கு
பெண்கள்நா யகமாய் நிற்கப் பேதையை வணங்கப் போமோ
மண்மீது வாழ்த லேது மன்னனைத் தேற்று விட்டால். (246)

கௌசல்யா சுமித்திரைக்குச் சொல்வது.

கல்லைப்பெண் ணாகச் செய்த கண்மணி யைக்கான் போக்கக்
கல்லோதா னவளி னுள்ளங் கருணையில் லாமல் போச்சே
கொல்லுமோர் விலங்காய் வந்து குழந்தையைக் கெடுத்தாள் பாவி
செல்வனைத் தொடர்ந்து சென்று சீராக வாழ்வே னங்கு. (247)

நீதியை விடாத மன்னன் நீலியாள் கையிற் பட்ட
பேதைபோல் அவள்வ ரத்தால் பிள்ளையை வனமே விட்டார்
நாதனு மிருந்தா லுந்தான் நம்பிக்கை யினிமேல் இல்லை
வேதனை யின்றி வாழ்வேன் வேளையே வனத்தில் சேர்ப்பாய்.(248)

சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

அண்டமே புரண்டிட் டாலும் அரசரோ அறத்தி னீங்கார்
பண்ணின பாவச் செய்கை பதகியால் மோசம் போனார்
புண்யரை யிழித்துச் சொல்லப் பொறுமைக்கு மழகா காது
தண்ணீர்மேல் கமல மாகத் தவிக்கவே விடாது காப்பாய். (249)

கௌசல்யா சுமித்திரைக்குச் சொல்வது.

கொடுத்ததோர் அரசை முன்பு குடியன்போல் அவள் சொல்லாலே
தடுத்துமைந் தனையே விட்ட தசரதர் என்னை யும்பின்
கொடுமைசெய் திடவே சொன்னால் கூசாது துணிந்து செய்வார்
துடிக்குதே யுளமிப் போது தூரம்வாழ் குவதே நன்று. (250)

சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

ஆவியோ டுடல்கெட் டாலும் அணுவேனும் தப்ப மாட்டார்
பாவியி னுளமோ ராது பன்னியாய் நம்பிக் கெட்டார்
தேவகீ யிந்த வேளை தேற்றுது விடிலோ மன்னர்
சீவனை யுறைய மாட்டார் சீக்கிரம் வருவாய் அம்மா. (251)

### சுமித்திரை செயல்.

கௌசல்யை மெள்ளத் தேற்றிக் காவலன் பக்கம் சேர்க்க
தசரதன் கோலம் கண்டு தளர்ந்ததே கழுந்து டிக்க
வசமான வரத்தைப் பெற்று வஞ்சித்தாய் கைகா வென்று
துசம்போல விழுந்த மன்னைத் துடையினில் படுக்க வைத்தாள். ()

### தசரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

பவத்தையே செயத்து ணிந்தேன் பாவியின் கையில் சிக்கிப்
புவனத்தை யாள வந்த புண்யனைக் கானம் விட்டேன்
குவலயத் திருப்பே னென்று கோசல்யா எண்ண வேண்டாம்
தவத்தினி லுதித்தோன் வந்தால் தருமமாய்த் தேற்று வாயே.(253)

### கௌசல்யா தசரதனுக்குச் சொல்வது.

அலைகடல் புரண்டிட் டாலும் அனும்வனு மஞ்ச மாட்டீர்
உலைவாயை மூடா தந்தோ ஒப்புமோ இவணம் நிற்கத்
தலைவிதிப் பயன்தன் னாலே தண்டக வனமே சென்றான்
அலைவதால் பயனுண் டோதான் அன்பனும அறம்வி டானே. ()

### தசரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

அழுங்கோனாய் தன்னைக் கண்ட ஆடுதான் இரங்கி அத்தைத்
தொழுதுதன் குறைறயைக் கேட்கத் துள்ளிக்கொன் றுண்டவாபோல்
பழுதுசெய் கைகை தானும் பார்மீது மின்ன லைப்போல்
விழுந்தவள் தன்னை யேந்த விளைந்தது துன்பம் கண்டாய். (255)

எள்ளள வும்உடம் சேயை ஏதேனும் கெடுத்தி ருந்தால்
முள்பன்றி வாழும் ஊழில் முடிவாக வாழ்வேன் கண்டாய்
தள்ளாத வயதில் நந்தம் தவமகன் றனைவி டுத்தற்
குள்ளமே கலங்க வேண்டாம் உயிர்விடும் வேளை பெண்ணே.(256)

### கௌசல்யா தசரதனுக்குச் சொல்வது.

ஊழ்வினை தீர்த்துக் கொள்ள ஒண்ணன்றன் கொடிபி டித்துப்
பாழ்வினை றதனை விட்டுப் பார்மீது வரும்கா லத்தில்
ஆழ்ந்துயோ சித்தி டாமல் அதனையே கடித்து விட்டாள்
வாழ்வதைப் பாரும் நாதா வனம்சென்ற மகனும் மீள்வான். (257)

தசரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

புல்லும்நீர் முடியில் தாங்கிப் பொருந்திவா டாது நிற்க
செல்வனைக் காக்க வில்லைச் செகமதை யாண்டு வந்தும்
கல்லையும் பெண்ணாச் செய்து காதியின் மகனைக் காத்த
சொல்மறு மகனை விட்டுச் சுகமாக வாழ்வ தில்லை. (258)

கௌசல்யா தசரதனுக்குச் சொல்வது.

வானமும் வையமேற்ற வரதனைக் கட்டிக் காக்க
கானம்சென் றான்பின் னேனுங் கலங்காதே வீணாய் மன்னா
யானைமேல் மகனைக் காண்பீர் ஆண்டுகள் பதினான் கானால்
தானதர் மங்கள் செய்து தாணியை யாள நிற்பாய். (259)

தசரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

கண்ணிமை தட்டு நேரம் காகுத்தன் றனைக்கா ணாமல்
மண்மீது வாழு மெண்ணம் மறந்துநீ விடுவாய் முன்னே
பெண்ணென வருகில் செல்லப் பேயாய்வாய்த் தாளெ னக்குக்
கண்களும் இருண்டு போச்சே கடைத்தேற மார்க்க மில்லை. (260)

கௌசல்யா தசரதனுக்குச் சொல்வது.

கொடுத்தநல் வரத்தை யிப்போ கொண்டுகை கேசி தன்பால்
முடிக்கபி ஷேகம் செய்து முகம்பார்க்கக் கோரு மன்னா
கொடுமையே தோயி ழைத்தாள் கூனியின் சொல்லைக் கேட்டு
நீடுநிலை விடாதிப் போது நாதனே கேட்க நிற்பாய். (261)

தசரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

மாணிக்கப் பச்சை வைரம் மரகத மிழைதொட் டிற்கண்
ஆணிமுத் தசைய மெத்த அழகாகப் பள்ளி கொண்ட
மாணவன் வனத்தி லிப்போ மண்மீது சோர்ந்து சாயக்
கோணினாள் மொழியைக் கேட்டுக் கொடுமைசெய் தவள்த னக்கு.

எடுத்தனே கந்தான் சொல்லி இரங்கிக்கா லைப்பி டித்தும்
பிடித்ததை விடவே காணேன் பேய்முகத் தினிவ்வி ழிக்கேன்
கொடுத்ததைப் பெற்ற போதும் கோசல்யா தவத்தில் வந்தோன்
கடுகும் தப்பிடுவா னென்று கனவிலு மெண்ண வேண்டாம். (263)

தீயாப்வங் திடபே யையும் திண்பிசா சையும்ப ழுக்காக்
காயான கிழங்கைத் தின்றும் கள்ளரை நம்ப லாகும்
ஓயாத குடிய ரோடு உள்ளத்தில் வஞ்ச கம்சேர்
மாயாவே ஷத்தைக் கொள்ளும் மாதரை நம்பப் போமோ. (264)

கல்லைநற் கனியாய்ச் செய்வாம் கடும்விடம் உண்ண லாகும்
வல்வினை தன்னை வெல்வாம் வாழையை விறகாய்ச் செய்வாம்
செல்வனை வனம னுப்பச் சிலைபோல மணில்ப டுத்த
இல்லவள் மனதைக் கொல்ல ஈசனுந் தவிர்வான் கண்டாய். (265)

தசரதன் சுமித்திரைக்குச் சொல்வது.

மன்னவன் தசர தற்கு மகனுகப் பிறந்து நாமும்
துன்பத்தைத் தந்தோ மென்று துடிக்கும்மைந் தனையே கண்டு
அன்னைகோ சலைபு லம்ப அரும்பாலன் சோர்ந்து நிற்கப்
பின்னுகச் சென்ற தம்பி பெற்றவட் கேது சொன்னுன். (266)

சுமித்திரை தசரதனுக்குச் சொல்வது.

அரசுதான் அண்ணற் கென்றே அன்னைபின் சோகம் தீர
அரசினைக் கொடுப்பே னென்று அங்ஙனம் வெகுவாய்த் துள்ள
மரவுரி கொண்டு நிற்கும் மகனுமே அவனைத் தேற்ற
இரவுடன் பகலும் கூடி இதம்செய்வேன் எனவே நின்றுன். ()

தசரதன் சுமித்திரைக்குச் சொல்வது.

மண்ணும்விண் தேடி னும் மகன்ரகு நாத னைப்போல்
கண்யமாம் செல்வன் றன்னைக் காணவும் இயலு மோதான்.
மண்டலம் புகழ ஆண்ட மன்னரில் மதியில் மேலாய்
புண்ணியன் போல்நான் காணேன் பொல்லாது செய்தாள் பாவி. ()

மலைநிகர் பின்னேன் என்னை மனம்போல எதிர்த்தி ருந்தால்
அலையாது கானில் மைந்தன் அயோத்தியில் வாழ்வா னல்லோ
பலவான்நற் பரதன் தானும் படிகடந் தேசெல் லாமல்
குலமகன் தன்னைக் காக்கும் குணத்தையே நாடி நிற்பான். (269)

அதிர்ஷ்டத்தின் வசத்தால் மன்னன் அயோத்தியை ஆண்டா [னன்றி
மதியினுல் அல்ல வென்று மண்மீது சொலிந கைக்க
சதிசெய்தா ளேகை கேசி சற்றும்யோ சித்தி டாமல்
விதியோ அல் லதுமுன் செய்த வினையோசா பமோகா ணேரன். ()

தலையணை சொல்லைக் கேட்டுத் தசரதன் உண்மை விட்டுக்
குலமகன் கானம் வாழக் கொடுமைசெய் பாவி யென்று
உலகினில் சொலிந கைக்க உடலெடுத் தேனே பாவி
நிலைதவறும லிங்கு நெடுநாள் வாழ்ந் ததுவும் போச்சே (271)

வேங்கைநீ ரினில்மி தக்க வினையினால் ஒருவன் அதனை
தாங்கியே கரையில் சேர்க்கத் தருணமே பாய்ந்த வாபோல்
தூங்கும்மா போல்கை கேசி தோன்றவள் தன்னைத் தூக்கத்
தீங்குசெய் தாளே பெற்குத் தெய்வமி லாமல் போச்சே. (272)

தேசத்தில் உலாவும் பேய்கள் தீதாகச் செயும்பட் சத்தில்
பூசையால் அதையும் மெள்ளப் போகவே செயலாம் கண்டாய்
ஆசையாம் பேய்பி டித்தால் அதனையே யொழிக்க அந்த
ஈசனு லும்மா காதென் றிங்கனம் தெரிந்து கொண்டேன். (273)

சுமித்திரை தசரதனுக்குச் சொல்வது.

மரவுரி தரித்துச் சென்ற மைந்தன்தான் வனத்தில் வாழ்ந்து
புரமெலாம் புகழப் பெற்றுப் புண்யனும் வந்து சேர்வான்
பரதனை அழைத்தே யிங்கு பாதகி மனம்போல் சூட்டி
வருநாளைப் பார்த்தி ராமல் வாடுவ தேனோ வீணில். (274)

தசரதன் சுமித்திரைக்குச் சொல்வது.

கல்லோதான் கரையா தொன்றோ காலனுர் விடுத்த தூதோ
செல்லோதான் விழுங்கும் பேயோ செய்ததோர் பெரிய வூழோ
வில்லோதான் அவள்தன் வாயோ விஷத்தையே கொண்ட பாம்போ
சொல்லோதான் கொடிய சூதோ சூனியன் ஏவலோ தான் (275)

கரத்திற்கோ தண்ட மேந்திக் கவசகுண் டலமு மாட
வரத்தில்பெற் றோனைப் போக்க வானமும் தரையும் வேண்டேன்
வரத்தையே கொடுக்கு மந்த வரதனே வந்த போதும்
மரவுரி கொண்டு சென்ற மைந்தனை வாரோ கண்டாய். (276)

முனிவனுர் கொடுத்த சாபம் மூண்டது எனக்கே யின்று
வனத்தினில் மகனை விட்டு வாடுயிர் நீங்க லாச்சே
கனமாக அபிஷே கம்தான் கண்காணச் செய்கி லாது
இனமேகோ ட்டாரிக் காம்பாய் எனதுநீள் குலத்தில் நின்றாள். ()

### சுமித்திரை தசரதனுக்குச் சொல்வது.

மங்கள மாய்க்கான் வாழும் மகனுக்குப் பயமே யில்லை
புங்கனும் சுகமே மீள்வான் புண்ணியா வெழுந்தி ருப்பாய்
எங்குமே புகழைப் பெற்றோர் இப்படிப் படுக்கப் பார்க்க
அங்கந்தான் துடிக்கு தையோ ஆதரித் திடுவாய் நாதா. (278)

### தசரதன் சுமித்திரைக்குச் சொல்வது.

தாயைப்போல் பெண்ணு மென்னத் தரணியில் உரைப்ப துண்மை
பேயைத்தான் கொண்ட தாலே பேதையாய்ப் படுத்தேன் கண்டாய்
காயமோ டுறைவே னென்று கருதவும் வேண்டாம் நெஞ்சில்
தாயினும் மேலா யெண்ணுந் தவச்சேயை விட்ட தாலே. (279)

தூஷிப்ப தோமண் வாழ்வைத் தொழுவதோ பொன்னைக் கோறிப்
பேசுவ தோநல் ஞானம் பிடிப்பதோ மாதர் காலாய்
தேசத்தை யாள வந்த தேவனை வனத்தில் விட்ட
தோஷியால் எனக்கும் இங்கு தொடர்ந்ததே கெட்ட காலம். (280)

கழுதைகத் திடவே கேட்கக் கானகம் வாழும் பேயாம்
தழுவிமுத் தம்கொ டுத்துத் தன்னினம் வெறுத்தவா போல்
பழுதுசெய் கூனி சொல்லைப் பாதகி கைகை கேட்டு
முழுமதி கொண்ட சேயை முகம்காணு வாறு செய்தாள். (281)

### தசரதன் கைகேசிக்குச் சொல்வது.

தாயும்தந் தையுமே நம்மைத் தவத்தையே செய்து பெற்றும்
வாய்கூசா துரைத்த தாக வாடவே மகனை விட்டுப்
பேயாக அலைய வென்னைப் பெரும்பாவந் தன்னைச் செய்தாய்
ஞாயமே நினைக்க வில்லை நாடெலாம் பழிக்க வாழ்வாய். (282)

வஞ்சமே வாய்த்து நின்று வானுல கைக்கை கொண்டு
பஞ்சின்வெம் பொதிபோல் ஓங்கிப் பாரில்வாழ்ந் திடினும் பொல்லா
வஞ்சக்கூற் றெய்தி நாளை வலிமையாக் கட்டும் போது
கெஞ்சிச்சோர் வதையெண் ணாத கெடுமதிக் கேது சொல்வேன். (283)

அருமைமைந் தன்த னக்காய் அறுபதா யிரமா மாண்டு
தருமத்தைச் செய்த நன்மை தரையினில் படுக்க வைத்தாய்
கருவில்வஞ் சனையே கொள்ளும் கசடர்கள் தமக்கு மேலாய்
கருணையெள் ளளவு மில்லாக் காதகி யெனப்பேர் கொண்டாய். (284)

காளிபோல் நாட்டைப் போக்கக் கங்கணம் கட்டிக் கொண்டு
ஆளவே வந்த சேயின் அழுகைக்கா ளாது செய்தாய்
நாளையென் பதுவோ நம்தம் நாளெனத் திடமு மில்லை
ஊளைசெய் நரியா யிந்த உலகினில் வாழ நின்ருய். (285)

தசரதன் புலம்பல்.

ஊரிலே காணி யில்லை உறவுமற் ருெருவ ரில்லை
பாரினில் புகழைப் பெற்ற பாலனே உனைப்பி ரிந்து
கோரமாய் மண்ணில் வீழ்ந்து கோசல்யா அழும்முன் னுக
நேரில்கா ணவேநின் ருயால் நெடுந்தவப் பயனே ஐயோ. (286)

வாயொரு புறம் வலிப்ப வார்ந்தநீர் கண்மி ழுந்த
நேயன்கே கயன்பெண் ணுலே நேர்ந்ததே கெட்ட காலம்
காயத்தை விடுவ தன்முன் காயாம்பூ நிறத்தைக் கண்டால்
ஆயிரம் அறுப தாண்டின் ஆவலோ ஒழிந்து போமே. (287)

கூடிக்கூ டிச்சுற் றத்தார் கோரமாய் மேல்வி ழுந்து
பாடிப்பா டிக்கொண் டென்னைப் பாடையில் அழகாய் வைத்துக்
கோடிமூ டுவதன் முன்னே கோதண்டா வருவா யாகில்
கோடியா கத்தாற் பெற்ற குறைகளைத் தீர்த்துக் கொள்வேன். (288)

மரவுரி கொண்டு சென்ற மைந்தனே வனத்தி லின்று
இரவையே தாய்க்க ழிப்பாய் எனக்கேதும் தோன்ற வில்லை
கரத்தினுல் தழுவி உன்னைக் கருணையாய் முத்த மிட்டு
வரத்தின்என் கலியைத் தீர்த்து வாழ்வதென் ருேவி ராமா. (289)

ஆண்டாண்டு தவத்தைச் செய்து அரசாளப் பெற்ற கண்ணே
மாண்டுநான் விடுவ தின்முன் மாளிகை காண்பே ஞேதான்
பூண்டதோர் கோலத் தோடே புழுதியில் தங்க வாய்க்கத்
தூண்டிலில் பட்ட மீன்போல் துடிக்குதே மனமி ராமா. (290)

முடிக்குநல் மகுடம் சூட்டி முகத்தின்சீர் காணு வாறு
உடுத்தசீ லையே என்னை உரகமாய்த் தீண்ட லாச்சே
அடிக்கடி யோடி வந்து அண்ணுவென் றழைப்ப தெப்போ
முடியும்சாய்ந் துவிட்ட தந்தோ முன்னேநிற் பாய்நீ ராமா. (291)

கரத்தில்கோ தண்டம் கொண்டு கவச குண் டலங்க ளாட
அருந்தவம் செய்து பெற்ற அப்பனே யருகில் நின்றால்
தருமமுந் தவறு வண்ணந் தரணிநின் றதுமே லாகும்
இரவியின் குலவி ளக்கே இன்பம்நான் கொள்வேன் ராமா. (292)

அண்டத்தின் சுகமும் வேண்டேன் அழியாத பதவி வேண்டேன்
மண்ணொடு விண்ணும் போற்றும் மாதவ னடியும் வேண்டேன்
கண்ணும்பஞ் சடைவ தன்முன் காயாம்பூ மேனி யின்சீர்
கண்டென்றன் கலிதீர் வேறே காணவே வருவாய் ராமா. (293)

### தசரதன் சோர்க்கமடைவது.

உரகடல் போலே சற்றும் உறக்கமில் லாமல் கத்திப்
பிரிந்தன னுடலை வேந்தன் பிள்ளையின் துயரந் தன்னால்
இரவிபோல் குலவி ளக்கை ஈன்றகோ சலைவி ழித்துப்
புருஷன்கோ லத்தைக் கண்டு புவியினில் வீழ்ந்தா ளம்மா. (294)

சுமித்திரை கைகை மற்றும் சோகத்தால் அழுது நிற்கச்
சுமந்திர னங்கு தோன்றி சூதுசெய் தவளைக் கண்டு
உமதர சரையே கொன்று உலகத்தை ஆள நல்ல
சமையமே பார்த்தாய் போலும் சங்கையும் ஒழிந்த தென்றான். ()

### சுமித்திரை கைகேசிக்குச் சொல்வது.

தலையென நம்பி நின்ற தனயன்ரா மனைக்கெ டுத்துக்
கலங்காத மனதைக் கொண்ட கணவரைக் கொன்றாய் நீலி
குலவானைக் கானம் விட்டுக் கொழுந்தனைப் பிரிந்தே யிந்த
உலகினில் வாழ்வு செய்ய உன்மனந் துணிந்த தன்றே. (296)

### கௌசல்யா கைகேசிக்குச் சொல்வது.

மகன்றனக் கரசை நல்க மங்கல்ய மிழந்தாய் பாவி
தருமோஉன் றனக்கு நல்ல தசரதர் தன்னைக் கொல்ல
செகம்புகழ் சிறுவன் தன்னைச் சிறப்பாக வாழ வொட்டா
தகத்தால்நீ அழிந்தாய் வீணாய் அயோத்தியெங் குந்தூ ஷிக்க. ()

### கௌசல்யா புலம்பல்.

அருமைபா லகன்சோ கத்தால் அயோத்திவிட் டீரோ நாதா
பிரிந்துநீர் விடுவீ ரென்று பெரும்பாவி கண்டி ருந்தால்
மரவுரி தரித்த சேய்க்கு மன்னபி ஷேகம் செய்ய
வரத்தைப்பெற் றவளைப் போற்றி வனம்போகா வாறு செய்வேன்.

தேவர்க்காய் அசுரர்ச் செற்ற தோர்வலி குன்றி யின்று
பாவிகை கேசி யம்பால் பார்மீது படுத்தீர் நாதா
தேவியென் றெண்ணி னீரே தெளிகிலா தேம னென்ன
ஆவிதான் துடிக்கு தையோ ஆதரிப் பாரைக் காணேன். (299)

மகன்சென்ற துயரை யுந்தான் மற்றும்மால் மறந்தேன் ஐயோ
பகலிர வாக என்னைப் பரதவித் திடவே விட்டீர்
வகையான வரத்தைப் பெற்றாள் வஞ்சகி யுமையே மாற்றிச்
சுகமாக வாழ வங்கு சுறுக்காக அழைத்துக் கொள்வீர். (300)

வசிஷ்டனு மங்கு தோன்றி வல்வினைப் பயனு லிப்போ
தசரதன் மாண்டா னென்று தளர்ந்ததே வியையே தேற்றி
வசமாக வரங்கொள் கைகை மனம்போல நிறைவே றுது
விசையாகப் பரதன் தன்னை *விஜயனை அழைக்க விட்டான். (301)

எண்ணெயி லரசை யிட்டு ஏதுமே பழுது றுமல்
மண்ணினில் சீராய் வாழ்ந்த மன்னற்காய்த் தானஞ் செய்யக்
கண்யமந் திரிக்குச் சொல்லிக் காகுத்தன் தாயை வாழ்த்திப்
புண்ணியன் பரத னுக்காய் பொறுமையாய்ப் பார்த்தி ருந்தான். ()

பரதன் சொற்பனம் கண்டு துக்கிப்பது.

அண்டர்போற் றுந்தந் தைக்கு அபாயமெ தோனா னேரேன்
எண்ணெய்கொள் தலையோ டேந்தல் எருக்கம்பூ மாலை சூடிப்
புண்ணியர் வடக்காய்ச் செல்ல புரண்டுதாய் மார்க ளேங்கக்
கண்டனன் கனவு நானே கலங்குதே மனமும் ஐயோ. (303)

பரதன் அயோத்தி வருதல்.

பரதனைக் கண்டு தூதன் பலவாறு அவனைப் போற்றி
வரமுனி வசிஷ்டன் சொல்லை வணக்கமாய் எடுத்துக் கூற
விரைவாக விடையைப் பெற்று விநோதமாய் ரதத்தி லேறி
அரசனைக் காண வெண்ணி அயோத்தியை நாடிச் சென்றான். ()

பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

அண்ணனுர்க் கபிஷே கந்தான் அரசர்செய் குவதா யிப்போ
எண் ணுகின் றேன்நான் தம்பி இருடியும் அழைத்த வாற்றால்
விண்ணவர் புகழ்நல் லோனை வேள்வியி னல்கு தாய்செய்
புண்ணிய மதால்ந மக்குப் புகழும்வாய்த் ததுநீ கண்டாய். (305)

சத்துருக்கன் பரதனுக்குச் சொல்வது.

நவமணி ரகுரா மற்கு நடுமுடி சூடும் நாளில்
தவமுனி தந்தை மெச்சத் தம்பியர் பணியுஞ் செய்வீர்
பவளநல் முத்து வேய்ந்த பகவநற் சபைமுன் ஏழை
தவறாமல் ஊழியம் செய்யத் தருவரோ காணத் தானே. (306)

---

*கேகயன் நாட்டில் கிரிவிரசமென்னும் நகரத்துக்கு சென்ற தூதன்.

### பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

விண்மணி வாடி டாத வியன்மணி வேள்வி நாத
கண்மணி காக்கும் நீலக் கார்மணி ராமன் பக்கம்
வெண்மணி போலே நின்று மேலான சேவை செய்வாய்
திண்மணி வீரா வுன்னைக் குருபிதா தெரியச் செய்வார். (307)

வானேற்றும் மெய்ய னோடு வரமுனி தன்னைக் காண
மானவர் ரதத்தை யங்கு மனம்போல நடத்திப் போக
சேனையை வழியில் விட்டுச் சேரவே யயோத்தி யூரைக்
கானத்தில் விரைவாய்ச் சென்று கரைசெறி சரயு சேர்ந்தார்.(308)

### பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

சரயுமா கரையைச் சேர்ந்தோம் சந்தேக மில்லைச் சற்றும்
புரவிகள் சோர்ந்த தாலே புல்லொடு சலமும் காட்டி
இரவுமுற் றிலுமே யிங்கு இளைப்பாற விட்டு நாளை
பிரியமாய் அழைத்த நந்தம் பிதாவையே காண்போம் தம்பி. (309)

இரவுமே கழிந்த பின்னர் இருவரும் அயோத்தி சேர
மரங்களெல் லாமும் சிந்த மண்தூசி பறக்க எங்கும்
நரிகள்கூட் டமதாய்க் கூடி நகரினில் ஊளை செய்யப்
பரதனுந் திகைத்தான் கண்டு பலவாறு யெண்ணிச் சென்றான். ()

### பரதன் கைகேசியை காணுதல்.

அன்னையின் பாதம் போற்றி அரசன்றன் சேதி கேட்க
அன்போடு தழுவி வாரி அங்ஙனம் மனம்போல் வாழ்த்தி
முன்செய்த வினையின் பேற்றால் மூண்டதா லிங்கன் வந்து
மன்னவர் இறந்தா ரென்ன மானவர் மண்ணில் வீழ்ந்தார். (311)

### பரதன் புலம்புவது.

ஐயையோ அண்ணா அண்ணா அருந்தவம் செய்து பெற்றுக்
கைவிட்டுப் போனீரோ நீர் கலங்குதே உள்ள மையோ
ஐயோஅண் ணாவே அண்ணா அன்புட னழைப்ப தெப்போ
மெய்யாச்சு கனவு மிந்த மேதினி காண்ப தென்றோ. (312)

### சத்துருக்கன் புலம்புவது.

அண்ணாவே ஐயோ அண்ணா அண்ணாவே ஐயோ அண்ணா
கண்ணைப்போல் கட்டிக் காத்த கருணையை யெங்கே விட்டீர்
கண்யமாய் அருக ழைத்துக் கரத்தினால் அணைவ தெப்போ
அண்ணாவே ஐயோ அண்ணா அண்ணாவே ஐயோ அண்ணா. (313)

பரதன் செயல்.

என்னைவிட் டேக நீர்தான் எப்படி மனம்து ணிந்தீர்
உன்னையும் காணு திந்த உலகில்லெப் படிநான் உய்வேன்
முன்பேவந் திருப்பே ரானால் முகமேனும் பார்த்தி ருப்பேன்
என்னமாய்க் கலங்கு வாரோ எனக்குமூத் தவர்தான் ஐயோ.(314)

கைகேசி பரதனுக்குச் சொல்வது.

தந்தையின் க்ஷேம மோடு †சகோதரன் தன்சு கத்தை
அந்தோநா னறிந்து கொள்ள அதனைச்சொல் லாமல் வீணாய்
முந்தின வினையி னாலே முடிந்தவர் தனக்கா யிங்கு
பந்து போல் துள்ளலாலே பரதனே பயனு முண்டோ. (315)

அரசரும் விடும்போ தாவி அண்ணனோ அருகி லில்லை
மரவுரி தரித்து முன்பே மாபெருங் கானம் சென்றான்
தரணியை ஆள நிற்பாய் தந்தையின் கடன்மு டித்துப்
பரதனே கலங்கா திப்போ பாக்யத்தைப் பெற்றுக் கொள்வாய். ()

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

அண்ணன்ரா கவனை வீணாய் அரசர்கான் போக விட்டார்
தண்ணீர்மேற் கமலம் போலத் தவிக்குதே யென்ற னுள்ளம்
அண்ணனும் அரசர்க் குப்பின் அப்பனு மெனம தித்தேன்
பண்ணின குற்ற மேதோ பரதனுக் குரைப்பாய் தாயே. (317)

கைகேசி பரதனுக்குச் சொல்வது.

அன்றோரா மன்கான் போக அரசையு முனக்கு நல்க
மன்னர்பால் வரமே பெற்றேன் மகனுக்கா யுயிரை விட்டார்
முன்செய்த வினையின் கூற்றாய் முடிந்தது துக்கம் வேண்டாம்
மன்னவர் சொல்வி டாது மகிழ்ந்தர சாளு வாயே. (318)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

என்மனம் அறியா திந்த இழிதொழி லெங்கன் செய்தாய்
உன்னையும் கொன்றிப் போதே உலகமர் பழியைத் தீர்ப்பேன்
அன்னைகௌ சல்யா தன்னால் அயோத்தியில் வாழ விட்டேன்
என்னமாய்ச் செய்து முன்றன் எண்ணத்தை முடிக்க மாட்டேன்.

---

*அசுவபதி. †யுதாசித்து.

கைகேசி பரதனுக்குச் சொல்வது.

அண்ணன்ரா மனுக்கே தல்லல் அருந்தம்பி பின்னே சென்றான்
கொண்டோனைத் தொடர்ந்து சென்றாள் குணவதி சீதை தானும்
கண்யமா யங்குள் ளோர்க்குக் கலவர மேனோ செல்வா
புண்ணியர் சொல்தட் டாமல் பொருந்தியே வாழ நிற்பாய். (320)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

மன்னனைக் கொன்று பாவி மகனையும் வனத்தில் விட்டு
என்னையும் கெடுத்து விட்டாய் எண்ணத்தை முடித்துக் கொள்ள
அன்றியும் சீதை தன்னை அநியாயம் செய்தாய் பாவி
என்னமாய் சகிப்பே னித்தை எனதுளம் துடிக்கு தம்மோ. (321)

கைகேசி பரதனுக்குச் சொல்வது.

அரசைநீ ஆள்வா யென்று அன்பாக வரத்தைப் பெற்றேன்
மரவுரி தரித்துச் சென்ற மகனுக்குப் பயமே யில்லை
கரத்தில்செங் கோலை யேந்திக் கைகேசி மகனா னென்று
தரணியை ஆள நிற்பாய் தந்தைபோல் மகனே யென்றாள். (322)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

தசரதர் தமைக்கொல் பாவி தாய்வீடு போவா யின்றே
கௌசல்யை யேயென் னன்னை கலங்கினால் பயனும் ஏது
வசப்படே னுனக்கு நானும் வனத்தினி லண்ணன் வாழ
நிசமான வார்த்தை சொன்னேன் நில்லாது நடப்பாய் கண்டாய்.

கைகேசி பரதனுக்குச் சொல்வது.

எனதுசே யாய்ப்பி றந்தும் இன்பந்தா ராமல் நீதான்
வனம்போன ராம னுக்காய் வருந்தா றாய் வீணா யிங்கு
மனம்போல நடப்பா யென்று மன்னரை வெகுவாய் வேண்டிக்
கனமாக வாழச் செய்தால் கலங்கவே விட்டா யல்லோ. (324)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

அரசைத்தந் தாள்எ னக்கு அண்ணாவை வனம னுப்பப்
பரதன்கட் டளையில் லாமல் பாதகம் யெங்ஙன் செய்தாய்
புரமெலாம் புகழு மந்தப் புண்யனைக் கானம் விட்டுப்
பரிந்துசொன் னதுவே போதும் பாட்டனா ரிடமே போவாய். ()

எப்படித் துணிந்தாய் பாவி இப்படிச் சொலவெ னக்குத்
தப்பாமல் உயிரை நீப்பாள் தந்தைபோல் கௌசல் யாவும்
இப்படி யேசென் றிப்போ தெனதன்னை பாதம் போற்றித்
தப்பிதந் தீர்த்துக் கொள்ளத் தமையற்குத் தொண்டு செய்வேன். ()

வயல்காக்கும் வேலி யைநீ வனத்தினி லெறிந்து விட்டுப்
பயனற்ற புல்லை நாட்டப் பதிதனை யும்வெ றுத்து
மயில்போலா டிப்போந் தாலும் மகன்தனக் கெதிர தாக
குபவரி போலே காணுங் கொடுமைக்கு ஏது சொல்வேன். (327)

பரதன் செயல்.

உலையிட்ட அரிசி தன்னை உண்ணஆ சையதாய் நிற்க
வலைவீசிப் பிடிப்ப தற்கு மறலியும் வந்த வாபோல்
தலைமகன் அபிஷே கத்தைத் தந்தையும் காண நிற்க
மலைதனை உருட்டி னளோ மந்தரை யென்ன தீமை? (328)

கௌசல்யா சுமித்திரைக்குச் சொல்வது.

பரதனோ வந்து விட்டான் பாவியின் சொல்லைக் கேட்டுத்
தருமத்தை விடுத்திங் கென்ன தகாதவை செய்வா னோதான்
அரசரோ மாண்டு விட்டார் அரும்பாலன் கானம் சென்றான்
வரும்வினை யேதோ காணேன் வனமேசெல் லாது விட்டேன். ()

சுமித்திரை கௌசல்யாவுக்குச் சொல்வது.

தசரதர் சேயாய் வந்தோர் தருமத்தை விடார்கள் கண்டாய்
நிசமான வார்த்தை சொன்னேன் நேராது இடர்க மக்கு
வசமாக வரத்தைப் பெற்ற வஞ்சகி சொல்லைக் கேட்டுத்
தசரதர் நிலையை விட்டால் தண்டக வனமே செல்வோம். (330)

பரதன் கௌசல்யாவைப் பணிவது.

கௌசல்யை யடியில் வீழ்ந்து கண்ணீராய்ப் பரதன் ஏங்கத்
தசரதன் தேவி தேற்றித் தழுவிமெய் கண்ணீர் விட்டு
அசையாமல் சற்று நின்று அன்புட னவனை நோக்கித்
திசையெங்கும் புகழ ஆள்வாய் தேசத்தை மகனே என்றாள். ()

பரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

அன்னாய்! அண் ணற்கு வஞ்சம் அணுவேனும் செய்தி ருந்தால்
கன்றுக்குப் பால்வி டார்வாழ் கனமான நரகம் வாழ்வேன்
இன்னமும் ஐய மானால் எந்தனைப் பெற்ற தாயே
இன்றேஅண் ணனைப்பா ராமல் இறப்பேனிவ் வயோத்தி என்றான்.

### கௌசல்யா பரதனுக்குச் சொல்வது.

அன்பனே வனம்போய் விட்டான் அரசரும் மாண்டு விட்டார்
முன்செய்த வினையா லிப்போ முடிந்தது துயரம் வேண்டாம்
மன்னவர் கடன்மு டித்து மனதினிற் கவலை விட்டு
அன்னைகை கேசி சொற்போல் அரசைநீ யாள நிற்பாய். (333)

### பரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

அரசோடன் னையும்நான் வேண்டேன் அண்ணன்கான் போன பின்பு
அரசதற் கவரே தக்கோர் அவரடிக் குடையவன் யான்
பரதன்வஞ் சித்தா னென்று பழிச்சொல்வா ராதிப் போது
மரவுரி தரித்து நானும் மகிழ்வுடன் வனத்தில் வாழ்வேன். (334)

### கௌசல்யா பரதனுக்குச் சொல்வது.

அன்புள்ள பரத னென்று அறிந்தேனு னுனது ளத்தால்
என்னுடை வினையின் கூற்றுய் இராமனை நீங்க லாச்சு
இன்னமும் அழுவ தாலே இறந்தவர் மீள மாட்டார்
மன்னவர் கடன்மு டித்து மகனேநீ என்னைக் காப்பாய். (335)

### பரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

அண்ணனைப் பிரிந்தே யிந்த அயோத்தியில் சற்றும் வாழேன்
எண்ணத்தைக் கூறி விட்டேன் இதுவேசத் தியம்பார் தாயே
மண்டலம் ஆள வெண்ணி மன்னரைக் கொன்று பாவி
புண்யனைக் கானம் விட்டாள் பொருந்தவே யிலையென் னுள்ளம். (336)

### சுமித்திரை பரதனுக்குச் சொல்வது.

மண்ணொடு விண்கெட் டாலும் மைந்தனுக் கைய மில்லை
எண்ணம்போல் செய்ய லாம்பின் பிறந்தமன் னவனைப் பாராய்
பெண்ணினைப் பழிப்ப தாலே பெருமைவா ராது னக்கு
அண்ணனூர் பிரிந்த தாலே அரசரும் உடலை விட்டார். (337)

### பரதன் சுமித்திரைக்குச் சொல்வது.

பிறந்தது போதும் மற்றும் பெரும்புகழ் தன்னை யோங்கி
அறுபதா யிராண்டு பெற்ற அன்பனால் உயிரை விட்டார்
அறத்தினில் நோக்க முள்ள அண்ணன்கா னத்தில் வாழ
சிறிதுமஞ் சாமல் பாவி செயத்துணிந் தாளே ஐயோ. (338)

பரதன்நம் மைக்கெ டுக்கப் பதகியைத் தூண்டி விட்டான்
தருமத்தில் கட்டுப் பட்ட தந்தையால் குற்ற மில்லை
மரவுரி கொண்ட அண்ணன் மனதினில் கிலேசம் கொண்டு
அரசையும் வெறுத்து விட்டு அடவியே வாழ நிற்பார். (339)

என்னமோ கால மோமேன் எனக்கொன்றும் தோன்ற வில்லை
முன்னாளில் செய்த ஊழோ முழுப்பாவி செய்த தீதோ
என்னையே வெதுவாய் நொந்து ஏங்குவார் வனத்தி லந்தோ
இன்னமும் மண்ணில் வாழ எனக்குத்தான் பிரிய மில்லை. (340)

சனகன்மா தவத்தில் வந்து சம்பத்தாய் வாழ்ந்த அன்னை
வனத்திலே தாக என்னை வருந்தியே சபித்தா ளோதான்
மனமது துடிக்கக் கண்டு மாதவர் கேட்பா ராகில்
கனமாகப் பரதன் ஆளக் கான்புகுத் தியதாய்ச் சொல்வார். (341)

ஆசையாம் பேய்பி டித்து அரசனை மடிய வைத்துத்
தேசத்தை ஆள வெண்ணித் தேவனை வனத்தில் விட்டு
மாசற்ற கௌசல் யாவை மனமது நோகச் செய்த
தோசியே கைகை யென்று சொல்லியே நகைப்பார் அன்றோ. ()

சத்துருக்கன் கூனியைக் காலுதைதல்.

காதையே பிடித்தி ழுத்துக் காலினா லுதைத்துக் கூனை
சூதினைச் செய்தா யென்றே சுறக்காக ஓடிப் பற்றி
நீதியைக் கெடுக்க வெண்ணி நிலைத்தாயோ யிங்கு வந்து
பாதகி யினிநான் உன்னைப் பார்மேல்வைப் பேனோ வென்றான். ()

கொடுமையைச் செய்த தோஷி கூறுவா யெனக்கிப் போதுன்
இடுப்பையே ஒடித்து வீழ்த்தி எங்குமே நகைக்கச் செய்வேன்
முடுக்காயெண் ணடிநீ நிற்க முடிந்ததுன் வாழ்வு கண்டாய்
குடுவையைத் தலையில் மாட்டிக் கொடுப்பேனிப் போதே தண்டம்.

அங்ஙனம் செவிபி டித்து அலையவே யெங்கும் ஈர்த்து
சிங்கம்போல் சீறி நீதான் செல்வனைக் கெடுத்த பாவி
இங்ஙனம் தங்கா தேயென் றிடையினில் உதைக்க எட்டி
அங்கமும் முழுதும் நொந்து அழுதோடி னாள்வி ரைந்தே. (345)

கத்தியே புலம்பக் கேட்டுக் கைகேசி விரைவி லெய்த
பத்தியாய்ப் பாதம் வீழ்ந்து பட்டதைக் கதறிக் கூற
மெத்தவும் மனமு தடித்து மேலாக மகனை வேண்ட
புத்திதம் பிக்குக் கூறி பொல்லாதாள் தன்னை நொந்தான். (346)

**பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.**

எருமைநன் கறிய மாட்டா ஈக்களோ சுசியோ ராவே
கருணைபே யறியு மோதான் கபடன்நீ தியினைத் தேரான்
பெருமைநா யறியு மோசொல் பேதையோ புகழைக் காணுன்
குருடன்காட் சியைபி ழப்பான் கூனியோ எதையும் நோக்காள். ()

**வசிஷ்டன் பரதனுக்குச் சொல்வது.**

சம்மத மிலையெ னக்குச் சாற்றிய வெல்லாம் ஐயா
கம்பீரத் தாள நிற்பாய் கருமமும் முடிந்த பின்னர்
சிம்மமாய்க் கர்ப்பத் தெய்தி சீராய்வா ழாது வீணே
நம்பின தாய்க்குத் துன்பம் நலமோஈ வதுநீ கண்டாய். (348)

**பரதன் வசிஷ்டனுக்குச் சொல்வது.**

என்னைச்சோ திப்ப தேனோ இக்ஷ்வாகு குலத்துத் தேவே
முன்செய்த வினையின் பேறும் மூதேவி மகன்நா னென்று
அன்பனைக் கானம் விட்டு அரசனை மாள வைத்து
அன்னையின் சொல்லைக் கொண்டு அரசாளச் சொன்னீர் நீரே. ()

உத்தமி வயிற்றில் நானும் உதித்திருந் தால்ஓ ச்வாமி
சத்யமாய் உயிர்வி டாமல் *சாகேதம் துணியேன் வாழ
மெத்தநாள் தவத்தில் வந்த மேலான மகனல் குக்கி
பத்தியே யெரிய நானும் பார்த்திருக் கின்றேன் பெம்மா. (350)

**வசிஷ்டன் பரதனுக்குச் சொல்வது.**

கோபத்துக் கிடமே தந்தோன் கோலொல்கூண் டைக்க லைத்தோன்
பாபத்தைச் சதாஇ ழைத்தோன் பரஸ்த்ரீயின் கைபி டித்தோன்
ஆபத்தில் கெடுதி செய்தோன் அடுத்தோர்க்கு நஞ்சை யிட்டோன்
கோபுர மிடித்த மூடன் குரூபியாய்ப் பிறப்பார் கண்டாய். (351)

பரதநின் பெருமை தன்னைப் பகரவொண் ணுதிங் கென்னல்
தருமத்தி லுன்னைப் போலும் தரணியில் எவர்தா னுண்டு
புரமூன்று மழிந்தா லும்முன் புகழுக்கு அழிவே யில்லை
அரசனைக் காண வாராய் அயோத்தியை வெறுத்த சீலா. (352)

மன்னனை எண்ணெய் விட்டு மண்மீது எடுத்து வைக்க
நன்மைசே ரிருமகாரும் நடுநடுங் கிக்கண் டேங்க
மன்னன்தே விகள் புலப்ப மற்றவர் கலங்கி வாடத்
தன்தாய்கை கையைநிந் தித்துத் தந்தையின் தாளில் வீழ்ந்தான். ()

*சாகேதபுரி அரசுபுரிந்த இடம்.

பாதன் செயல்.

கள்ளிக்கு வேலி கட்டிக் கனிவாகக் காத்த வாபோல்
கள்ளக்கை கேசி தன்னைக் காத்துக்கெட் டீரோ வேந்தே
தள்ளாத வயதில் தாங்கள் தளர்ந்துதான் துடிக்கக் கண்டு
எள்ளள விரங்காள் பாவி இவள்மனம் கல்லோ அம்மா. (354)

வரத்தையீந் தாலு மென்ன வஞ்சகி யெண்ணம் போலப்
பரதன்றன் வருகு மட்டும் பதருமல் விருப்பீ ராகுல்
அரசினை அண்ணற் கீந்து ஆவியோ டும்மை விட்டுப்
பெருமையாய் வாழப் பார்த்த பேயையுந் துறந்து வேனே. (355)

பிள்ளையைப் பரிந்து கேட்ட பெரியகோ சிகன்றன் சொல்லைத்
தள்ளியே விட்ட ரன்று தவசியா யெண்ணு தந்தோ
கள்ளமா மனதே கொண்டு காருத்தற் கானம் விட்ட
சுள்ளிக்குப் பயந்து ஏனோ சோர்ந்துநீர் உயிரை விட்டீர். (356)

முட்டையில் கொண்டு வந்து முகத்துட னணைத்துப் பாங்காய்
கட்டிக்காத் திடினும் பாம்பு கடிப்பதை விடாத வாபோல்
துட்டியை வளர்க்கத் தாங்கிச் சொற்பாணத் தாலிப் போது
விட்டீரோ உடலை அண்ணு வேகுதே யுளந்தா னையோ. (357)

வஞ்சனை யுளங்கொள் மாதர் வாழவே சேர்வா ராகில்
பஞ்சுபோல் அவ்வாழ்க் கையின் பாழாமென் பதுதான் பொய்யோ
கிஞ்சித்து மெண்ணி டாமல் கிட்டாத தேனைப் போக்கி
அஞ்சாமல் உமையும் கொன்று அலையவிட் டாளே யென்னை. ()

கௌசல்யை சுமத்ரை மற்றோர் கண்யனைப் பற்றித் தேற்றத்
தீசரதர் பாதம் போற்றித் தரையினில் மரம்போல் வீழ
வசிஷ்டனுந் தருமம் கூறி வாடும்நற் பரதற் றேற்ற
அசையாது சற்று நின்று அரசன்கட் டளைமு டித்தான். (359)

பரதனும் உள்ளந் தேறிப் பலவாறு தாயை நொந்து
தருமத்தை மாறு வுள்ளத் தன்னைகோ சலையைப் போற்றக்
கரங்களால் மகனை வாரிக் கண்ணீரை விட்டு நின்று
அரனிகர்த் தெழுந்த செல்வ அயோத்தியை ஆள்வா யென்றாள்.()

பரதன் கௌசல்யாவுக்குச் சோல்வது.

அன்பனே அயோத்தி யாள அவனியி லவத ரித்தான்
என்னாலே யாகு மோதான் இவ்வரச சேற்கத் தாயே
இன்றேநான் வனத்திற் சென்று இராமனை யழைத்து வந்து
உன்றனைக் காக்கச் செய்வே னென்றுக்கும் கவலை வேண்டாம். ()

கொல்மிரு கத்துக் கேனும் கொடியதோர் நஞ்சுக் கேனும்
பொல்லாத அரக்கர்க் கேனும் புவிபிற்சே யாக லாகும்
செல்வனை விட்ட பேய்க்குச் சேயாக வுதித்த தாலே
பல்லிகாக் கைக்கு மிந்தப் பரதனீ டாக மாட்டான். (362)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

எப்படித் துணிந்தா யோதான் இப்படிச் செயவே அம்மா
தப்பிதம் ஏதோ சொல்வாய் தமையன்செய் தானு றிங்கு
இப்புவிக் கரசு நானு எனக்குமே யிறைவன் ராமன்
ஒப்பாது வாழ்வே யிங்கு ஓடிவா யின்று நீயே. (363)

கள்ளியின் கொம்மை நம்பிக் கணவனைக் கொன்றாய் அல்லோ
சுள்ளிக்குப் பட்டங் கட்டச் சுந்த்ரனை விட்டாய் கானம்
தள்ளாத தாயை யிங்கு தவிக்கவே செய்தாய் வெய்ய
கொள்ளிபோ லிருந்தால் நீயும் கோதண்ட னஞ்சு வானே. (364)

பரதன் சத்துருக்கன் ஸ்ரீராமனிடம் போவது.

அரசதைப் பரதன் நீத்து அண்ணனைக் கொணர நல்ல
வரமுனி மாத ரோடு வனத்தில்வே கமதாய்ச் சென்று
இரங்கியே கங்கை சேர்ந்து எல்லாம்நற் குகனு லோர்ந்து
பரத்துவா சனையே காணப் பண்புடன் நடந்தா ரம்மா. (365)

வரமுனி இடமே கண்டு வந்தோரை யங்கு விட்டு
மரபுதான் விளங்க வந்த மன்னனைக் கண்டு போற்றிப்
பிரியமாய் அழைத்து மீளப் பின்னோர்வே கமதாய்ச் சென்று
பரத்துவா சனையே கண்டு பாதத்தைப் பணிந்து நின்றார். (366)

பரத்துவாசன் பரதனுக்குச் சொல்வது.

தவசிக ளிடமே தேடித் தரணியா ளாமல் வீணுய்க்
கவசகுண் டலங்க ளாடக் கால்நடை யாய்வந் தாயே
புவனத்தை ஆளப் பெற்ற பூவையை யங்ஙன் விட்டு
நவமணி மாலை யற்று நாடிய வகைசொல் லென்றான். (367)

பரதன் பரத்துவாசனுக்குச் சொல்வது.

தந்தையும் தாயு மெற்குத் தமையனே தெய்வ மென்று
சந்ததம் எண்ணி வந்தேன் சத்தியம் இதுவே ஐயா
சுந்தரன் கானம் வந்த சோகத்தா லரசர் மாண்டார்
தந்தைபோல் கட்டிக் காக்கும் தமையனைக் காண வந்தேன். (368)

பரத்துவன் மனம்க ளித்துப் பரதனை யங்கு வாழ்த்தி
மரவுரி கொண்டு சென்ற மன்னவன் சேதி கூற
வரமுனி மாதர் மற்றோர் வந்தங்கு சேர்ந்து சூழ
இரவையுங் கழித்துப் போக இருடியும் கேட்டுக் கொண்டான். ()

இரவையே கழிந்த பின்னர் இராமனைக் காண வெண்ணி
பரத்துவா சனைத்தான் கண்டு பத்தியாய்ப் பணிந்து வேண்ட
தரணியில் புகழே பெற்றாய் தசரத மகனாய் வந்தே
பிரியனைக் காண்பா யென்னப் பித்தனைப் போல்சென் றானே. ()

## சித்திரகூடத்தில் ஸ்ரீராமன் செயல்.

### ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

என்னையும் பெற்றோ ரங்கு ஏதாக வாடு றாரோ
அன்னைகோ சலைசு மித்ரை அங்ஙனம் அழுதே நிற்பார்
பின்னாக வந்த தம்பி பெற்றவ ரிடமே வாழ்ந்தால்
துன்பத்தைக் கொள்ளா ரென்று தோன்றுதே யெனக்குப் பெண் [ணே.

மன்னவன் ஜனகன் காண மகாராஜ ரோலை விட்டால்
உன்னையும் அழைத்துப் போக உடனேதாம் வருவா ராகில்
அன்புட னவரோ டேகி அன்னையோ டுறைவா யானால்
இன்னமு மிருக்கும் நாளை இங்கனம் கழித்து வாரேன். (372)

### ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பெற்றவர் உமது கையில் பிடித்துமே கொடுத்த தாலே
சுற்றமும் செல்வ மற்றும் சுகமுடன் யாவும் நீரே
அற்பளாம் என்னைக் காக்க அரிதோதான் அவனி நாதா
உற்றவ ரழைத்திட் டாலும் உம்மைநான் பிரியேன் கண்டீர். ()

### ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

மயிலின தெழிலைப் பாராய் மகாராஜன் பெற்ற கண்ணே
குயிலினின் ஓசை கொள்ளக் குணமது தருவ தன்றோ
முயல்கள்கூட் டங்க ளோடு முன்னாக மான்க ளிங்கு
பயமின்றிக் கூடி யாடப் பார்க்கக்கூ டுமோதா னங்கே (374)

கொடிமலர் தன்னைக் காணக் குடையாகக் கவிழ்ந்து நிற்க
முடிமலர் குறையு முண்டோ முகமலர் தினமும் கொள்வாய
சடைமுடி கொண்டு வந்து சகலமும் விட்டு நிற்கக்
கொடிமல்லி மலரை நாளும் கொள்வதும் அழகோ நாதா. (375)

ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பறவைகள் பாரும் நாதா பத்னிநீங் காது நிற்க
அறத்தையோர்ந் தவர்க ளேனும் அயோத்தியை விடுத்து ணிந்தாய்
கறந்தகெள சல்யை யென்னைக் கனமாய்க்காத் தேவந் தானும்
இறவாது பிழைத்தி ருந்து எதிர்கொண்டு அழைப்ப தில்லை.(376)

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

கொடியவன் விலங்கும் வாழும் கோரமாங் கானம் தன்னில்
திடம்கொள்ளு மோம னந்தான் திருநகர் சுகமாய் வாழ்ந்தாய்
நடந்திட நடக்க மேலும் நதியோடு மலைக ளுள்ள
இடம்வாழ்வ தறிதென் றெண்ணும் எண்ணத்தால் விடுத்து ணிந் [தேன்.
அன்னமே கிளையில் பாராய் அழகான மணிப்பு றுவை
ஒன்றைவிட் டொன்று நீங்கி உலகினில் வாழ்வ தில்லை
மன்னவ ரோடு மண்ணில் மாமுனி வருமே செல்லார்
என்னசத் தியத்தின் தன்மை இறகுகொள் பக்ஷிக் கம்மா. (378)

சித்திரகூடம் கண்டு பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

சித்ரகூ டம்பார் தம்பி சிறந்தநல் மரங்க ளோடு
மெத்தநாள் தவத்தில் வந்த மேலான மகனைக் கண்டு
எத்திக்கும் புகழ வேநான் இங்கன ழைத்துச் சென்று
பெற்றகோ சலைக ளிக்கப் பெருமையும் பெறவே செய்வேன். ()

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அண்ணனே பரதன் வாரான் அனேகமாம் சேனை யோடே
கண்யமாய் நமையெ திர்க்கக் கைகேசி தூண்ட லாலே
மண்ணொடு விண்ணுலத் தாசை மன்னனுக் கான போதும்
விண்ணுல கனுப்பி வாரேன் விடைதர வேண்டும் அண்ணா. (380)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

தம்பியாம் பரதன் நம்பால் தகாதன செய்ய மாட்டான்
கம்பீர மாயெ திர்க்கக் கருதாது சொல்லி விட்டாய்
சம்மதம் போலே வந்தும் சமையத்தி லெதிர்க்கத் தூண்டாள்
நம்மையும் அழைத்துப் போக நாடியே வருவான் கண்டாய்.(381)
ரகுராமன் சொல்லைக் கேட்டு நம்பிய குணமார் தம்பி
செகமெல்லாம் புகழப் பெற்ற செல்வனை விடாது காக்க
வகையான கிளையோ டெய்தும் வல்லசே னைகளை யங்கு
பகைவரோ பட்சத் தாரோ பகுந்திடப் பார்த்து நின்றான். (382)

### பரதன் செயல்.

சித்திர கூடத் தண்டை சேனையை நிறுத்தி விட்டுச்
சத்ருக்க னுடனே சேர்ந்து தமையனைக் காணப் போகப்
பத்தியாய் இளையோன் காக்கும் பாசாலை வந்தோற் கண்டு
புத்தியும் மாறி யோடிப் புரண்டுவீழ்ந் தழுதான் மாதோ. (383)

### பரதன் புலம்புவது.

இந்தச்சீர் காண்ப தற்கோ எடுத்தேன்இப் புவியில் சென்மம்
மந்தரை சொல்லைக் கேட்டு மைந்தனைக் கெடுத்தாள் பாவி
சுந்தரமாய் அங்கு தித்துச் சோர்ந்துமண் மேற்ப டுக்க
வந்ததே துன்ப மென்னால் வஞ்சகி யைஎன் செய்வேன். (384)

இழைக்கிழை பொன்னைச் சேர்த்து இடையிற்பீ தாம்ப ரம்கொண்
டழகுடன் உலாவக் கண்டு ஆனந்தம் கொண்ட வுள்ளம்
பழிகாரி தன்னா லுற்றிப் புழுதியில் பார்த்த எந்தன்
விழிகளும் இருண்டு விட்டால் வினையுமே யொழியு மன்றோ. ()

அன்பாகப் பரதன் றன்னை அருளொடு மார்பு சேர்த்துப்
பின்னும்மென் மேலும் ஏங்கப் பிரியமாய்க் கண்ணீர் போக்கி
மன்னவன் சேமங் கேட்க மாண்டதை யெடுத்துச் சொல்ல
பின்னாலும் ராமன் சீதை பித்தராய்ப் புரண்டு வீழ்ந்தார். (386)

### ஸ்ரீராமன் புலம்புவது.

அண்ணாவே யெப்போ காண்பேன் அருகேநா னிருந்து காக்கப்
புண்யம்செய் யாது விட்டேன் போதும்நான் பிறந்த தையோ
தண்ணீர்மேல் கமல மாகத் தவிக்குதே யுள்ள மந்தோ
கண்ணைப்போல் கட்டிக் காத்த கருணையை யெங்கே விட்டீர். ()

புற்றில்செல் பிறந்தாற் போலப் புத்ரனாய் உமக்குத் தோன்றிப்
பெற்றோனைக் கைதான் விட்டுப் பெரும்பாவம் கொண்டே னையோ
சற்றுமே விடாது சோர தாங்கிய தந்தை தன்னைத்
தற்காவா தேவி டுத்தித் தரணியில் ஏதாய் வாழ்வேன். (388)

### ஜானகி புலம்பல்.

தந்தைக்கு மேலா யென்னைத் தளராது காத்த வையா
மந்திரத் திருந்தே னானால் மலர்முகம் பார்த்தி ருப்பேன்
சிந்தைதான் மகிழ்ந்தே அம்மா சீதாவென் றழைப்ப தெப்போ
வந்தோற்கே துன்பம் மேலும் வருமென்ற சொல்லும் பொய்யோ.

லக்ஷ்மணன் புலம்புவது.

அன்பினைத் தெரிந்தி டாமல் அற்பமாய்ச் சொன்னேனையோ
என்னமாய் வாழ்வேன் ஐயா எண்ணத்தை யறியாப் பாவி
முன்னாளின் வினையின் கூறாய் முகத்தைப்பா ராமல் செய்ய
இந்நாளில் நேர்ந்த தெற்கே இனியேது செய்வே னந்தோ. (390)

செகமெலாம் புகழும் செல்வர் சிலைபோல்மண் ணில்ப டுக்க
வகையான சேனை யோடு வரமுனி தன்னோ டங்கு
சகலரும் வந்து சேர்ந்து சாய்ந்துமே அழுது வாடும
மகர்தமைத் திகைத்துக் கண்டு மரம்போல அழுது நின்றார். (391)

ஸ்ரீராமன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

தவம்செய்து பெற்ற லாபம் தந்தையைப் பிரிந்தீ ரோதான்
தவவேஷம் தன்னை விட்டுத் தற்காக்க வழியு மில்லை
புவனத்தை யாள வந்த புண்ணியன் பரதன் காப்பான்
பவத்தையே செய்த தாலே பலமற்று நின்று விட்டேன். 392)

செய்யாத யாகஞ் செய்து சிறப்புட னீன்ற தந்தை
உயிரையே விடும்போ தந்தோ உரைத்ததைச் சொல்வாய் அம்மா
அயோத்தியில் பரதன் பட்டத் தபிஷேகம் செய்யு முன்னே
வையகம் விட்டார் வேந்தர் வாடுதே யுளமெ னக்கு. (393)

மண்மீது புகழைப் பெற்ற மாதாவாம் கௌசல் யாவும்
புண்ணியன் சொல்லைக் கேட்டுப் புழுவைப்போல் துடித்தே யங்கு
கண்ணீரை மலர்போல் சிந்திக் காகுத்த னருகே சென்று
கண்களில் வடியும் நீரைக் கரத்தினால் துடைத்து நின்றாள். (394)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மன்னவர் இரவு முற்றும் மறவாது ராமா வென்று
உன்னையே நினைந்து நைந்து உயிர்தனை விட்டார் கண்டாய்
அன்றேகம் பரத னுக்கு ஆளனுப் பவுமே வந்து
மன்னவன் கடன்மு டித்து மைந்தனை அழைக்க வந்தோம். (395)

மன்னவன் றனைப்பி ரிந்து மகனையும் கானம் விட்டு
என்னமாய் அயோத்தி வாழ்வேன் எனக்கொன் றும் தோன்ற வில்லை
அன்பான பரத னென்னை ஆதரித் தேவந் தாலும்
முன்னிலும் நீங்காத் துக்கம் முடிவாக நேர்ந்த தன்றே. (396)

அன்னையாம் கௌசல்யா சொல் அயோத்தியின் செல்வன் கேட்டு
மன்னவன் தனையே போற்றி மரம்போல நிலைத்து நிற்கப்
பின்னுனை தம்பி யங்கு பிரியவார்த் தைகளால் தேற்றி
அன்னையைக் காக்கா விட்டால் அரசர்போல் மாய்வர் என்றான். ()

கைகேசி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கைகேசி யென்னும் பேயே காகுத்தா உனையிவ் வாறு
செய்ததோ கொடுமை சொல்வாய் செல்வமே கலங்க வேண்டாம்
அயோத்திமா நகரஞ் சேர்ந்து அப்பேயைத் துரத்தி விட்டு
வையகம் எங்கும் போற்ற வாழ்குவாய் சுகமாய் மைந்தா. (398)

ஸ்ரீராமன் கைகேசிக்குச் சொல்வது.

செய்ததோர் வினையின் கூறே சீர்கெட விட்ட தையோ
தெய்வம்போல் என்னைக் காத்தீர் தீங்கது உம்மா லில்லை
அயோத்திமா நகரி லேநான் அரசர்சொல் தவணை தீர்த்து
வையகம் வருவேன் ஆள வாடுவ தேனோ அம்மா. (399)

கைகேசி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பாவியென் சொல்லைக் கேட்டுப் பட்சத்தை மறந்தே யென்னை
பாவியென் றழைத்து மண்ணில் பலருமே நகைக்க நின்றேன்
தேவியாய் வந்து தந்தை தேகத்தை விடவே செய்த
தாவிதான் துடிக்கு திப்போ தாதரித் திடவா வென்றாள். (400)

ஸ்ரீராமன் கைகேசிக்குச் சொல்வது.

தந்தையின் வார்த்தை கேட்டுத் தருப்பையைச் சிரசில் தாங்கி
மந்த்ரத்தை விட்ட பின்பு மாதாவே தப்ப லாகா
திந்தகு ரியகு லந்தான் என்றாலே கெட்ட தாக
நிந்தைசொல் வராதிப் போது நிலைபெறச் செய்வாய் அம்மா. (401)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

ஆண்டறு பதாயி ரம்மாய் யாகத்தால் பெற்ற சேயைத்
தூண்டியில் பிடித்த பின்பு துடிதுடிப் பதுவும் வீணே
மூண்டதே வினையெ னக்கு முடிவாக இன்று வந்து
பூண்டதோர் கோலம் பார்க்கப் பொருந்தவு மிலைம னந்தான். (402)

ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

பெற்றதோர் மாதா வுள்ளம் பேதைபோல் கலங்க விட்டால்
குற்றமாய் முடியு மப்பா குறைவாகச் சொல்ல வேண்டாம்
முற்றும்நீத் தோரா னாலும் முடிபதம் பணிந்து நிற்பார்
சற்றும்யோ சியாத தந்தோ சம்மத மிலையெ னக்கே. (403)

இரவும்நற் பகலும் கூடி எவரேனும் சுமையைத் தாங்கி
இருப்பரோ மண்ணில் தம்பி எனக்குநீ தெரியச் சொல்வாய்
தரித்தநாள் முதலாய் நம்மைத் தளராது தாங்கிப் பெற்றுக்
கரத்தினி லேந்திக் காத்த கருணையை மறந்து விட்டாய். (404)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சுந்த்ரமாய் இவளும் உன்னைச் சோராது காத்தா ளன்றோ
மந்தரை சொல்லைக் கேட்டு மகனையே தோபி மைழத்தாள்
தந்தையின் வினையின் செய்கை தடைசெய்த ததனை விட்டு
வந்ததாய் வனத்தெண் ணுடமல் வையகம் ஆள நிற்பாய். (405)

ஸ்ரீராமன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

தள்ளாத வயதி லங்கு தாள்பணி செயலை விட்டுக்
கள்ளக்கண் டகர்கள் வாழும் கானக மிருப்ப தேனோ
தள்ளினல் தந்தை சொல்லைத் தருமமும் கெடுமென் றெண்ணி
உள்ளமும் கலங்கி நின்றேன் உண்மையை நம்பு தாயே. (406)

வசிஷ்டன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

குற்றமா யெண்ணி டாமல் குமரதள் ளாத நாளில்
பெற்றவள் கலங்க வைத்தல் பெருமைக்கே யழகோ சொல்வாய்
முற்றும்நீ யறிந்த தாலே முடிந்ததை யெல்லாம் விட்டுப்
பற்றற மனதோ டேகிப் பாராள வருவாய் கண்டாய். (407)

ஸ்ரீராமன் வசிஸ்டனுக்குச் சொல்வது.

வல்வினைப் பயனை மண்ணில் மாதவா மன்ன ராலும்
வெல்லவே முடியா தென்று மெய்மையா யறிந்தேன் இன்று
அல்லலை வெகுவாய்ப் பட்ட அன்னையைக் காக்கா திங்கு
கல்லுரு வைப்போல் குந்திக் கழிக்கவிட் டதுகாண் காலம். (408)
என்வினைப் பயனே யாகும் என்குல வரசை விட்டுப்
பின்னுன பரதன் தன்னைப் பிரியவே விட்ட தந்தோ
முன்னமே வனம்போ கென்ன முழுமதித் தந்தை சொல்ல
இன்றேதாய்த் தள்ளு வேன்நான் என்னைச்சோ திப்ப தேனோ. ()

பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தவஞ்செய்து உம்மைப் பெற்றூர் தந்தைதா னரசைக் காக்கத்
தவவேடம் தன்னை விட்டுத் தம்பியின் பழியைத் தீர்த்து
தவசிசொல் தட்டா மல்நாம் தாய்மனம் நோகா மல்இப்
புவனத்தை யாள நின்றால் புகழேதும் கெடமாட் டாவே. (410)

ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

சத்தியம் தன்னை விட்டோர் சம்பத்தாய் ஆண்ட போதும்
முத்திக்கு மார்க்க மில்லை முடிவான வார்த்தை சொன்னேன்
நித்தியம் பொருளைத் தேடி நிலையில்லை வாழ்வை நம்பி
பித்தங்கொண் டலைந்து சாகப் பிறந்தோமோ புவியில் தம்பி. (411)

உள்ளத்தில் கசப்பு மேலே உருவமும் சிறப்பாய்க் கொண்டு
கள்ளஎண் ணத்தில் வாழ்ந்தால் கரையேற மார்க்க மில்லை
தள்ளாமல் எனது சொல்லைத் தாயெண்ணம் போல்நடந்தால்
பிள்ளையாய் நம்பி மாண்ட பிதாவின்சொல் காத்து வாரேன். (412)

பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

விண்ணவர் புகழ நாளும் வெகுசெல்வ மாய்வ ளர்ந்து
மண்ணின்மேல் படுத்தல் காண மனம்தடு மாறு தையோ
பண்ணின பவத்தின் கூறோ பாவிக்குப் பிறந்த தீதோ
கண்ணியமாய்ச் செயாமல் வாழ கானகம் விட்டாள் அந்தோ. (413)

ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

மண்ணுளப் பிறந்த போதும் மாதாவின் மனதைத் தேற்ற
மண்மிகு வனம்வாழ்ந் தாலும் மாட்சியே பெறுவார் தம்பி
புண்ணிய அரசர் தானும் புகழினை விடாது கைகை
எண்ணிய வரத்தை நல்கி இறந்ததை யோசிப் பாயே. (414)

பதினான்காண் டுகள்க ழித்துப் பஞ்சமி பூர்வம் சித்ரை
உதயத்தில் உன்னைக் காண்பேன் உலகாள நிற்பாய் கண்டாய்
விதியின்றன் பயனை யாரும் வெல்லவே முடியு மோதான்
மதியினில் மேன்மை கொண்ட மாதாவைக் காக்க நிற்பாய். (415)

பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தம்பிலக்ஷ் மணனைப் போலத் தண்டக வனமே வந்து
நம்பியே தொண்டு செய்து நாட்போக்கத் துணிந்தேன் அண்ணா
சிம்மங்கள் வாழு மிங்கு சிறுவன்தா னேது செய்வான்
சம்மதம் போலே காத்துச் சஞ்சல மொழிப்பேன் அண்ணா. (416)

ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

தந்தையும் உலகில் வாழ்ந்தால் தடையேது மில்லா மல்நீ
சுந்தரமா யென்னைச் சார்ந்து சொல்படி வருவாய் செய்து
வந்தலக்ஷ் மணனை விட்டு வனத்தினில் தனியாய் வாழ்ந்து
தந்தையைப் பிரிந்து வாடும் தாய்மாரை மதித்தேன் காக்க. (417)

### பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மண்ணொடு விண்ணு மிப்போ மன்னவன் தவத்தில் வந்த
புண்ணியன் வனத்தி ருக்கப் பொறுக்குமோ ஏது செய்வேன்
சண்டாளர் கேட்ட போதும் சபிக்காது விடுவா ரோதான்
தொண்டுநான் செய்யா விட்டால் தோஷந்தான் போமோ அண்ணா.

### ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

மன்னவன் சொல்வி டாது மகனுமே வனத்தி ருக்கப்
பின்னுக வருமு னக்குப் பெரும்பழி சேர்ந்தி டாது
அன்னையால் குற்ற மில்லை அரசாலும் தோஷ மில்லை
முன்னுளின் வினையே யிங்கு மூண்டதால் ஏன்ச பிப்பார். (419)

### பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அருந்தவம் செய்து பெற்ற ஐயனை வனம னுப்பப்
பரதன்கா ரணமே யென்று பாரினில் பழியெ னக்குச்
சரியாமோ வருவ தண்ணா சான்றோரின் குலமு தித்துப்
புரமெலாம் புகழப் பெற்ற புண்ணியா கருணை செய்வாய். (420)

### ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

தந்தைசொல் தட்டா என்போல் தமையன்சொல் தனைத்தட் டாத
சுந்தர பக்த னென்று சொல்லியே புகழ்வார் தம்பி
வந்தவன் எனைவி டாது வனத்தினில் காப்ப தேபோல்
மந்த்ரத்தில் தாய்மார் தங்கள் மனம்போல நடப்பாய் கண்டாய். ()

### பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தாயாகி யெனக்கும் நம்தம் தந்தைக்கும் எமனாய் வந்து
காயாம்பூ வணனை யிந்தக் கானமே வாழச் செய்தாள்
பேயாகப் பிறப்பி னும்மண் பெருமையே வாய்க்கு மன்றோ
சேயாய்அ யோத்தி வந்து செகத்தினில் நகைக்க நின்றேன். ()

### ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

தன்வினை தன்னைச் சுட்டால் தாயேது செய்வாள் மைந்தா
என்னுடன் பிறந்த வர்க்கு இதுஅழ காகா தப்பா
மன்னவர் விதியை நொந்தார் மகனுர்தந் தைக்குட் பட்டார்
பின்னுக வந்த நீயும் பெற்றாளை காக்க நிற்பாய். (423)

### பரதன் கைகேசிக்குச் சொல்வது.

அண்ணாவை வனத்தில் விட்டு அரசையு மாள வைத்து
மண்மீது புகழைப் பெற்ற மாதாவைக் கலங்க விட்டுப்
புண்ணியர் ஜனக னீன்ற பொற்கொடி வாடச் செய்து
கண்யமாய் அரசைக் காக்கக் களித்தளித் தாயோ வென்னை. (424)

மாடத்து மணிவி ளக்கை மலர்ப்படும் ஆணி முத்தைக்
கூடத்து மணியை நல்ல கோசல்யா கறந்த தேனைச்
சூடத்தைத் தரிக்கச் செய்து சுகமாய்வா ழாம லிங்கு
கிடம்போ லலைய விட்டாய் கிஞ்சித்தும் இரங்கா தையோ. (425)

### ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

மலைமீது குந்த நானும் மாபவம் கொண்ட தாலே
நிலையான அன்னை யிப்போ நீங்கவே செய்த தப்பா
குலையினில் அடக்கிப் பெற்றோர் கொடுமையைத் துணியார் செய்ய
அலையாமல் வீணா யிங்கு அயோத்தியைச் சேர்வாய் தம்பி. (426)

### பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அண்ணனார் வனத்தி ருக்க அரசையாள் வதிலும் நாயேன்
எண்ணெயை யெரிக்க விட்டு இறப்பதே மேன்மை யாரும்
கண்கெடப் பிறகு யேதாய் காட்சியைக் களிப்பேன் கண்டு
வண்டுபோல் துளைக்கு தென்னை வழியேதும் தோன்ற வில்லை. ()

### ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

எல்லாம்அக் கடவுள் செய்கை இளையாது நிற்பா யாகில்
பொல்லாங்கு உனக்கெய் தாது புண்ணாகச் செய்யா தென்னை
அல்லலே வெகுவாய்ப் பட்ட அன்னையின் மனம்க லங்கச்
செல்லாக எரித்தி டாமல் சேருவாய் அயோத்தி தம்பி. (428)

### பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அலைகடல் சீவ னேனும் அடவிவாழ் விலங்கே யேனும்
மலைஉர கந்தா னேனும் மாட்சியே நல்கு மன்றோ
குலமகன் தன்னை விட்டக் கொடியபா தகியைக் காத்து
உலகினில் பெருமை யற்று உயிருடன் வாழ்வ தேனோ. (429)

### ஸ்ரீராமன் பரதனுக்குச் சொல்வது.

பெற்றவர் தமைக்கை விட்டுப் பெருமையாய் வாழ்ந்த போதும்
புற்றினில் வருஞ்செல் லுக்கப் புண்யரா டாக மாட்டார்
சுற்றுமே வயலில் புல்லே சொருசாக வளர்ந்த போதும்
உற்றவன் எறிவ தேபோல் ஒருபுக ழடையார் தம்பி. (430)

### பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அண்ணனைப் பிரிந்த பின்னர் அயோத்தியி லிருக்கே னென்று
கண்யமாய் சத்யம் செய்தேன் கறந்தகௌ சல்யா முன்னில்
புண்யபா துகைநீ யீந்தால் பொருந்தியே நந்தி யில்நான் [முன்.
எண்ணைப்போல் நாளை யெண்ணி எதிர்பார்த்தே யிருப்பே னென்

### சத்துருக்கன் செயல்.

ஓடுடைக் கலத்தின் நீரா யொழுகவே விடாது நின்று
காடுடை மலையிற் குந்தக் காகுத்தன் விதியோ வென்ன
வாடும்சத் துருக்கன் றன்னை வரதன்ற னருக ழைத்தே
ஏடுடைச் சலத்தைப் போக்கி இடக்கரம் சேர்த்திட் டானே (432)

### ஸ்ரீராமன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

இந்தநா ளில்ந மக்கு இப்படி நேர்ந்த தோடு
தந்தையை விட்டு நீங்கித் தவிக்கவிட் டதுநம் பாவம்
மந்திரந் தனிலி ருந்து மாதாவைக் காத்து வந்தால்
சுந்த்ரமாய் கானம் வாழ்ந்து சொல்படி வந்து சேர்வேன். (433)

### சத்துருக்கன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அண்ணனுர் நந்தி நிற்க அயோத்தியி லென்செய் வேன்நான்
கண்ணிமை போலே காத்துக் கலங்கவிட் டீரே அண்ணு
ஒண்டியாய் வாழ நேர்ந்த துமக்குப்பின் னுகை வந்தும்
பண்ணின பவந்தா னேதோ பட்சமாய்க் காப்போ ரில்லை. (434)

### ஸ்ரீராமன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

அன்னைகோ சலைத னக்கு அருந்தவச் செல்வன் நீயே
அன்போடு வருவார் காத்து அழுவதால் பயனே யில்லை
மன்னவர் சொல்வி டாது மகவாய்வந் ததுமே செய்து
முன்னிலும் மேன்மை கொள்வாய் முடிகொண்டு தப்ப லாமா ()

சத்துருக்கன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அரசரு மழைப்ப தேபோல் அன்பாக அருக ழைத்துக்
கரமதால் தழுவி யென்னைக் கருணையாய்க் காக்கா விட்டால்
இரவொடு பகலு மாக ஏக்கமே யுளத்தில் கொண்டு
தரணியில் வாழ்வே னென்று தம்பியை நினைக்க வேண்டாம். ()

அன்னைமார் துன்பம் கொள்ள அயோத்திநற் செல்வன் ஏங்கப்
பின்னனை இருவ ரங்கு பேழைபோற் கண்ணீர் சோர
மன்துணை சுமந்த்ரன் தானும் மாமுனி சோர்ந்து நிற்கக்
குன்றுவாழ் பறவை கண்டு குரல்தரா திருந்த தம்மா. (437)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

இமையற்ற கண்ணு யிப்போ இளைஞனர் தனக்கு வாய்க்கச்
சமையம்பார்த் திருந்தா யோநீ சந்தோஷ மாயிற் றுள்ளம்
தமையனை விட்டு நீங்கத் தவிக்குமிக் கோலங் கண்டு
கமைகொள் அண் ணுக லெங்கும் காக்ஷியை நோக்காய் அம்மா. ()

கூனியே ணியதா யேற்கக் குடியையூ ணியதாய்க் தைக்க
யானைக்கு அடிச றக்க அவனியு மெனைந கைக்கத்
தேனைநல் குங்கென சல்யா தேங்கிமண் மீது நிற்க
மானவன் தம்பி வாட மனம்குளிர்ந் ததோசொல் அம்மா. (439)

பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

மூத்தவர் தாமு மக்கு மூவர்கள் வாய்த்தும் தாயால்
கூத்தாடி விடிந்த தேபோல் குவலயம் வாழ லாச்சு
மாற்றுறை யாமா ணிக்கம் மண்மீது தங்க நேர்ந்தால்
நோற்றநோன் பின்ப யன்கொல் நோகாம லிருப்பாய் தம்பி. (440)

பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது,

பூனையும் புனுகு நல்கப் புவியினில் மணம்ச தற்காய்
கூனியும் பரிந்த தங்கு குளவியாய் நின்ற தல்லோ
கானம்தா டகையாள் தன்னைக் கலங்காம லெதிர்த்துக் கொன்று
வானவர் புகழப் பெற்று வஞ்சனைக் கஞ்ச லேனோ (441)

ஸ்ரீராமன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

தந்தையின் சொலைவி டாது தமையன்றான் நடப்ப தற்குச்
சுந்தர தம்பி மாரும் சொல்படி நின்றா ரென்று
இந்த்ராதி தேவர் கேட்டால் எந்நாளும் புகழ்வா ரன்றோ
மந்த்ரத்தி லிருப்பா யாகில் மனம்போல வந்து காப்பேன் (442)

ஸ்ரீராமன் சுமித்திரைக்குச் சொல்வது.

மன்னவர் தமைப்பி ரிந்து மகனையும் விட்டு நீங்க
என்னுடை வினைப்ப யன்றான் இப்படிச் செய்த தும்மை
என்னமாய் வாழ்வீர் தாயே எதிராகத் தம்பி யின்றி
முன்னமே தெரிந்தி ருந்தால் முடிகொள்ளா வாறு செய்வேன் ()

சுமித்திரை ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மன்னவர் விதியை நொந்து மாண்டதில் குற்ற மில்லை
உன்பெரும் கோலங் கண்டு உடல்நின்ற பாவ மேதோ
பின்னாக வந்த தம்பி பேதையால் காக்க லாகா
தென்னைக்காக் கும்வல் லாளன் இராமனீ யொருவன் கண்டாய்.

ஸ்ரீராமன் சுமித்திரைக்குச் சொல்வது.

தேன்கூடு தன்னையெ ரிக்கத் தேடியே கனல்வந் தாற்போல்
கூனென்னும் நோயே நந்தம் குடிதனைக் கெடுத்த திப்போ
நோன்பினை விடாது செய்து நோன்மைபாய்ப் பெற்ற பேரால்
நானுன்னை அயோத்தி காக்க நாளையே கிடைக்கும் தாயே. (445)

சுமித்திரை ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கொடியதா டகையைக் கொன்ற கோதண்டன் றன்னை யின்று
குடியில்லா அரச தாகக் குவலயம் வாழ்வ தேதோ
கொடியது நேர்ந்த தெல்லாம் கோன்வினைச் செயலே யாரும்
தடையேதும் செய்யா திப்போ தரணியை யாள வாராய். (446)

ஸ்ரீராமன் சுமித்திரைக்குச் சொல்வது.

தாடகை தனைக்கொல் மைந்தன் தரணியெங் கும்வாழ்ந் தாலும்
கோடியாய்த் தவம்செய் தாற்கு குறைகள் சார்ந்திடுமோ அம்மா
தேடியே வந்த தீங்கைத் தீர்க்கவோ வழியில் லாமல்
நாடிய வரத்தை யீந்து நடந்ததை யோசிப் பீரே. (447)

ஸ்ரீராமன் செயல்.

பாதுகை தனையி ராமன் பரதன்றன் கையில் ஈக்க
மாதுரு மனமு மேங்க வானவர் உளமக ளிக்கப்
பாதத்தைப் பணிந்து போற்றிப் பாதுகை சிரமே கொண்டு
சூதுசெய் அன்னையை நொந்து சோர்ந்துரா மனையும் நோக்கி (448)

பரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அன்னையைத் தம்பி மாரை அன்பாகக் காத்த போதும்
பின்னுகப் பணிகள் செய்யும் பெருமைக்கீ டாக மாட்டா
சொன்னதின் தவணை யைப் போல் சுந்தரா வாரா விட்டால்
அன்றேஅக் கினியில் வீழ்ந்து ஆவியை விடத்து ணிந்தேன் (449)

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கலைகோட்டு முனியை யங்கு கானிலே கண்டால் ராமா
அலையாமல் வீணு யெங்கும் அவர்பாலே தங்கி நிற்பாய்
குலப்பெண்†சாந் தையுமங் குண்டு குறையேது மனுகா மற்றுன்
நலமாகக் காப்பாள் நல்லள் நாட்டிக்குள் வருகு மட்டும். (450)

அரசன்கா ரியமு டித்து அனைவருந் தேறக் கூறி
வரமுனி முதலா னோரை வரிசையாய்ப் பதம்ப ணிந்து
கரமதில் தம்பி சேர்த்துக் காகுத்தன் விடையும் நல்க
பரதன்வி டாம லங்கு படிப்படி பார்த்துச் சென்றான் (451)

கடன்பட்டார் நெஞ்சத் தைப்போல் கவலையே யுளத்தில் கொண்டு
இடத்தினை யெல்லாம் விட்டுத் தேரேறி வனத்தில் போக
அடர்ந்துதான் தவத்தைச் செய்த அன்னையின் துயரங் கண்டு
நடந்ததை யெண்ணி நொந்தே நகரத்தைச் சேர்ந்தார் அம்மா. ()

நகரெலாம் சப்தம் இன்றி நன்மையும் வளமு மின்றி
அகமெலா மகிழ்வு மின்றி ஆலய பூசை யின்றி
மகரிலாக் காடு போலும் மதியிலா வானம் போலும்
பகவசிர் மண்ட பந்தான் பார்த்துமே பரதன் சோர்ந்தான். (453)

பரதன் செயல்.

முடிக்கபி ஷேக மென்று முகம்பார்க்க வோடி வந்து
சடைமுடி கொண்டு ராமன் சாதுபோல் நிற்கக் கண்டேன்
கொடுக்காக இரண்டும் வாய்த்த கொடியதேள் கொட்டி னற்போல்
குடியையே கெடுத்த அன்னை கொடுமையார் ராமச் சந்த்ரா. (454)

* விபண்டகன் புத்திரன் மான்வயிற்றில் பிறந்தவர் இருஷியசிருங்கரென்னும் பெயருண்டு. தசரதன் புத்திரகாமேஷ்டி செய்தவர்.

† தசரதன் புத்திரி. அங்கநாட்டரசனுன உரோமபாதன் வளர்த்த புத்திரி இருஷிய சிருங்கன் மனைவி.

பத்தரை மாற்றுத் தங்கம் பகரவொண் ணுநா மத்தைச்
சித்திர கூடம் தங்கச் செல்வமாய் வளர்த்தா ரையோ
அத்திமேல் கோலம் கொண்டு அழகாக வரவே கண்டு
பத்தியாய்ப் பணிய வந்தும் பாவியா னேன்நான் ராமா (455)

காயாம்பூ மேனி அன்பா கானம்விட் டுப்பி ரிந்த
தாயார்உள் ளம்எ தாகத் தவிக்குமோ யேது செய்வேன்
பேயோபி சாசோ அன்றிப் பெரும்பூத மோஅ யோத்திச்
சேயாக உதித்தோன் தன்னைச் செய்தானே மோசம் ராமா (456)

நவமணி முடியில் மின்ன நன்முத்து மாலை யென்னப்
பவளமோ உதடு மென்னப் பாதத்தின் கருணை யென்ன
தவத்தின்றன் பெருமை யென்ன தரைகுந்தக் கால மென்ன
புவனத்தில் ஏதாய் வாழ்வேன் புண்யனே ராமச் சந்த்ரா. (457)

கரத்தில்கங் கணந்தா னென்ன கலிக்கத்து ராயு மென்ன
மரகதப் பச்சை யென்ன மாணிக்கப் பதக்க மென்ன
பரதன்றான் பிறந்த தோஷம் பச்சைப்புல் சிரசில் தாங்கி
மாவுரி கொண்டு நின்றாய் மன்விட்டு ராமச் சந்த்ரா. (458)

சின்னநல் வயது தன்னில் சீராக வாழா திங்கு
பொன்னுன மேனி முற்றும் புழுதிக ளடர ஏதோ
அன்னையோ டயோத்தி வாட அடியேன்நந் திமினில் தேங்கத்
குன்றின்மேல் உளம்க லங்கக் கொடுமையோ ராமச் சந்த்ரா.(459)

கதிரவன் வெப்பம் தாங்கக் காகுத்தன் வனத்தில் தங்க
மதியைவிட் டகனு லல்லோ மன்னன்தே வியாக வந்தும்
சதிசெய்ய எண்ணம் கொண்டு சமயம்பார்த் துக்கெ டுத்தாள்
விதியும்என் வினையு மாக வேகுதே யுள்ளம் ராமா (460)

அயோத்திமா நகர முற்றும் அடவியில் நிற்கும் போதும்
செய்ததோர் வினைதா னிங்கு சேர்ந்துவா ழாம லாச்சே
ஐயோவென் றனது திவ்ய அழகுகொள் முகத்தைக் காண்பேன்
வையகப் பழியைத் தீர்த்து வாழ்வதென் றோநான் ராமா. (461)

தேவியோ டயோத்தி நின்று தேசத்தை யாள்கி லாது
பாவியிப் பரதன் ஏனோ பாரினில் பிறந்தா னையே
ஆவியை விடுத்த தந்தை அன்பல்லோ மேன்மை மண்ணில்
கூவிபு மழுதா லுந்தான் குணமேதோ ராமச் சந்த்ரா. (462)

னொன்றோதான் இரண்டோ மூன்றோ ஒன்றாகப் பதினான் காண்டு
என்னவாய் துணிந்தா ளோதான் இப்படி வார்த்தை யேற்க
பன்றிபோல் நடக்க வாய்த்தும் பண்ணினாளே கூனி மோசம்
மன்னவன் மகனை விட்ட மனமேதோ ராமச் சந்த்ரா. (463)

கூனியாய்ப் பிறந்து பாவி கோசல்யா மகனை விட்டு
யானைமே லேறி னாளே ஆ! ஆயீ தென்ன காலம்
மானையும் தொடர்ந்த வேடன் மன்னனைத் தேடிக் கண்டும்
கூனியும் பிடித்த செங்கோல் குறைக்காச்சே ராமச் சந்த்ரா. (464)

கத்திரிச் செடியைத் தாவக் கரப்பல மற்ற கூனி
எத்திசைப் புகழும் பெற்ற எந்தையைக் கெடுத்து விட்டாள்
பத்தியு மெரியு துள்ளம் பாவினா னேதாய் வாழ்வேன்
உத்தமா தட்டி விட்டீர் ஊழ்இது ராமச் சந்த்ரா. (465)

தினமுமே அழகைக் கண்டு திருவுள்ளம் கொண்டு நின்று
கனமாக அருக மைத்துக் கட்டிமுத் தம்காண் அன்னை
வனத்தில்விட் டுப்பி ரிந்து வாழ்வதாய்த் தோன்ற வில்லை
கனலதாய் எரியு துள்ளம் காலமோ ராமச் சந்த்ரா. (466)

கௌசல்யா பரதனுக்குச் சொல்வது.

அப்பனே யெனது செல்வா அருமையே குழந்தாய் கேளு
ஒப்பில்லாப் புகழைப் பெற்றாய் உனையீன்ற அன்னை யாலே
இப்படி வீணாய் இங்கு ஏதுக்கோ கலங்கு கின்றாய்
தப்பிதம் நேர்ந்த தெல்லாம் தந்தையின் வினையா லன்றோ. (467)

பரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

தவமான தவத்தைச் செய்து தசரதன் பெற்ற சேயன்
புவனமா ளாது செய்த புகழ்தானும் வாய்த்த திங்கு
குவலய மெல்லா மிப்போ குணவதி யீன்ற சேயால்
கவசகுண் டலனும் சென்றான் கானத்தி லென்பா ரம்மா. (468)

கௌசல்யா பரதனுக்குச் சொல்வது.

தவத்தினில் பெற்ற சேயைத் தண்டக வனத்தில் விட்டு
கவலையை யொழித்து நின்றேன் கண்மணீ காப்பா யென்று
எவரேனும் பழிப்பா ரோநீ இக்ஷ்வாகு குலம்வி ளங்கக்
குவலயம் ஆள நிற்பாய் குறையேதும் நேர மாட்டா. (469)

பரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

அயோத்தியை நந்தி யெற்கு அண்ணன்பா துகையே அம்மா
கைகேசி பெறும்வ ரத்தால் கவலையே உள்ளம் கொண்டு
செய்யாத தவத்தில் வந்த செல்வனும் வனத்தில் நின்று
வையகம் வந்தாள் மட்டும் வாடிட நேர்ந்த தங்கு. (470)

சுமித்திரை பரதனுக்குச் சொல்வது.

தள்ளாத வயதில் தாயைத் தமையனில் லாக்கா லத்தில்
எள்ளவும் துன்பம் கொள்ளா திளைஞன்காப் பதுதர் மந்தான்
உள்ளமும் கலங்க லோடு உந்தன்கோ லத்தைக் கண்டு
முள்ளாகத் தைத்து ருமல் மோனமாய் நிற்பாய் கண்ணே. (471)

பரதன் சுமித்திரைக்குச் சொல்வது.

அன்னையே உமைப்போ லொத்த அருமைக்கற் பத்தில் வந்தால்
மன்னரும் மாள மாட்டார் மகனுமே வனத்தில் நில்லார்
என்னையும் பழிசே ராது இப்படி அழுகே ராது
என்னவாய்ப் பொறுத்த போதும் என்னைவிட் டொழிய வில்லை. ()

சுமித்திரை பரதனுக்குச் சொல்வது.

சுழல்காற்றில் அகப்பட் டால்தான் சுழன்றுமே நிற்க வேண்டும்
பழியும்பா வமும்சே ராது பாரினில் பெருமை தாழா
விழியும்செவ் வான மாக வேகுதே யுள்ளங் காண
அழியாத புகழைப் பெற்றுய் அயோத்தியை ஆள நிற்பாய். (473)

பரதன் சுமித்திரைக்குச் சொல்வது.

அண்ணனுர் அடிப ணிந்து அயோத்தியைச் சேரும் மட்டும்
விண்டுமி கைபிற் கொள்ளேன் விழியாலும் நகரை நோக்கேன்
தண்ணீர்மேல் தாம ரைபோல் தவிக்கவே விட்ட தாலே
கண்ணீருண் டாலு மென்ன காயமே அழிந்தா லென்ன. (474)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

மூளையி லாடிக் கூனி மூச்சுமே விடாமல் ஊத
பாசத்தை யெலாம்ம றந்து படுத்துப்பூ மியிலே அம்மா
நாசித்து வாரங் கொண்டு நாட்டையே உரிந்து விட்டு
ஆசையு மொழியாய் பின்னும் அண்ணனைக் கெடுத்தா யல்லோ. ()

சுமித்திரை பரதனுக்குச் சொல்வது.

சொன்னதை யெல்லாம் விட்டுச் சோகத்தைக் கொள்வ தாலே
அன்பனும் வருவ தில்லை அரசுமே பிழைப்ப தில்லை
துன்பத்தா லிலையுந் தாயைத் துடிக்கவும் விடாம லிப்போ
பின்னவன் மனதைத் தேற்றிப் பிரியத்தைச் சொல்ல நிற்பாய். ()

பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

வந்ததோர் வினையொ ழிக்க வருமட்டும் நந்தி யில்நான்
மந்திரம் செபித்துக் கொண்டு மன்னனைப் பார்த்தி ருப்பேன்
மந்திரி சுமந்தி ரன்றான் மாமுனி நாட்டைக் கார்ப்பார்
மந்த்ரத்தில் கௌசல் யாவை வருகுவாய் மகவாய்க் காத்து. (477)

பரதன் செயல்.

ஆற்றமண் எண்ண லாகும் அன்னைகௌ சல்யை சேய்க்காய்
நோற்றதைக் கணக்கி டற்கு நூலாலு மாக மாட்டா
காற்றடை குடமா மென்று கருதாமல் வீணாய் ஐயோ
தூற்றிவிட் டாளே பாவி துடிக்குதே ராமச் சந்த்ரா. (478)

அன்பான லக்மன் தானும் அடவியில் தொண்ட னானன்
பின்னான சத்து ருக்கன் பெற்றாளைக் காக்க நின்றான்
என்னைப்போல் பாவி மண்ணில் எவரேனு மிருப்பா ரோதான்
ஒன்றுக்கும் பயனில் லாமல் உதித்தேனே ராமச் சந்த்ரா. (479)

சுமித்திரை பரதனுக்குச் சொல்வது.

அண்ணனார் வனத்தி ருக்க அழுவது மேன்மை யாகா
புண்ணியன் எவண்நின் றாலும் புகழோடு வாழ்வான் கண்டாய்
தண்டக வனத்தில் விட்டுத் தவிக்கும்தாய் நோகா வண்ணம்
எண்ணம்போல் நந்தி யிற்றான் எதிர்பார்த்தே யிருப்பாய் சேயே.

பரதன் செயல்.

தவஞ்செய்த பாக்கி யத்தால் தம்பியும் பின்னால் நின்றான்
பவத்தையே செய்த தாலே பாதுகை பெற்று நின்றேன்
நவலோக மதிக்க வென்று நாட்டுக்குள் வருவீ ரோதான்
புவனமேற் றும்பொற் பாதம் போற்றினேன் ராமச் சந்த்ரா.,(481)

### கௌசல்யா பரதனுக்குச் சொல்வது.

எப்படி வாழ்வாய் சேயே இருள்சூழ்ந்த அங்கு நீயும்
இப்படி வாய்க்கு மோதான் இச்வாகு குலசேய் கட்கே
சப்பாத்திக் கள்ளி சூழச் சருகிலை படர்ந்த கானம்
ஒப்பாது எனது வுள்ளம் ஒண்டியாய் வாழ அங்கே. (482)

### பரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

உயிர்போன உடலை நன்றாய் உருக்கமாய்ப் போசிப் பித்தல்
வையமா ளாது செய்த வஞ்சனெற் காத்த லொன்றே
செய்யாத அறத்தால் வந்த செல்வனே மண்மேல் வாழ்ந்த
கைகேசி பெற்ற சேயன் கஷ்டமும் பெரிதோ அம்மா. (483)

மல்லிகை முல்லை யோடு மருவும்மண் ணதனில் சிந்தப்
புல்லுக்காய் மனம்வெ குண்டு புழுகதாய்த் துடிப்ப தேனோ
செல்லையே மாமும் காத்துச் சேமத்தை அடையா தேபோல்
சொல்தவ முச்சேய் இங்கு சுகம்கெடச் செய்தா ளையோ. (484)

### கௌசல்யா பரதனுக்குச் சொல்வது.

வந்ததோர் வினையால் ராமன் வனத்தினில் வாழா நின்றான்
நந்தியி லிருப்ப தேனோ நவமணி மேடை யெல்லாம்
மந்திரம் தனிலி ருக்க மனம்போல்வா ழாம லிங்கு
சுந்தர மோவு னக்கே சோர்ந்துமண் ணிற்ப டுக்க. (485)

### பரதன் கௌசல்யாவுக்குச் சொல்வது.

நவமணி யழகு மேடை நன்முத்துத் தோர ணங்கள்
பவளத்தி னால்ஸ்தம் பங்கள் படிக்கத்தால் படிக ளும்தான்
குவலயம் புகழ வெங்கும் குலவிளக் கொளிரச் சோதி
நவமணி ஜொலிக்கு மோதான் நந்திநற் கிராமம் மேலே. (486)

கம்பீர விற்கோ தண்டம் கரமேந்திக் கானம் சென்ற
உம்பரு மேற்று மந்த உத்தம னடியை விட்டுக்
கம்பமா யானை பின்றன் கழுத்தின்வன் றகத்தில் நின்று
இம்பரும் செல்வ மோடு இவ்வர சியான்வேண் டேனே. (487)

இப்படி விதியும் இங்கு ஏதுக்கோ வாய்த்த தோரேன்
தப்பவும் விடுமோ வென்னைத் தமையனை விட்ட தோஷம்
தெப்பம்போல் துடிக்கு துள்ளம் தேவரீர் கோலம் காண
வெப்பமும் செய்த கூனி வினையாக நின்ற ளேயே. (488)

அன்பனை விட்ட தோஷம் அரவம்போல் சுற்றி நிற்க
துன்பமே மனத்தில் கொண்டால் துளைக்குமே வண்டாய் என்னை
இன்னமும் பதினுன் காண்டு யாதினும் கவலை கொள்ளா
அன்னையே யயோத்தி நின்றால் அருந்தவச் சேனைக் காண்பாய். (489)

பரதன் சொல்.

தரையில்பா தம்தாங் காமல் தங்கத்தைச் செதுக்க விட்ட
மரகதப் பாது கைதான் மன்னவன் கொடுத்த திப்போ
பரதனும் கொண்டா னென்று பட்சத்தை விடவே வேண்டாம்
சிரமதால் வணங்கக் கொண்டேன் சீர்பெற ராமச் சந்த்ரா. (490)

கல்லான அகலி மீது கழலடி பாதம் தீண்ட
பொல்லாத வினையொ ழிந்து புகழொடு நின்ற தாலே
கொல்லுறும் விலங்காய் வந்தாள் குலையினில் பிறந்த தோஷம்
எல்லாமே யொழியு மென்று இதைக்கொண்டேன் ராமச் சந்த்ரா. (491)

பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

அண்ணனை வஞ்சித் தோரும் அடுத்தாரைக் கெடுத்த பேரும்
பெண்கொலை செய்த பேரும் பிள்ளைக்கு நஞ்சிட் டாரும்
கொண்கனைக் கொன்ற பேரும் கோவினைப் பலிசெய் தோரும்
மண்ணினில் புழுவாய்த் துள்ளி வறுமையே கொண்டு நிற்பார். (492)

அருந்தவச் செல்வன் றன்னை அழகான முகத்தான் றன்னை
வருவினை தீர்த்தான் றன்னை வரமுனி யைக்காத் தோனை
பெரும்புகழ் பெற்றோன் றன்னைப் பெருமையே வாய்த்தான் றன்னைத்
திருமுகம் காணக் கண்கள் தீயினும் கொடிய தல்லோ. (493)

கண்ணையும் கவர்ந்தான் றன்னைக் கமலமொத் திடுங்கண் ணானை
எண்ணத்தை முடித்தான் றன்னை இக்ஷுவா குலச்செல் வோனை
அண்ணனாய் வாய்த்தான் றன்னை அருந்தவப் புண்யன் றன்னை
கண்பனைத் தேனைப் பேசா நாளெல்லாம் பிறவா நாளே. (494)

வேறு

எங்கும் நிறைந்தது ராமம் இன்பம் தருவது ராமம்
மங்கள மாவது ராமம் மகிமை வாய்ப்பது ராமம்
சங்கை யொழிப்பது ராமம் சாதுவாய்ச் செய்வது ராமம்
புங்கனாய் நிற்பது ராமம் போற்றுவை ராம நாமமதே. (495)

மந்திர மாவது ராமம் மதித ருவதும் ராமம்
சுந்தர மாவதும் ராமம் சுகம்பெ றுவதும் ராமம்
தந்தைபோல் காப்பது ராமம் தாயாய்ப் போஷிப்பும் ராமம்
பந்து மித்திரர் ராமம் பாடியே நிற்பாய் நாமமதே. (496)

செல்வ மாவதும் ராமம் சேமம் தருவதும் ராமம்
கல்லையும் காத்தது ராமம் கருணை யாவதும் ராமம்
அல்லலை யொழிப்பது ராமம் அமிர்த மென்பதும் ராமம்
வல்லமை யாவது ராமம் வணங்குவோம் ராம நாமமதே. (497)

அண்ணனும் அப்பனும் ராமம் ஆதிஸ்ரீ ரங்கனும் ராமம்
கண்ணைக் காப்பது ராமம் கவலை தீர்ப்பதும் ராமம்
புண்ணிய மாவதும் ராமம் போதம் தருவதும் ராமம்
மண்ணை யளிப்பதும் ராமம் மறவாதே ராம நாமமதே. (498)

வேறு

எள்ளள விரங்கா ளாகி இக்ஷ்வாகு குலமும் தாழ
பிள்ளைதாழ் மலடி போலப் பெரும்பாவம் செய்து விட்டாள்
தள்ளாத வயதில் தாயும் தவகனி தன்னை விட்ட
உள்ளமும் கலங்கா வண்ணம் ஊழியனாய் நிற்பாய் தம்பி. (499)

பரதன் கைகேசிக்குச் சொல்வது.

ஆசையாம் பேய்பி டித்து அலைபோல வொழியா நின்று
மோசத்தால் பொருளைக் கொண்டு மோகத்தா லழிவ தாக்கி
தேசத்தை ஆள வந்த தெவிட்டாசி னிக்கற் கண்டை
தூசியில் புரளச் செய்து தோழியோ டரசைக் காப்பாய். (500)

அன்னையர் விடையும் பெற்று அயோத்திமா நகரை நீங்கி
மன்னவன் தசர தன்போல் மாதாவும் பிழையா னென்று
தன்னைத்தான் வெறுத்துக் கொள்ளத் தம்பியும் துதித்துச் சேர
ன்னைய மந்த்ரி யாசான் * நந்தியிற் சேர்ந்தார் மாதோ. (501)

நந்தியில் பரதன் செயல்.

நாளுக்கு நாள்ம னத்தில் நம்பின சேய்நி னைந்து
தேள்கொட்டித் துடிப்ப தேபோல் தேகமோ தளர்ந்து நின்று
நாள்பட வாழ அன்னை நம்பிக்கை யிலாம லந்தோ
வாள்கொண்ட அறுப்பா யுள்ளம் வாடுதே ராமச் சந்த்ரா. (502)

தாயைப்பெற் றவனின் நாட்டில் சற்றேனு முணர்ந்தி ருந்தால்
பேய்போல வலையா திங்கு பெற்றோனைச் சேர்ந்தி ருப்பேன்
ஆயிர மறுப தாண்டாய் அறத்தினால் பெற்ற சேயும்
தாயுமே துடிக்கக் கண்டு தளர்வேனோ ராமச் சந்த்ரா. (503)

வரம்கொண்ட போதே கைகை வாளாலே அரசெ றிந்து
மரவுரி தரிக்கா வண்ணம் மகிழ்அபி ஷேகம் செய்தால்
பரதனும் அழவு மாட்டான் பாலர்கள் வனத்தில் நில்லார்
தருமமும் கெடமாட் டாது தவிக்குதே ராமச் சந்த்ரா. (504)

அண்ணனை அன்னை யைத்தான் அயோத்தியில் பணிந்து நிற்கப்
புண்ணியம் செய்து ளேனோ புரையேதும் நேரா திங்கு
தொண்டது செய்து பின்னால் தோஷத்தைப் போக்கக் கொண்ட
எண்ணமும் வினைகொண் டாச்சோ எதுசெய்வேன் ராமச் சந்த்ரா. ()

அருந்தவஞ் செய்து பெற்ற அரசுக்காய் அழுவே னோநான்
வரமதில் வந்தான் கானம் வாழ்தற்காய் அழுவே னோதான்
பெரியநல் வயதில் நோகும் பெற்றாருக் கழுவே னோவிவ்
வரத்தைப்பெற் றவளுக் காக வாடவோ ராமச் சந்த்ரா (506)

---

* நந்திக்கிராமம் அயோத்திக் கருகிலுள்ளதொரு சிறு கிராமம்.

உடலிங்கே இருந்த போதும் உயிரும்பின் னாக வந்து
அடவியில் தொண்டு செய்யும் அவபழி யொழிய நன்கு
திடமான வுள்ள மாயின் திருவடி நம்ப லாக
இடரேதும் நேரா திங்கு எதிர்கொள்வேன் ராமச் சந்த்ரா. (507)

## பாதுகா பட்டாபிஷேகம்

பர்ணசா லைஅ மைத்துப் பாதுகை மேடை வைத்து
தர்மகா ராமா வென்று சந்தமும் தூபம் செய்து
சர்வம்பா துகையே யென்று சாஷ்டாங்கம் செய்து வாழ
கர்த்தனை யுளம்நி னைந்து முனிமற்றோர் அயோத்தி கண்டார். .()

### பரதன் செயல்.

தந்தையும் தெய்வம் நீரே தாணிவாழ் சுற்றம் நீரே
மந்திரம் மற்றும் நீரே மாதாவும் குருவும் நீரே
சுந்த்ரவாய் கையும் நீரே சோகத்தைத் தீர்த்தல் நீரே
நந்திஆள் வதுவும் நீரே நலஞ்செய்வாய் ராமச் சந்த்ரா. (509)

ஆதியும் அருளும் நீரே அன்பனும் பொருளும் நீரே
வேதமும் வீரம் நீரே விரதமும் தவமும் நீரே
நாதனும் பொருமை நீரே நாரண னும்கண் நீரே
நீதியும் மதியும் நீரே நிலைசெய்வாய் ராமச் சந்த்ரா. (510)

புண்யமா வதுவும் நீரே புகழதும் பெருமை நீரே
எண்ணமும் இன்பம் நீரே எங்குமே நிறைந்தார் நீரே
கண்ணாக நிற்பான் நீரே காத்துரட் சிப்பான் நீரே.
பண்ணின பவமும் நீரே பட்சம்வை ராமச் சந்த்ரா (511)

புண்ணிய பரதன் தானும் பொருந்திய நந்திக் ராமம்
அண்ணனார் தனைநி னைந்து அயோத்திவாழ்க் கைம றந்து
புண்ணாகி யுள்ளம் யாவும் போற்றியே ராம நாமம்
எண்ணாத வெல்லாம் எண்ணி எதிர்பார்த்தி ருந்தான் மாதோ. ()

## சித்திரகூடத்தில் ஸ்ரீராமன் செயல்.

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

என்னுடன் பிறந்த பேர்கள் எனக்குமின் பத்தைத் தந்து
மன்னவன் புகழை யிந்த மண்ணிலே நிலைக்கச் செய்தார்
அன்னைகௌ சல்யா வாடி யழுதேநிற் பாளொன் றங்கு
அன்னமே வருகு நாள்ளம் அறத்தையே செய்து பெற்றாள்.(513)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

இன்னமு மிங்கு தங்க எனக்குமே பிரிய மில்லை
பின்னொன்றொ ருக்கால் நம்தன் பெற்றாரைக் கொண்டு சேர்வான்
இன்னமும் சிலநாள் தங்கி இருடிகள் இடமும் கண்டு
நன்றேதங் குவமென் றிப்போ நாடுதே யெனக்குத் தம்பி. (514)

தவசிகள் ஸ்ரீராமனை வேண்டுவது.

தவசிகள் சுகமே வாழ தண்டக சனத்தா னத்தில்
பவமான தொழிலைச் செய்யும் பாதகன் கரனைக் கொன்றால்
தவஞ்செய்து உம்மைப் பெற்ற தசரதன் புகழே சாரப்
புவனமுள் வரையும் பேரும் புண்ணியா அழிய மாட்டா. (515)

ஸ்ரீராமன் தவசிகளுக்குச் சொல்வது.

தவசிகள் தம்மைக் காக்கத் தசரதர் என்னைப் பெற்றார்
புவனத்தை யாள வேதான் புண்ணிய பரதற் பெற்றான்
குவலயம் வாழும் அந்தக் கொடியோரைக் கொல்லா விட்டால்
தவத்தையே செய்து பெற்ற தந்தையின் புகழும் போமே. (516)

பரதன்ற னக்கி ரங்கி பன்னக சாலை விட்டு
கரத்தில்கோ தண்ட மேந்திக் கவசகுண் டலமு மாட
தரமுறு தம்பி யோடு தவசியைத் தேடிப் போக
வரமுனி அத்தி ரீபால் மகிழொடு தங்கி னானே. (517)

அத்திரிமுனி அனசூயைக்குச் சொல்வது.

எங்குமே நிறைந்தா னான எல்லாம்செய் வல்ல னான
எங்குமில் லாதா னான இரவுநற் பகலு மான
சங்குசக் கரமு மேந்தும் சர்வகா ரணனு மான
புங்கனே வந்தா னிப்போ புண்ணியப் பலனு மென்றே. (518)

அனசூயை ஜானகிக்குச் சொல்வது.

பதியைத்தெய் வமதா யெண்ணிப் பாரினில் நடப்ப தேமேல்
இதைவிட மேலே யிந்த ஈரேழு உலகி லில்லை
அதிசுகத் தோடே யந்த அயோத்திவாழ் வதையும் விட்டு
கதியெனப் பின்வந் தமைநால் கானத்திற் கொடுமை நேரா. (519)

ஜானகி அனசூயைக்குச் சொல்வது.

சனகனின் மகளாய் வந்து சாதுவா லறிந்த மட்டும்
கனமாக வாழ வெண்ணில் கணவரை விட்டு நீங்கார்
எனதொரு மாமி கைகை யால்இடர் நேர்ந்த தாலே
வனம்வாழ நேர்ந்த திப்போ வரமுனி தேவியே நான். (520)

மன்னரோ டயோத்தி சேர மாமிகௌ சல்யா சொன்ன
இன்னமும் மறக்க வில்லை இருடியின் தேவி யாளே
அன்பொடு விடாம லென்னை அங்கவர் காக்க வாழ்ந்தால்
இன்னலே யெனம தித்தே இவரடி நம்பி வந்தேன். (521)

தாடகை யுயிர்நீத் திசன் தனுவினை யொடித்த சேயை
தேடியே மாலை யிட்டால் தீதுதான் சேருமோ சொல்
மூடமாய்ப் பிறந்த பெண்கள் முடிந்தவன் தளர்ந்த காலை
நாடியே தாய்வீ டேகி நல்லுடல் போசிப் பாரே. (522)

அத்திரிமுனிவர் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

வரமுனி வரரைக் கொல்லும் வஞ்சரிங் குய்த லாலே
இரவொடு பகலு மாக இரையேதும் கிட்ட வில்லை
கரத்திற்கோ தண்டம் கொண்டு கானத்தில் வந்த புண்யம்
அரக்கரின் கிளையைக் கொன்றே அல்லலை ஒழிப்பாய் கண்டாய்.

தவசிகள் செயல்.

வரமுனி வரரைக் காக்க வந்தமன் னவனே வாழி
தருமத்தை நிலைக்கச் செய்யும் தாரணி தரனே வாழி
கருணையே யுள்ளம் கொண்ட காயாம்பூ வண்ணா வாழி
புரமெலாம் புகழ்பெற் றோங்கும் புண்ணியா வாழி வாழி. (524)

மலைநிகர் பேயர் தம்மை மாதவர் வெறுக்க வேண்ட
கலைமகள் நாதன் போற்றும் கர்த்தனும் சொல்லைக் கொண்டு
தலைவியும் தம்பி தானும் தவசிபால் விடையும் பெற்று
கொலையற வெண்ணம் கொண்டு கொடியகா னமசென் றாரே.(525)

அயோத்தியா காண்டம் முற்றிற்று.

ஸ்ரீராமஜெயம்.

# ஆரணிய காண்டம்.

---

கானத்தின் காட்சி நோக்கக் கடிரவோர் ரூபம் காணச்
சானகி துயரம் கொள்ளத் தம்பிலக் குமண் திகைக்க
வானமும் இருண்ட தேபோல் வஞ்சக *விராத னங்கு
யானையும் சிம்மகாலி யாளியும் தோள்கொண் டேற்றான். (1)

மலைகளும் கிடுகி டென்ன மரங்களு முறிந்து வீழ
அலைபோலச் சத்தம் சேர அண்டர்கள் நடுங்கி ஓட
புலிதோலின் சட்டை பூட்டிப் பூதம்போல் சூலத் தோடு
சிலைபோல அயர்ந்து நிற்கும் சீதையைத் துடிக்கச் செய்தான். (2)

துறைமுகத் தீபம் போலத் துலங்கியே நிற்கக் கண்கள்
அறுபட்ட மீனைப் போல அன்னையும் துடிதுடிக்க
குறுக்காக ஓடி அந்தக் கொடியவன் தன்னை வைய
வெறியன்போல் வெகுண்டு பாவி வேகமாய்த் திரும்பி னானே. (3)

விராதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மண்ணுளப் பிறந்த மக்கள் மரவுரி தன்னைப் பெற்றுப்
பெண்கொடு சேர்த்த தாலே பெருமையாய் வாழ விட்டேன்
அண்டர்கள் துணைவந் தாலும் அசைக்கவே இயலா தென்னை
கண்முன்நிற் காம லிந்தக் கானத்தில் ஓடிப் போவீர். (4)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

வையகம் விட்ட போதும் மன்னவர் இறந்த காலும்
ஐயகோ எனதுள் ளந்தான் அலையாது நின்ற தல்லோ
தையலை யிவன டுக்கத் தளருதே யுள்ளம் அந்தக்
கையகி வரத்தின் கூற்றைக் கானத்தில் கண்டேன் தம்பி. (5)

*தும்புரு என்கிற கந்தர்வன் குபேரன் சாப மேற்று இராக்கதனாய் பிறந்தவன்.

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தம்பிலக் மண்ணி ருக்கத் தளர்வது மேனோ காணேன்
உம்பரார் துணையா னாலும் ஒருகணை விட்டுக் கொல்வேன்
வம்பனும் வந்தா லென்ன மலைபோல நின்றா லென்ன
சிம்மம்போ லெதிர்த்துக் கொன்று சீதையி னச்சம் தீர்ப்பேன். (6)

கரத்தில்கோ தண்டம் கொண்டு கண்டன்மேல் பாணம் ஏவ
கரிபோல அடர்ந்து கூவிக் கலங்கும்தாய் பக்கம் விட்டு
துரிதமாய் ஓடி வந்து தோளில்மா னவரைக் கொண்டு
கருமேகம் போலே யோடக் கதறியே அனைதொ டர்ந்தாள். (7)

ஜானகி செயல்.

தவத்துதி வீரர் தம்மைத் தரணியில் வாழ விட்டு
பவத்தையே செய்தாள் என்னைப் பாதகா விழுங்கிப் போவாய்
தவசியா கத்தைக் காக்கத் தாடகைக் கொன்ற வீரம்
குவலயம் ஆளா தான குறையால்விட் டீரோ நாதா. (8)

வாள்கொண்டு தோளை வெட்ட வஞ்சகன் புவியில் வீழ
தோள்கொண்ட வில்ல ரஞ்சாத் துட்டனைக் கொல்ல வங்கே
நாள்கொண்ட சாபம் நீங்கி நாதனைத் துதித்துப் போக
தேள்கொட்டித் தீர்ந்த போலத் தேங்கிய மாதைத் தேற்றி. (9)

மதிமுகம் கொண்ட தாயும் வனத்தில்வா டாது நிற்க
சதுர்முகம் கொண்டா னைப்போல் தம்பிநாற் றிசையும் நோக்கிச்
சதிமுகர் தன்னைக் கண்டால் சல்லடை யாக்க வீரப்
பதிமுகம் நோகா வண்ணம் பலமாகக் காத்துச் சென்றான். (10)

வழியினில் சரபங் கன்றன் மகிமைகண் டங்கே தங்க
வழிபடும் தெய்வ மிங்கு வந்ததாய் மனம கிழ்ந்து
விழியதா பிரமும் கொண்ட விண்ணவன் வரவைக் கூறி
பழமும்காய் தந்து போற்றிப் பாங்காகக் காத்து வந்தான். (11)

அகமகிழ்ந் தவனைப் போற்றி யன்புடன் விடையும் பெற்று
அகத்திய முனியைக் கண்டு அங்கனம் தங்க ராமன்
பகலிர வாக ஓதிப் பாரினில் அரக்கர் மாளி
வகையான மந்த்ரம் சேர்ந்த வலியான கணைகள் தந்தான். (12)

முத்திமை யளிக்கும் தேவை முனிவர்கண் டுளங்க ளித்துப்
பத்தியா யுளத்தில் போற்றிப் பலவாறு வாழ்த்தி நின்று
நித்தியம் அரக்கர் தம்மால் நெடுநாளும் படுந்துன் பத்தை
மெத்தநாள் தவத்தில் வந்த வேந்தனே யொழிப்பாய் என்றார். (13)

வரமுனி வரர்சொல் கேட்டு மன்னவ னவரைப் போற்றி
அரக்கரின் பூண்டைப் பூவில் அழிக்கவே எண்ணம் கொண்டு
இருடிபால் விடையும் பெற்று இளையோனும் சீதை தானும்
புரமெலாம் புகழும் சேரப் புறப்பட்டார் கானம் தானே. (14)

போது.

ஐயன்மா நகர்வி டுத்த ஆண்டுகள் பத்தும் நீப
மெய்யனும் மனம கிழ்ந்து மேலாக நடந்து போக
வையத்தில் புகழ்மேல் பெற்ற வரமுனி சுதிச்ச ணவின்
கையறி வனத்திற் றங்கிக் கழித்தன ரிரண்டாண் டம்மா. (15)

தண்டக வனமே வாழும் தவசிக ளொன்று கூடி
கண்டகர் தமைவெ றுக்கக் காகுத்தன் தன்னை வேண்ட
மண்ணில்வாழ் அரக்கர் தம்மை மனம்போல வொழிப்பே னென்று
புண்யனும் நடந்து போகப் புகழ்கோதா வரிகண் டாரே. (16)

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

சனகனின் தவக்கு மாரீ தண்கோதா வரியைப் பாரு
கனமாய்க்கண் டகரும் வாழும் கானக மிதுமே கண்டாய்
மனம்போல வாழ விங்கு மானவன் துணையாய் நின்றால்
வனம்வாழு மரக்கர் தம்மை வையத்தை விட்டொ ழிப்பேன். (17)

ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தருமமே வுருவாய் வந்த தசரதர் சேயாய்த் தோன்றி
கருணையில் லாமல் சற்றும் கண்டரைக் கொல்வ தேனோ
தருமமும் நிலைவி டாது தந்தைபின் வழியில் நின்று
புரமெல்லாம் புகழப் பெற்றுப் பொருந்தியே வாழ்வீர் நாதா. (18)

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

தருமத்தில் நோக்க முள்ள தவசிகள் தம்மைத் தட்டும்
அரக்கரைக் கொல்வ தாலே அன்னமே பழுது நேரா
கரத்திலே கோ தண்ட மேந்திக் கானத்தில் வந்த தாலே
வரமுனி சொல்லைக் கேட்டும் வஞ்சரை விடுவ தாமோ. (19)

ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அரசர்வில் லைப்பி டித்தால் அருமையே கொல்லா நிற்றல்
வரமுனி புற்பி டித்தால் வாயது வெறுமை நில்லா
அரசர்சொல் லைவி டாமல் அயோத்திமா நகரை விட்டு
மரவுரி கொண்டு வந்த மன்னவர்க் கழகோ சொல்லும். (20)

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

பாரினில் படர்ந்த புல்லாம் பாவிகள் பிறப்ப தெல்லாம்
கோரமாய் வாழ்பே யோரைக் கொல்வதில் பழுது நேரா
வாரத்தின் பயிரைக் காக்க வந்தநல் அரச ராலுல்
வாரிப்புற் களையெ றிந்து வளமைகாப் பாமே மாதே. (21)

*சடாயுவைக் காண்பது.

கருமலை போலே யங்கு கழுகர சன்ச டாயு
மரமதில் நிற்ப தைத்தான் மானவர் திகைத்துக் கண்டு
அருகாக மெல்லச் சென்று அன்புடன் யார்நீ யென்னக்
கருணையா முள்ளம் கொண்டு காகுத்தன் றன்னை நோக்கி. (22)

சடாயு ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அரசனின மக்காள் கேளும் அரசனான் கழுகுக் கெல்லாம்
தரணியிற் புகழே பெற்ற தசரத நேசன் கண்மர்
மரவுரி கொண்ட தேது மண்ணுளப் பிறந்த மக்கள்
வரமதில் பெற்றார் யாவர் வனத்தில்வந் தனதச்சொல் வீரே. (23)

கழுகர சன்சொற் கேட்டுக் காகுத்தன் மனம கிழ்ந்து
பழுதுநேர்ந் தவைஎல் லாமே பணிவாக எடுத்துக் கூற
முழுமதி கொண்ட மன்னன் முடிவைக்கேட் டுடனே துள்ளி
புழுவாகத் துடி-து டித்துப் புரண்டுமே மண்ணில் வீழ்ந்து. (24)

சடாயு செயல்.

அன்பான தம்பி நீத்து அழகோநீர் போவ தண்ணு
இன்னமும் உயிர்நீங் காம லிருப்பது மேனோ நானும்
குன்றுவாழ் பட்சி யான கொடுமையால் கேட்டு மந்தோ
பின்னாக வராமல் வீணே பெரும்பாவி வாழ லானேன். (25)

---

*அவதுரான் இரண்டாவது புத்திரன், தாய் சியேனி, தமையன் சம்பாதி.

ஸ்ரீராமன் சடாயுக்குச் சொல்வது.

அண்ணலே தசர தன்மாய் அல்லலை யொழித்தேன் நின்றால்
புண்யாவுன் உயிரும் விட்டாற் புவியினில் பெருமை போகும்
தண்டமீர் காப்பீ ரென்று தந்தையும் நினைத்தி ருப்பார்
எண்ணம்போல் துணையாய் நின்றால் யாங்களும் மகிழ்வாய் வாழ்வோம்.

சடாயு ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தருமத்தில் கட்டுப் பட்டுத் தந்தைசொற் சிரமேற் கொண்டு
மரவுரி கொண்டு நின்று மண்ணினில் புகழைத் தந்து
அரக்கருக் கஞ்சும் சேனை யடவியிற் காக்க விட்டுப்
பிரிந்துபோ னுடலு லாவல் பெரும்பாவம் வாய்க்கு மன்றே. (27)

காயாம்பூ மேனி எல்லாம் கறுத்துமே நிறப மைத்தான்
தாயார்கௌ சலையும் கண்டால் தரணியில் வாழ்வா ளோதான்
தீயால்தீ மலரே போலே சீதையும் தம்பி வாட
ஓயாத கவலை வாய்த்த தோமத்தைச் செய்து பெற்றும். (28)

பஞ்சக வடியி லேகிப் பன்னக சாலை கட்டி
அஞ்சாமல் வாழ நிற்பீர் அடவிநான் இருப்ப தாலே
வஞ்சகர் எவரே யேனும் வழியாக வரக்கண் டாலும்
பஞ்சாகப் பறக்கத் தேகம் பார்மீது கொத்தி மாய்ப்பேன். (29)

முந்தின தவத்தின் மேன்மை முகம்காண நின்ற தாலே
தந்தையின் சொலைத்தட் டாது தண்டகம் வந்தா யென்று
சுந்தரர்த் தழுவிப் பின்னே சோகத்தை எல்லாம் நீக்க
வந்தனம் செய்து நீங்கி வனத்தினில் நடந்தா ரம்மா. (30)

*பஞ்சக வடியில் தங்கப்† பன்னக சாலை செய்ய
குஞ்சரம் காத்தா னங்கு குணவாளன் றனக்குச் சொல்ல
பஞ்சுக மாய்அ மைக்கப் பார்த்துமே வெகுபு கழ்ந்து
வஞ்சரை யெல்லாம் கொன்று வானோரைக் காக்க நின்றான். (31)

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

ரதிபதி போல ரூப நறுமலர் சூழ வோடும்
நதியின்றன் அழகைக் காண நகர்பாயும் கங்கை போல
கதிரவன் வெப்ப மிந்தக் கானத்தில் இலாது காக்கும்
அதிதவர் பொங்கி யார்ந்த வழகையும் காண்பாய் மாதே. (32)

---

*கோதாவரி அருகே ஜனஸ்தானத்தில். †ஐந்து ஆலமரங்கள் கூடி நிற்குமிடத்தில்.

உகமயி லாடுவா போல் உனதுதே சத்தி யுண்டோ
பிகமுறை தொனியைப் போலப் பிறந்துநீ கேட்ட துண்டோ
ககவகை யழகு போலக் கடிநகர் பார்த்த துண்டோ
அகம்போல வாழ நிற்பாய் அடவியிற் செல்வப் பெண்ணே. (33)

இரவுடன் பகலும் கூடி இளையவன் கட்டிக் காக்க
கருவறப் பேயர் தம்மைக் கண்ணிமை தட்டா தங்கு
கரமதில் தனுவை யேந்திக் கானத்தின் அழகை யெல்லாம்
வரதன்அன் னைக்குக் காட்டி வறுமையைத் தீர்த்து நின்றான்.(34)

*சூர்ப்பநகை செயல்.

அடிக்கடி கண்க ளித்து அயோத்திநற் செல்வன் றன்னை
கொடிக்கொடி மலரைக் கொண்டு கூந்தலில் அழகாய்ச் சூடி
உடுக்கிடை துவள வெள்ளி ஊசல்போ லசையத் தேகம்
ஒடிப்பொடிந் துடன டந்து உத்தமன் முன்னால் நின்றாள். (35)

ஸ்ரீராமர் சூர்ப்பநகைக்குச் சொல்வது.

நடையுறு நொடியி னாளே நறுமலர்க் கூந்த லாளே
படியிணை பற்க ளாளே பார்வைமான் விழியி னாளே
இடையினி பிடியாளேநீ இருளொளி மனமா வாளே
வடிவினி தொளியி னாளே வந்ததைக் கூறு வாயே. (36)

சூர்ப்பநகை ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

புகழ்பெறு மிலங்கை யாளும் புண்ணியன் ராவ ணன்பின்
சொகுசுடன் பிறந்த என்னை சூர்ப்பந கையென் பார்பேர்
வகையான மன்னர் வாய்த்தால் வனத்தினில் மாலை நாட்ட
வெகுநாளாய்ப் பார்த்து நின்றேன் வேந்தனே முடிப்பாய் எண்ணம்.

ஸ்ரீராமன் சூர்ப்பநகைக்குச் சொல்வது.

ராவணன் தங்கை யென்றால் ராச்சசி யாக வேண்டும்
தேவதா மீன்போல் வந்தாய் தீதேதோ தெரிய வில்லை
பாவத்தைச் செய்ய மாட்டேன் பாரியென் அருகி ருக்கத்
தேவர்தம் பகையுன் னண்ணன் தெரிந்திடி லொப்ப மாட்டான். (38)

---

*இராவணன் தங்கை கணவன் வித்யுத் சிருவன் இவனை இராவணன் காலகேயர் யுத்தத்தில் தெரியாமற் கொன்றதால் இரக்கங் கொண்டு சூர்ப்ப நகையை ஜனஸ்தானத்திற் காசியாக்கினன்.

சூர்ப்பநகை ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கண்ணிறை புருஷன் தன்னைக் கண்டால்நா யகனாய்க் கொள்ள
அண்ணன்ரா வணனெ னக்கு அன்போடு விடைகொ டுத்தான்
மண்டலம் போற்றும் ரூபா மன்னற்கா யஞ்ச வேண்டாம்
மண்ணினில் புகழைச் சேர்வாய் மனைவியாய்க் கொண்டா லென்னை. ()

ஸ்ரீராமன் சூர்ப்பநகைக்குச் சொல்வது.

முன்னமே தெரிந்தி ருந்தால் முதல்வியை விட்டி ருப்பேன்
பின்னாக வந்த தாலே பிரியமு மில்லைக் கண்டாய்
இன்னலே உனக்குச் சாரும் என்னுடன் கூடி வாழ்ந்தால்
மன்னவர் அழகைக் கண்டால் மலர்போல்சே ராமற் றள்ளார் .(40)

சூர்ப்பநகை ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பவளம்போல் உதடும் நல்ல படிகம்பல் வரிசை யாக
சிவந்திடு மலர்ப்பா தங்கள் சிறந்தநல் லிடையும் ரூபம்
தவத்தினா லுன்னைப் பெற்றுத் தாங்கியே வளர்த்தாள் கண்டால்
கவசகுண் டலனுக் கேற்ற கன்னியாய் மதிப்பாள் நாதா. (41)

மலையடி கிடந்த வன்றான் மண்டையோ டேந்தி னானும்
குலையினில் முளைத்த வன்பெண் கூறெனக் கீடோ மன்னா
தலைமகள் தன்னை யிப்போ தாய்வீடு துரத்தி விட்டு
மலைமல்லி மலர்சீர் கொண்டு மன்னவா வாழ நிற்பாய் (42)

மண்ணாளும் வேந்தர் பல்பேர் மணஞ்செய்து கொள்ள வென்னை
கண்யமாய் தினமே யிந்தக் கான்வந்து வேண்டி னார்கள்
விண்ணவர் வந்த போதும் வேட்கைக்குத் துணையா வேனோ
கண்ணுக்கு நிறைந்த மன்னைக் கணவனாய்க் கொள்வே னென்றேன்.

ஸ்ரீராமன் சூர்ப்பநகைக்குச் சொல்வது

உன்னைப்போல் பெண்ணி ருப்ப தொடிவில்முன் னாகக் கேட்டால்
மன்னவன் ஜனகன் பெண்ணை மனைவியாய்க் கொள்ள மாட்டேன்
என்னுடை வினையி னேதோ இப்படிச் செய்த லாச்சு
பின்னாக வந்தான் பார்த்தால் பிழைவரும் பெண்ணே போவாய். ()

சூர்ப்பநகை ஸ்ரீராமனுக்குச் சொல்வது

பற்களி னழகுக் கேநேர் பாரினி லெவளுக் குண்டு
சற்றேனு மிணையா வாளோ தலைவியு மெனக்குச் சொல்லும்
பொற்கொடி போல வந்தேன் புகழொடு வாழ்வா யிங்கு
அற்பமா மிவள்தா னென்றன் அனநடைக் கீடோ மன்னா (45)

### ஸ்ரீராமன் சூர்ப்பநகைக்குச் சொல்வது

காரமு கும்கண் காந்திக் காளவாய்க் குரலோ சைநேர்
கூர்நீண்ட பற்சி றந்த குருளையி னுதடின் சீரும்
பார்நோக்கும் சாது வோரைப் பாரினில் கூடி வாழ்வாய்
கார்முகி லொடித்துக் கொண்ட கன்னியே யெனக்குப் போதும்.

### சூர்ப்பநகை ஸ்ரீராமனுக்குச் சொல்வது

அழகுள்ள பெண்ணை யல்லோ ஆண்மகர் தேடும் மண்ணில்
விழிகள்சீர் எனக்குற் றாற்போல் வேந்தனே யிவளுக் குண்டோ
பழியாரோ மாதைக் கண்டால் பாராளும் மன்ன ருன்னை
ஒழித்துநீ விடுவாய் முன்னே உனக்கேற்ற தேவி நானே (47)

### ஸ்ரீராமன் சூர்ப்பநகைக்குச் சொல்வது

பத்தினி தன்னை விட்டுப் பரமாதர் முகத்தைப் பார்த்தால்
எத்திக்கும் நாகைக்கு மன்றோ என்னிடம் நிற்க வேண்டாம்
பத்தினி யின்றிப் பின்னே பட்சமாய்த் தம்பி வந்தான்
புத்தியில் சிரேட்ட னன்னான் போவாய்நீ பிரியம் கொண்டால். ()

### சூர்ப்பநகை ஸ்ரீராமனுக்குச் சொல்வது

உனதுநா டும்நற் பேரும் உத்தமா தெளிவாய்ச் சொன்னால்
மனதிடம் கொளுமெ னக்கு மன்னன்ரா வணன்ம திப்பான்
வனத்தில்நீ வந்த தேது வாழாது நகரில் மேலாய்
கனத்தையே பெறவா யென்னால் கைசோர விடவே மாட்டேன்.

அரக்கியின் சொல்லைக் கேட்டு அயோத்திநா யகன்ந கைத்து
அரசொடு குலமும் பேரும் அவட்கொளி யாமற் கூறி
விரதத்தால் வனத்தில் வந்த விவரத்தை யெடுத்துச் சொல்ல
அரம்பைபோ லிளையோன் பக்கம் அன்னம்போல் நடந்து சென்றாள் (50)

### சூர்ப்பநகை லக்ஷ்மணனுக்குச் சொல்வது

மதிமுகம் கொண்ட மன்னா மனைவியா யென்னை யிப்போ
விதிப்படி யிங்கு தானே விவாகமும் முடித்துக் கொள்ள
அதிபதி சொல்லச் சொன்னார் அழகாம்பெண் ணான தாலே
விதிப்படி நின்று உம்மை விடாமலே வருவேன் காத்து (51)

### லக்ஷ்மணன் சூர்ப்பநகைக்குச் சொல்வது

தாலிகட் டவேயிப் போடி தடையில்லைக் கேள்நீ நானும்
கூலிய னாக வந்தேன் குறையுனக் காகும் போடி
மாலையிட் டாலுன் அண்ணன் மதிக்கமாட் டான்பின் னோடி
சேலையை யெங்கு காண்பேன் சேர்ந்திட அழகென் செய்வேன். ()

### சூர்ப்பநகை லக்ஷ்மணனுக்குச் சொல்வது

அண்ணன்போ லென்னைக் கூடி அழகாக வாழ்வா யென்றா
எண்ணிநான் வலிய வந்தால் இப்படிச் சொல்லல் நன்றோ
மண்ணொடு விண்ணும் தேடின் மன்னவா யெனக்கு நேராப்
பெண்தானும் கிடைக்கு மோசொல் பெருமையாய் வாழ நிற்பாய் (53)

### லக்ஷ்மணன் சூர்ப்பநகைக்குச் சொல்வது

காட்டுக்குள் சற்று வாநீ கலந்துமே பேசி யங்கே
பாட்டையும் கேட்டுச் சேர்வேன் பட்சத்தைக் கொண்டேன் நம்பு
நாட்டுக்குள் சீராய்க் கேளு நானேயே கொண்டு சேர்த்து
மாட்டியே முத்து மாலை மனம்போல வாழ வைப்பேன் (54)

கானத்தி னுள்நுழைந்து கண்டகி தனைப்பி டித்து
மானவன் காதும் மூக்கும் மண்மீதி லறுத்தெ றிந்தான்
யானைபோல் கதறி யங்கு அறுபட்ட தைக்கை கொண்டு
வானவர் தினமே யேற்றும் வரதன்பா லோடி வந்தாள் (55)

### சூர்ப்பநகை செயல்

மூக்கொடு காது போயின் முகத்தின்றன் அழகு போகா
நீக்காது வாழச் செய்தால் நீதியாய் நடப்பே னென்ன
நாக்கையு மறுத்தெ றிந்து நமனுலை சேர்ப்பான் நின்றால்
வாக்குவி யொத்த பாவாய் வனத்தினில் ஓடு வாயே (56)

### ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது

தாடகை தன்னைக் கொல்லத் தருமத்தை யெண்ணி னோர்நீர்
தேடிவந் தவள்த னக்குத் தீதுசெய் வதழ காமோ
ஓடினாள் அங்கு சொல்ல உம்மையும் கெடுக்க வெண்ணி
நாடினால் அரக்க ரிங்கு நமக்குறு துணையு முண்டோ (57)

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது

பிணத்தைக்காக் கைம திக்கும் பேதைவே சியைம திப்பான்
பணத்தைப்பொய் யர்ம திப்பார் பரத்தைச்சான் றோர்ம திப்பார்
குணத்தைமே லோர்ம திப்பார் கோபம்மூர்க் கர்ம திப்பார்
மணத்தைமன் னர்ம திப்பார் வஞ்சர்கேட் டைம திப்பார் (58)

பாதகத் தொழிலைச் செய்யும் பாவியை யறுத்த தாலே
நீதியும் கெடவே மாட்டா நெஞ்சத்தில் கவலை வேண்டாம்
கோதண்டம் பிடித்த வன்முன் கோரமா யெதிர்நின் றாலும்
வேதனை யேதும் நேரா விண்ணிலே சேர்ப்பேன் கண்டாய் (59)

முழுமதி கொண்ட தந்தை மூன்றுநல் மனைவி கொண்டு
பழுதுநேர்ந் ததையெண் ணுமற் பயனற்ற வார்த்தை சொன்னுய்
புழுகுபோல் தாய்து டித்தும் பொருந்திக்காக் காம லங்கு
பழுதுகா யைப்பு சித்துப் பறைவைபோல் நிற்ப தேனே (60)

சூர்ப்பநகை செயல்

கரத்தையும் சிரமேல் கொண்டு கழுதைபோ லழுது மோடி
* கரன்பாதத் தினிலே தன்றன் காதோடு மூக்கை வைத்து
மரவுரி கொண்டு வந்த மானவர் வனத்தி லென்னை
அரக்கனின் றங்கை யாயும் அநியாயம் செய்தா ரென்றாள். (61)

கரன் செயல்

கனத்திடு சேனை கொண்டு கரன்ராம னையெ திர்க்க
தினகர ராமன் நின்று தென்திசை சேர்த்து விட்டான்
அனலிட்ட மெழுகு போல அச்சமே யுளத்தில் கொண்டு
வனத்தில்தான் பட்ட தெல்லாம் மன்னனுக் காறப் போனாள். ()

†அகம்பன் செயல்.

அரக்கர்கள் மாண்ட தெல்லாம் அகம்பனும் வியந்து கண்டு
மரிவுரி கொண்டு வந்த மன்னவன் தேவ னென்று
துரிதமாய் லங்கை சேர்ந்து தொழுதடி பயமும் கொண்டு
கரமதைச் சிறமே றங்கிக் கண்டகன் றன்னை நோக்கி (63)

*விச்சிரவாவு புத்திரன் தூஷணன், திரிசிரன் தம்பிமார்கள், தாய் கும்பிநசை சுமாலி மகள். ஜனஸ்தானத்தில் இராவணனுடைய சேனைத்தலைவன்.

†கரனுக்கு மந்திரி, சுமாலிமகன். பிறகு இவன் ஸ்ரீராமன் இலங்கையை முற்றுகை செய்த காலத்தில் மேலைக் கோட்டைவாயிலை காத்திருந்து அனுமானால் கொல்லப்படுகிறான்.

அகம்பன் இராவணனுக்குச் சொல்வது.

கானத்தில் ராமன் கையால் கரதூச திரிசி ரன்றான்
சேனையோ டெதிர்த்து நின்று தென்திசை சேர்ந்தார் மன்னு
வானவர் பயந்த தும்போய் வையக மன்ன னுக்குப்
பூனைபோ லொடுங்க லாச்சு பொருந்தில மனமும் தானே. (64)

இராவணன் செயல்.

அண்டமும் வெடித்த தேபோல் அங்ஙனம் துள்ளி நிற்க
மண்டப முள்ள கற்கள் மலர்போல எங்கும் சிந்த
தண்டகம் பகைமை நேர்ந்த சங்கதி சொல்வா யாகில்
அண்டம்போய் ஒளிந்த போதும் அடடாகொல் வேனென் றானே.

தங்கைபின் மூக்கும் காதும் தண்டக மறுத்தா ரென்னச்
சிங்கம்போல் கர்ச்சனை செய்யச் செவிகளில் புகைவ ரத்தான்
சங்கையே யுளத்தில் கொண்டு சபையாரை யுற்று நோக்கி
புங்கனை யெதிர்த்து நிற்கப் புறப்பட்டான் லங்கை வேந்தன். (66)

இராவணன் செயல்.

கானத்தில் ராமன் தன்னைக் கண்டகன் எதிர்க்க வெண்ணி
சேனையை யெதிர்த்துக் கொன்ற சிறுவரை அடித்தால் நம்மை
வானவர் நகைப்பா ரென்று வஞ்சனைச் செயலா லந்த
மானவன் தனைக்கெ டுக்க *மாரீசன் முன்னால் நின்றான். (67)

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது

ராமனின் கணைக்கு நாளும் ராவணா அஞ்சி நிற்க
சேமத்தைக் கேட்க வந்தாய் செய்ததோர் தவத்தி னாலே
நேமத்தில் வாழா தங்கு நிகரற்ற செல்வம் வாய்த்தும்
சாமவே தனையோ டிங்கு சங்கையாய் வந்த தேதோ. (68)

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

ராவணன் தங்கை யெண்ணு ராமனும் தீது செய்தான்
தேவர்கள் நகைப்பா ரென்று தேடியே எதிர்க்க வந்து
பாவமாய் முடியு மென்ற பட்சத்தால் உனைய டைந்தேன்
காவல னேநீ நீக்கில் கன்னியை யெடுத்துப் போவேன். (69)

*சுந்தன் மகன், தாய் தாடகை கௌசிகன் யாகத்தில் ஓடினவன்.

### மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

அரக்கருக் கரசு மாகி அலைகடல் லங்கை நின்று
அரனுரின் கிரியெ டுத்து அண்டரால் புகழப் பெற்றும்
மரவுரி கொண்டு வந்த மன்னன்தே வியையும் தீண்ட
புரமெலாம் நகைக்க வேநீ பொருந்தியே வாழ்ந்து மென்ன. (70)

ராசதர் பெருமை யெல்லாம் ராவணன் தன்னால் நிற்ப
நாசத்தைத் தேட விப்போ நலமோதான் உமக்குச் சொல்லும்
வேசமே தோகொண் டுற்றான் விண்ணவ ரேற்றும் ஈசன்
தேசத்தை ஆள நிற்பாய் தேவர்கள் நகைக்கு முன்னே. (71)

நிலையாக வாழா தங்கு நீதியை விடுத்தே யிங்கு
மலையையே தலையில் தூக்கி மாளவே துணிந்து வந்தாய்
கலைமகள் நாத னேற்றும் கர்த்தனை நினைக்கும் போதே
குலையுமே துடிக்கு தந்தோ கோபத்தால் பயனு முண்டோ. (72)

வேசிசொல் கேட்ப தேபோல் மேலோர்சொல் கேட்க மாட்டார்
வேசத்தை நம்பல் போல மெய்ரூபம் நம்ப மாட்டார்
நாசத்துக் குதவு வாபோல் நன்மைக்கு குதவ மாட்டார்
ஆசைசொல் கேட்டு வீவர் அறிவாம்சொல் கேளார் மன்னா. (73)

### இராவணன் செயல்.

மன்னன்ரா வணனு மங்கு மாரீசன் சொல்லைக் கேட்டு
முன்னாளில் பெற்ற கீர்த்தி முற்றுமே ஒழிந்த தென்று
துன்பமே யுளத்தில் கொண்டு துரிதமாய் லங்கை சேர்ந்து
மன்னன்ரா மனையும் வெல்லும் மார்க்கத்தை யோசித் தானே. (74)

### சூர்ப்பநகை இராவணனுக்குச் சொல்வது.

அண்டர்கள் தமக்கஞ் சாது அடவியை ஆண்டு வந்தேன்
கண்டவர் நகைக்க வென்னைக் காகுத்தன் தம்பி செய்தான்
விண்ணவர் பணிய நிற்கும் வீரமு மழிந்த திப்போ
எண்ணம்போல் செய்வா யாகில் எக்காலும் புகழ்கெ டாதே. (75)

### இராவணன் சூர்ப்பநகைக்குச் சொல்வது.

ராவணன் தங்கை நீயென் றிராமனின் தம்பி யெண்ணான்
தேவர்கள் நகைக்க வென்னை தீதுசெய் தானே உன்னை
மூவர்கள் புகழ்ந்த தெல்லாம் முடிவாக வொழிந்த தின்று
ஆவியை யிழப்பா ரிப்போ அநியாயம் செய்த தேது. (76)

### சூர்ப்பநகை இராவணனுக்குச் சொல்வது.

அன்னனோர் நடையி னாளை அழகான முகத்தி னாளை
இன்றுகா னத்தில் கண்டு இலங்கைகொ ண்டுவரச் சென்றேன்
உன்னையும் மதித்தி டாமல் ஊர்நகைத் திடச்செய் தானே
கன்னியும் கிடைப்பா ளாகில் காரிய முடியு மண்ணா. (77)

### இராவணன் செயல்.

காமத்தால் மனம்வெ குண்டு கண்டகன் லங்கை விட்டு
ராமனை வனத்தில் கண்டு ரதத்தோடு மறைந்தே யங்கு
சாமவே தனையே கொண்டு சற்றுமே கலங்கி நின்று
சேமத்தை யடைய வெண்ணிச் சேர்ந்தான்மா ரீசன் சார்பே. (78)

### மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

இன்னமும் லங்கை சேரா திருப்பது மேனோ செய்ய
பின்னுன்லக் மணனும் கண்டால் பெற்றதோர் புகழே சாயும்
மன்னரென் றெண்ண வேண்டாம் மதுசூதன் வானோர் வேண்ட
துன்பத்தை யொழிக்க வெண்ணித் தோன்றினான் ராம னாக. (79)

### இராவணன் மாரீசனுக்குச் சொல்வது

வண்டுரை வரிப்பு லியாம் வனத்தினில் ஒளிந்து கொண்டு
தண்டொடு வாழு பென்னைத் தாரணி பழிக்கச் சொன்னாய்
பெண்ணொடு வாழ்வோன் வீரம் பிரியனே பின்னர் காண்பாய்
மண்ணொடு விண்ணு மில்லா மானுருக் கொள்வாய் கண்டாய் ()

### மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

வரிப்புலி யாய்ம திக்க வந்தனம் செய்தேன் மன்னா
பெரும்புலி நேரில் சென்றால் பிழைத்துமே திரும்ப மாட்டேன்
கரிகள்ஆ யிரநேர் கொண்டு கானம்வாழ் தாட கையை
ஒருகணை விட்டுக் கொன்றான் ஒப்பில்லா வீரன் றானே. (81)

சூன்யம்விட் டேவல் போலச் சுந்தரன் முன்னே தோன்றில்
தேன்கூடு அழிவு தேபோல் தேசத்தோ டழிவாய் பின்னால்
மானுருக் கொண்டு சென்று மன்னனைப் பிரிய விட்டால்
நான்முக னேற்றும் தாயோ நாயெனச் சபிப்பாள் உன்னை, (82)

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

தம்பிசு பாகு மாளாத் தரணியில் வாழ்வா னுல்
கம்பீரச் சொல்லாக் கொண்டு கருதிய வாறே செய்வான்
நம்பியே வந்தே னுக்கு நலமேசெய் யாவிட் டாலும்
உம்பரார் நகைக்கச் சொன்னுய் உனக்கேதோ கேடு காணேன். (83)

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

சிம்மம்போல் லங்கை நின்று சிறப்பாக வாழும் வேந்தே
தம்பியைச் சேர்ந்து வாழத் தருணமும் வாய்த்த திங்கு
உம்பரார் புகழ வங்கு உனக்குத்தொண் டவனுய் நின்று
சம்மதம் போலக் காத்துச் சஞ்சல மொழிப்பான் கண்டாய். (84)

ராமனின் பாணம் மன்னு ராச்சதர் பூண்ட றுக்க
நாமமாய் வந்த தோராய் நவநிக்கோ டினும்வி டாது
ஓமத்தில் பட்ட தோரில் உமக்கேதான் தெரிய லாகும்
தாமதம் செயாம லிப்போ சடக்கென லங்கை போவாய் (85)

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

சுழலும்பா ணத்தை விட்டுச் சுந்தரன் தன்னைக் கட்டி
பழிக்குநேர் பழியுந்தீரப் பார்புகழ் கொண்டு செல்வேன்
விழியால்கண் டதுமே என்னை வேங்கையைக் கண்ட மானுய்
அழியாமல் வாழ வெண்ணி அடைந்ததுன் பால்கண் டாயே. ()

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

மன்னன்மேல் பாணம் விட்டால் மலைமேலே பனிபெய் தாற்போல்
துன்பமும் அணுக மாட்டா சுகமாய்நீ வாழ மாட்டாய்
தன்னைத்தான் புகழ்ந்து வீணுய் தலைகீழாய் துள்ளி னுலே
ஒன்றுமே பயனு காது ஒருகண மெதிர்த்துப் பாரே. (87)

கேடுமே வருவ தின்முன் கெடும்மதி யென்ப தேபோல்
ஓடியே வந்தாய் மன்னு உத்தமன் கணையால் மாள
நாடொடு நகரம் விட்டு நாயகி தன்னோ டிந்தக்
காடுவாழ் கார ணம்தான் கண்டகற் கொல்லக் கண்டாய். (88)

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

நரிபிரட் டப்ப யந்து நமனோடொ டியது போல்
அரசனின் மகனுக் கஞ்சி அடவியில் ஒளிந்த தாலே
அரக்கரின் குலத்தைக் கண்டு அண்டர்கள் நகைக்கச் செய்தாய்
புரமெல்லாம் நகைக்க இங்கு புழுகாகத் துடிக்கச் செய்வேன். ()

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

அண்டர்கள் நகைத்த தென்னை அன்றேதான் ஒழிந்து போன
மண்ணுள்ள வரையும் சொல்லி மன்னவா நகைப்ப தோடு
புண்ணியன் தனையெ திர்த்துப் புழுவாகத் துடிக்க நிற்கும்
எண்ணத்தை யறியா தேதோ எனைப்பழிக் கத்து ணிந்தாய். (90)

நடந்தவை யெல்லாம் கேட்டும் நமனுக வந்த தோர்ந்தும்
திடம் கொண்ட தல்லோ சித்தம் தேவியை யெடுத்து உன்றன்
கடல்சூழ்ந்த லங்கை யேகக் கருவத்தால் துணிந்தா யல்லோ
இடம்தெரி யாது செய்வான் இங்கன மிருந்த வீரன். (91)

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

தசரதன் சேயை யிந்தத் தருணமும் பிரியச் செய்தால்
வசமான வார்த்தை யாலே வனிதையைக் கொண்டு செல்வேன்
நிசமாக லங்கை சேர்ந்து நேரிலே யெதிர்ப்பா னாகில்
அசையாமல் வாரி யங்கு அலைகடல் சேர்ப்பேன் கண்டாய். (92)

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

நாளை நீ நடப்ப வெல்லாம் நாசத்தா லறிய மாட்டாய்
வேளையுன் நகர்சே ராமல் மெல்லியை எடுக்க மேவில்
காளையா மொருவன் அங்கு காவலி லிருத்தல் காண்பாய்
மூளையும் சிதற டித்து முடிவுறச் செய்வான் கண்டாய் (93)

எத்திசை புகழி னேடு மிலங்கையை யாள நிற்கப்
பித்தம்கொண் டலைவ தாலே பெரும்கேடு வாய்க்கும் பின்னர்
பத்துசேர் தலைகள் கண்டால் பலவான்லக் மணனும் சீறி
புத்துறு மரமே போலப் பூசிப்பான் பாணத் தாலே. (94)

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

கனமதே சாரா தென்றாய் காகுத்தன் றனையெ திர்த்தால்
மனம்போல்செய் யாம லேதோ வருகதை சொலத்து ணிந்தாய்
வனத்தையெல் லாம ழித்து வந்தோனை யெதிர்த்து நின்று
சனகனின் பெண்ணுங் கொண்டிச் சமையமே லங்கை போவேன்,

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

காமத்தின் கொடூரத் தாலே கண்கள்நீ இருண்ட தாலே
சேமத்தை யடைய மாட்டாய் செல்வனை யெதிர்த்து நின்றால்
ராமனை நினைக்கும் போதே ராவணா யெனது வுள்ளம்
தாமரை போல்து டித்தேன் தருணமே யோடிப் போவாய். (96)

பிரியக்கா லமுமே நேரப் பிடிவாத மாக நின்று
எரியுமிழ் கனலில் வீழ இங்ஙனம் துணிந்து விட்டாய்
நரிபோல்நீ ஞாக யென்னை நமனிடம் சேர்க்க நின்று
துரிதம்நீ செய்வ தாலே துடிக்குதே யுள்ள மையோ. (97)

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

மின்மினிப் பூச்சி காட்டி மெத்தனுள் பெற்ற வீரம்
இன்னேநீ ஒழிய எண்ணி என்னையா மயக்க வந்தாய்
உன்னைப்போல் பேதைக் கோதில் உண்மையாய் நம்பு வாரோ
கொன்னமன் வந்த போதும் கொசுவென மதிப்பேன் கண்டாய். ()

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

என்னைப்போல் பேதை வந்து இராமன்முன் நிற்க மாட்டான்
உன்னைப்போல் வலரெ திர்த்து ஒழிந்ததை மறந்தா யோநீ
கொன்னமன் எதிர்ந்தபோதும் கொசுகாக மதிக்கும் தீரன்
மன்னவன் முன்னால் சென்று மாளாது வந்தால் போதும். (99)

தாடகை தனைவெ றுத்துத் தவசியின் யாகம் காக்க
தேடியே அழிக்கப் போகத் தேவனும் பாணம் சேர்க்க
ஓடியே வந்தில் லுற்று ஒளிந்திருப் பவனி னோடு
பாடைமே லேற நிற்பாய் பந்தையம் காட்டா நின்றாய். (100)

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

எள்ளள விரங்கி லாம லென்னையே பழித்த தாலே
உள்ளந்தான் துடிக்கு திப்போ ஓ! ஓ ஓ மீஞ்சி விட்டாய்
சுள்ளியை முறிப்ப தேபோல் சூர்ப்பன கயைக்கெ டுத்து
துள்ளியே நிற்பான் றன்னைத் துட்டனே முறிப்பேன் பாரே. ()

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

நற்றவஞ் செய்தா டன்னை நாய்போலத் திருட நிற்ப
சற்றுமே பிடிக்க வில்லைச் சகலமு முணர்ந் திருந்தும்
கற்றதோர் மாயை கொண்டு காகுத்தன் மாதைத் தொட்டான்
வெட்டியே தள்ம ரம்போல் வேரோடே யழியு மன்னா. (102)

மூவடி யளந்தோ னென்று முடிவாக வுளத்தில் கொள்ளும்
சேவிப்பேன் உனது பாதம் சீதையை நினைக்க வேண்டாம்
தேவரை வென்ற வீரம் தேசத்தில் பெற்ற கீர்த்தி
பாவத்தா லொழிவ தோடு பாருள்ள வரைந கைப்பார். (103)

புற்றுக்குள் அடைகாத் துற்ற பொல்லாநா கத்தை வெல்ல
சுற்றத்தார் சென்று மாண்டார் சுந்தரா தெரிந்தி ருந்தும்
குற்றங்கள் வினையா மூண்டு கொடுபோகக் காலன் தூண்ட
முற்றுமே துணிந்து விட்டாய் முடிவாக வெண்ணி னேனே. ()

தெரிந்திடச் சொல்லி யும்தான் தெரியாமல் வீணு யிங்கு
மரம்போல வெதிரே நின்றால் மனம்போல முடிய மாட்டா
அரசேநே ராகச் சென்று அடவியில் படுத்து வீழ்ந்த
கரதூட ணரையே எண்ணில் காகுத்தன் வீரம் சொல்வார். (105)

இனவலி தன்னோ டும்பின் இதரநல் வலிகொண் டாலும்
வினைவலி வெல்வ தற்கு வேந்தனே முடிய மாட்டா
மனவலி கொண்டு நின்றால் மாரீசன் சொல்மா றாது
பனிவலி இரவி முன்னர் பாடு போல் படுவீர் தானே. (106)

சாகவே துணிந்த வற்குச் சமுத்திரம் ஓடை தானே
சோகம்நான் கொள்வ தாலே சுகமாக வாழ்வ காணேன்
மேகத்தி லொளிந்த போதும் மீளவோ வழியு மில்லை
வேகமாய் லங்கை சேர்ந்தால் வெகுநாட்கு வாழ்வாய் மன்னா. ()

இராவணன் மாரீசனுக்குச் சொல்வது.

சங்கரன் கிரியைத் தூக்கித் தாங்கின வீர னாகி
எங்குமே புகழு மென்னை இழிவாகக் கூறி விட்டாய்
இங்ஙனே உன்னையும் கொன்று எனதுதங் கையின் மூக்கை
பங்கம்செய் பாவி யின்றன் பன்னியு மெடுத்துச் செல்வேன். ()

மாரீசன் இராவணனுக்குச் சொல்வது.

உனதுகை யால்யான் மாண்டால் உடனேயே நரகம் வாய்க்கும்
வனமதில் ராமன் ஏவில் மாய்ந்திடில் சொர்க்கம் வாய்க்கும்
மனம்போல்மா னாகச் சென்று மன்னன்கை யாலி றந்து
உனக்கிடம் தேடி வைப்பேன் உடனேநீ வந்து சேர்வாய். (109)

மண்ணொடு விண்ணில் இல்லா மானுருக் கொள்மா ரீசன்
கண்டிரா வணன்க ளிக்கக் கானத்தில் வேக மாய்ப்போய்
புண்ணியர் வாழி டத்தில் பொன்மானாய் ஓடி யாட
கண்டுமே சனகன் புத்ரி காகுத்த னருகே சென்று. (110)

ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மானையே பிடித்துத் தந்தால் மனமதின் கிலேசம் விட்டு
கானிலே விளையா டித்தான் காலத்தைக் கழிப்பேன் நாதா
சேனனுள் விருப்ப முண்டு சிறப்பாய்நான் இதைவ ளர்க்க
யானையோ உமக்கு மன்னா அஞ்சுவ தேனோ சொல்லும். (111)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மானென நினைக்க வேண்டாம் மாயமாய்த் தோணு தெற்கு
கானகம் வாழும் நீய கண்டகர் வஞ்ச மாகும்
மேனியின் அழகை யொத்த மேன்மையா மானு முண்டோ
சேனையோ டரக்கர் மாய்வாற் சிறிதும்நம் பிக்கை யில்லை. (112)

ஜானகி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

இப்படி எனது சொல்லை எப்போதும் தடுக்க லுற்றார்
தப்பித மேது செய்தேன் தண்டக வனத்தி லேயோ
ஒப்பாது எனது சிந்தை உடனேதான் பிடிக்கா விட்டால்
தப்பியோ டுவதின் முன்னே தட்டாமல் நடப்பீர் நாதா. (113)

பரமுனி வனங்கள் ராமன் பன்னிரண் டாண்டு நீக்கி
அரக்கர்பூண் டைவெ றுக்க அடவிபஞ் சவடி தன்னில்
வருடமும் மாத மொன்று வாரம்மூன் றும்நான் காம்நாள்
பிரிந்தானே அனையை விட்டுப் பிடிக்கவே மானை யந்தோ. (114)

மானையும் பிடிக்கப் போக மாரீசன் துள்ளித் துள்ளி
கானில்லே கமதாய் ஓடக் காகுத்தன் விடாமல் சென்று
ஈனன்மேல் பாணம் ஏவ இளைஞன்றன் பேர ழைத்து
யானைபோல் மண்மேல் வீழ அன்னைபால் விரைவில் வந்தான். ()

ஜானகி லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

அருமையாய்க் கானிலேதோ அண்ணனு மழைத்தும் போகாய்
தருமமு மாமோ சொல்லும் தம்பியின் கொடுமை யாரும்
வருவினைப் பயன்தன் ஞலே வனத்தினில் வாழ வந்தும்
கருணையில் லாமல் சற்றும் கல்லைப்போல் நிற்ப தாமோ. (116)

லக்ஷ்மணன் ஜானகிக்குச் சொல்வது.

அலைகடல் புரண்டா லும்என் அண்ணனுக் கிடரே யில்லை
அலையாதே வீணுய்த் தாயே அரக்கனின் குரலே யாகும்
மலைபோல்பே யர்வந் தாலும் மன்னன் முன் நிற்க மாட்டார்
நிலையாகச் சற்றே நின்ருல் நேராக வரவே காண்பாய் (117)

ஜானகி லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

துன்பநதா னேதோ நேர்ந்து துரிதமா யங்க ழைத்தார்
இன்னமும வீணு யிங்கு இருப்பது மேனோ காணேன்
இன்பமும வனத்தில் வீய என்னநீ யெண்ணி யோதான்
பின்னுக வந்தா யோநான் பெண்ணுகப் பிறந்தேன் போதும் (118)

லக்ஷ்மணன் ஜானகிக்குச் சொல்வது.

அண்ணனுர் சொல்லை விட்டால் அன்னையே குற்றமென்று
எண்ணத்தால் போகே னினறேன் இதுவேசத் தியமும கண்டாய்
புண்ணியற் கிடர்நே ராது பொருமையாய் நிற்பீ ரம்மா
பண்ணின பாவத் தாலே பழிச்சொல்கேட் டேனே ஐயோ. (119)

ஜானகி லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

யானைகள் கூடி ஞலும் அடவியில் காப்பே னென்று
பூனைபோ லொடுங்கி வந்து புலியாக நின்ருய் நில்லாய்
தேனில்வீழ் ஈயதாகத் தேங்கவும் விடாம லென்னை
மானையே பிடிக்கச் சென்ற மன்னனைக் காணப் போவாய். (120)

லக்ஷ்மணன் ஜானகிக்குச் சொல்வது.

பதிமூன்ருண் டுகளாய் நானும் படிகடந் ததுவு முண்டோ
விதியின்றன் பயனு லிப்போ விளைந்தது தோச மில்லை
எதிர்ந்துநிற் பவர்க ளிந்த ஈரேழு உலகி லில்லை
பதிக்குமே பழுது நேரா பதாரம லிருப்பீ ரம்மா. (121)

ஜானகி லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

கையகி யரசை யங்கு கட்டியே காகுத் தன்றன்
வையம்ஆள் சமையம் சூதாய் வனம்வாழச் செய்த தேபோல்
மெய்யாக வேநீ யென்னை மீளாது கானில் மாண்டால்
செய்யவே மோசம் கொண்டு சிறப்பாக வாழ்ந்தாய் கண்டாய்.(122)

லக்ஷ்மணன் ஜானகிக்குச் சொல்வது.

கண்டக னெவனோ இங்கு கச்சங்கொள் மானா வந்தான்
பண்ணின சூதைக் கொண்டு பாணத்தா லடிக்கப் பேயன்
மண்மீது விழும்போ தென்னை மாதாவே அழைத்தான் ஏதோ
எண்ணிப்பா ராமல் பேதை யெந்தனைப் பழிப்ப தாமோ. (123)

ஜானகி லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

கோதண்டன் தன்னைக் காக்க குணவாபோ காமல் நின்றால்
வேதனை யாற்போம் ஆவி வேறெதும் பயனே யில்லை
பாதகம் செயவே யென்னைப் பரதனும் தூண்டி னானோ
ஏதுக்குப் பிறந்தேன் பெண்ணாய் எனக்கேதும் தோன்ற வில்லை.()

லக்ஷ்மணன் ஜானகிக்குச் சொல்வது.

கரனையே நொடியில் வென்ற காகுத்தற் கெதிரு முண்டோ
பிரியத்தால் தூசித் தாலே பெருமையே பெற்றே னம்மா
வரமுனி சொல்லைக் கொண்டால் வஞ்சனை யேதும் கூறாய்
பரதவிக் காமல் நின்றால் பார்ப்பீர்நா ழிகையில் மன்னை. (125)

ஜானகி லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

கௌதமி தீர்த்தம் தன்னில் கதித்துமே உயிரைத் தீர்ப்பேன்
சதிசெய்கை கையைவு னக்குச் சற்றமே லாய்ம தித்தேன்
கதியென நம்பி வந்த கணவனு மழிந்த பின்னர்
மிதிலையின் பெண்ணாள் நோக வீரமாய் நின்றா னாவாய். (126)

லக்ஷ்மணன் ஜானகிக்குச் சொல்வது.

தெய்வம்போல் பூசிப் போனைத் தேவகீ பழித்த தெல்லாம்
செய்ததோர் வினையே யாகும் சேமமாய் வாழ நிற்பாய்
மெய்நிலை யறிந்தி ருந்தும் மீளாத துயர முற்றாய்
பொய்யல விடுவாய் துன்பம் பூமனும் உடனே சேர்வான். (127)

ஜானகி லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

முடியினைத் தாழ நின்று மோசமாய் மித்ர பேதன்
அடியினைத் தாங்கு மாபோல் அடவிபின் னாக வந்து
முடியனை மாள வைத்து மோசமும் செய்ய எண்ணி
தடியனைப் போல நின்றாய் தம்பியுன் எண்ணம் சாயா (128)

லக்ஷ்மணன் ஜானகிக்குச் சொல்வது.

முடியனை யடிக டாங்க முன்னாக நடந்த துண்மை
கடையனைக் கண்ணால் பார்த்துக் கடாட்சிக்க வேண்டு மம்மா
அடியனைச் சொல்லப் பட்ட தருந்தவப் பயனே யாரும்
கொடியினில் வருவார் அண்ணா நோகாம லிருப்பீர் சற்று. (129)

ஜானகி லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

கள்ளமா மனதோ டேகிக் கர்த்தனைக் கெடுக்க நின்றாய்
எள்ளள வுமது சொல்லை ஏற்றுக்கொள் வதுவு மில்லை
தள்ளினால் எனது சொல்லைத் தடையேயில் லாம லிப்போ
தொள்ளிவாய்ப் போபாய் வந்த கொடியனே மண்ணில் வாழேன்.

லக்ஷ்மணன் செயல்.

அன்னையின் சொல்லைக் கேட்க அருந்தசேயன் மனந்து டித்து
முன்செய்த வினைக ளிப்போ மூண்டது வெனத்து ணிந்து
பன்னக சாலைவிட்டுப் பயமேயுள் ளத்திற் கொண்டு
பின்னாகத் திரும்பிப் பார்த்தும் பித்தனா யலைந்து சென்றான்.(131)

இராவணன் செயல்.

காவியாம் காதில் குண்டலம் கமண்டலம் மான்தோல் கையில்
பாவியாம் ராவ ணன்றான் பார்நீண்ட சடையும் கொண்டு
தீவினை செய்ய வெண்ணித் திடம்கொள்ரா மன்ற னக்குத்
தேவியி னுருவம் கண்டு தேனில்வீழ் ஈயா னானே. (132)

ஜானகி செயல்.

சிலந்திக்கூண் டேபோல் வந்து சீரற்ற நிற்பான் றன்னை
உலகெல்லாம் பெற்ற வன்னை யுண்மையை யறிய வெண்ணி
நலமான வார்த்தை யாலே நாதனும் வருவா ரென்று
கலகமில் லாமல் கையில் கனிகளைக் கொண்டு நின்றாள். (133)

இராவண சன்யாசி ஜானகிக்குச் சொல்வது.

ஓடிமலர் முகமே கொண்ட உடலுண்மை யொழிந்து வாடி
முடியினில் மலரு மற்று முழுவதும் சருகு தாங்கி
உடையினில் தூசி சார்ந்து ஒண்டியா யிருப்ப தேது
உடையவன் யாரோ சொல்லும் உனக்கொரு பழுது நேரா. (134)

ஜானகி சன்யாசிக்குச் சொல்வது.

மன்னன்த சரதன் பெற்ற மகனேதான் எனக்கு நாதன்
அன்னையின் சொல்லைக் காக்க அடவியில் வாழ வந்தார்
முன்னுன்மா னைப்பி டிக்க முனியேகா னகமும் சென்றார்
பின்னுனு மழைக்கப் போனார் பேர்சீதை சனகன் சேயே. (135)

சன்யாசி ஜானகிக்குச் சொல்வது.

கோடியதோர் வனத்தி லிந்தக் குடிசையில் தனியாய் நிற்க
விடுபவ னவனோ வீரன் மெல்லியே யோசிப் பாயே
வடிவின்றன் அழகைக் கண்டு வஞ்சகர் வருவா ராகில்
திடமாக வெதிர்த்து நிற்கத் திறமுண்டோ ராம னுக்கே. (136)

ஜானகி சன்யாசிக்குச் சொல்வது.

கொடிமிசை கொண்ட பேயர் குடியிருப் பதனு லிங்கு
தடமிசை ராமன் றன்னைத் தவசிகள் வேண்ட வந்தார்
திடமிசை கரனும் நேற்றுத் தென்றிசை சேரச் செய்தான்
முடிவிசை கூற வந்த மூவரா லாகா கண்டாய். (137)

சன்யாசி ஜானகிக்குச் சொல்வது.

கரனுக்கு மேலா யிந்தக் கானிலே வாழ்கின் றார்கள்
பரமன்வந் தாலு மஞ்சார் பாலரா லெதிர்க்கப் போமோ
அரசொடு வாழா உன்னை அருந்தவம் செய்து பெற்றும்
அரந்தையால் உடலும் வாடி அடவியில் தங்க லாச்சே. (138)

ஜானகி சன்யாசிக்குச் சொல்வது.

முடியினை நங்கை கொண்ட முக்கணன் கிரியை முற்றும
அடியினைத் தோளால் ஏற்ற அரக்கனே எதிர்த்த போதும்
குடியினைக் காக்கப் பின்னுற் கோலம்கொண் டவனின் சீராம்
அடியினைத் தாழ்ப ராக மசைக்கவு மியலா கண்டாய். (139)

சன்யாசி ஜானகிக்குச் சொல்வது.

இளம்வய தினிலே பெண்ணே இன்பத்தைப் பெறுமல் வீணே
வளமெல்லா மொழிந்த விந்த வனத்தினி லிருப்ப தேனே
களம்படி யன்னத் தைப்போல் நாட்டினி லிடமே கண்டு.
தளமேவா மூரிற் காமல் தனிப்பது மேனோ சொல்லும். (140)

ஜானகி சன்யாசிக்குச் சொல்வது

கானம்வாழ் பொல்வி லங்கு கழுத்தினில் கொண்டாய் ரோமம்
ஈனனே யிந்த வேடம் எதுக்கா யெடுத்தாய் பாவி
வானகம் புகழும் தேவை வஞ்சிக்க வெண்ணம் கொண்டாய்
போனவன் திரும்பும் முன்னே போய்ச்சேரு னிடத்தை நாயே. ()

இராவணன் செயல்

வானம்வாழ் தெய்வ கன்னி வடிவமும் சதைத்தில் கண்டு
கானம்வாழ் மிருக மொன்று கனைநின்று பாய்ந்த தாக
தான்வாரித் தேவி தன்னைத் தசமுகன் மண்ணோ டேந்த
சானகி துடிது டித்து சர்ப்பம்போ லனைச் சீறி. (142)

ஜானகி இராவணனுக்குச் சொல்வது

பேயேசீ உனக்கு இந்தப் பேதைமை வாய்த்த தேனோ
நாயேபோ இளையான் கண்டால் நமனூரைச் சேர்ப்பான் பாவீ
சீயேரா வணவு னக்குத் தீங்குறும் விடுத்துப் போவாய்
காயேபோல் தலைகள் பத்தும் காகுத்தன் அறுப்பான் கண்டாய். ()

ஜானகி செயல்

ஐயகோ லக்ம ணாவோ ஐயையோ தம்பீ லக்மா
செய்தானே யரக்கன் மோசம் சீக்கிரம் வருவாய் காக்க
தெய்வமே வனத்தில் வாழும் தீதுசெய் ததையும் பாரும்
ஐயுறு செல்வற் கண்டு ஆகாய வாணீ சொல்லும். (144)

அரக்கன்தின் னற்கோ வென்னை அன்பான துணையை விட்டேன்
இரவுமே பகலும் காத்தும் என்வினை சுட்ட தேதான்
கரத்தில்கோ தண்ட மேந்தும் காகுத்தா வாரும் ஐயோ
வரமுனி வாழ் இடங்கள் வனத்தில்கா ணேனே மன்னா. (145)

ஓ! லக்ஷ்மணனே கோ ஐயோ வாருமே ஓ! நாதாவோ
ஆலத்தைப் பார்க்கும் போதே சுழலுதே கண்களையோ
அலைவாய்க் கரும்பைப் போல அரக்கன்வா யிரையா னேனே
ஓ! லக்ஷ்மணனை போஓ ஓதம்பி ஓடி வாரும். (146)

வானவர் பணியு மன்னை வஞ்சன்ரா வணனின் கையில்
ஆனிபூர் வப்ர தைமை அகப்பட்டங் கலறிக் கூவி
சானகி யழும்ரீ ரோசை சடாயுகேட் டுத்தி கைத்து
கானில்வே கமதாய் வந்து கண்டகன் முன்னால் நின்று. (147)

சடாயு இராவணனுக்குச் சொல்வது

ராமனின் தேவி தன்னை ராவணா எடுக்கப் போமோ
சேமமாய் வாழ வெண்ணில் சீக்கிரம் விட்டுப் போவாய்
தாமதம் செய்தா லுன்றன் தலைகள்பத் தையும் கொத்தி
காமுகா அலறக் கொண்டு காகுத்தன் இடமே சேர்ப்பேன். (148)

இடைஅழ கிராமன் வந்தால் இரங்கிநீ விட்டுத் தாழ்ந்தால்
முடிஅழ காவுன் னைத்தான் முகமலர் கொண்டு காப்பான்
நடைஅழ கிளையான் உன்னை நாடுவா னானால் முன்னே
சடைஅழ கன்சொன் னாலும் சாய்க்காது விடவே மாட்டான். ()

கடலடி தன்னைப் போலக் கண்டகா வெதிர்த்து நின்று
அடிமுடி வீழக் கண்டு அண்டர்கள் நகைக்கச் செய்வேன்
சடைமுடி யோனின் குன்றைத் தாங்கின வீர மெல்லாம்
பொடிபொடி யாகா வண்ணம் பொருந்தவே வாழா நிற்பாய்!(150)

ஜடாயு செயல்

சிரசுகள் பத்தும் கொத்திச் சிறகால்தே கம்பு டைக்க
கரமதில் படையைத் தாங்கிக் கண்டக னெதிர்த்து நிற்க
அரன்கிரி தாங்கி நின்ற அழகிய தோளை யிப்போ
நரிகள்தின் னும்ப டிக்கு நாயேநான் செய்வே னென்றான் (151)

இராவணன் செயல்

வலம்வழி ராவ ணேனை மன்னன்ச டாயெ திர்த்து
பலம்கொண்ட மட்டும் தாக்கிப் பார்மீது மலைபோல் வீழ
குலமகள் கண்டி ரங்கிக் கோதண்டற் குரைக்கு மட்டும்
நிலத்தினில் வாழச் சொல்லி நினைந்துள்ளம் வருந்தி னாளே (152)

கழுகர சும்மன் வீழக் கண்டகன் மனமக ளிக்க
அழும் அன்னை யைவிடாது அடவியில் விரைவில் போக
வழியில்நேர் மலைமேல் மிக்க வானர ரிருக்கக் கண்டு
இழைகளைச் சீலை சுற்றி எறிந்துமே யவர்கள் முன்னில் (153)

ஜானகி செயல்

கரத்தில்கோ தண்ட மேந்திக் காதினில் கவச குண்டலம்
மரவுரி கொண்டு நிற்பான் மன்னவ னயோத்திச் செல்வன்
காம்பிடி கணவன் இந்தக் கானகம் வருவா ரானால்
அரக்கனின் சேதி கூறி அவரிடம் சேர்ப்பி ரையா (154)

*வானரர் செயல்

வேகமாய் வான ரர்முன் விழுந்ததோர் மூட்டை கண்டு
நாகம்போ லெழுந்து நின்று நாற்றிசை சுற்றிப் பார்க்க
மேகம்போ லிலங்கை யின்கோன் மேலேகல் லொண்ணோ டாய்ந்து
தேகந்தான் துடித்து யாவன் தேவியோ வெனத்துக் கித்தார் (155)

இராவணன் செயல்

அன்னைசா னகியைப் பாவி அசோகநல் வனத்திற் சேர்த்துக்
கன்னிகள் காவ லாக்கிக் கண்டகன் லங்கை போக
தன்னிலை மறந்து சீதை தரையிலே புரண்டு வீழ
அன்புகொள் திரிச டைதான் அருகுற்றுத் தேற்றி னாளே (156)

ஜானகி செயல்

•நாய்நரி முகமும் கண்டு நாதனே கலங்க வென்னைப்
பேய்மகன் செய்தான் சூது பெண்ணாகப் பிறந்த தாழ்வோ
காயமோ டேகி யங்கு காயாம்பூ மேனி காண
ஏயுமோ வெனக்குத் தானே ஏங்குதே யுள்ளம் ஐயோ (157)

† திரிசடை ஜானகிக்குச் சொல்வது.

யாருடைத் தேவி அம்மா எப்படி யிலங்கைப் பட்டாய்
ஊரெது பிறந்த தென்ன உண்மையைக் கூறும் தாயே
வார்மன்னர் தேவி யல்லால் வனம்வாழும் முனிபெண் டீரோ
பாரென்பெண் ணாக நேர்வேன் பதராம விருப்பீ ரம்மா (158)

---

* சுக்ரீவன் அனுமான் முதலானோர்கள். † இராவணன் தம்பி விபீஷணன் மகள்.

ஜானகி திரிசடைக்குச் சொல்வது.

நாதனைத் தவத்திற் பெற்ற நகரம்நல் லயோத்தி மன்னன்
சீதைநான் மிதிலை வேந்தன் சிறப்பாக வீன்ற ரம்மா
சூதுசெய் கைகை யின்றன் சொல்லாலே வனத்தில் சூழ
கோதண்டன் பின்னுற் கோதா வரிவனம் வாசம் கொண்டோம்

சூர்ப்பனை யென்னும் மாதென் சுந்தரன் மேல்மோ கிக்க
கார்முகி லொடித்த வீரன் கண்டித்துத் தம்பி காட்ட
பார்புகழ் லக்ம ணன்தான் பாதகி மூக்கைக் கொய்ய
மார்கொட்ட அழுது கானில் மாயமாய் மறைந்து போனாள். (160)

கரதூஷ ணர்கள் வந்து காகுத்தன் தனையெ திர்க்க
கரமேற்கோ தண்ட மேந்திக் காலனூர் சேர்த்து விட்டார்
புரமாகும் அயோத்தி யில்லாப் புள்ளிமா னென்று சேரப்
பிரியமா யதைநான் கேட்கப் பிடிக்கவே வனத்திற் சென்றார். ()

மானையே தொடர்ந்த வென்றன் மன்னனைப் பார்த்தி ருக்க
கானத்தில் தம்பி பேரென் கணவனு மழைக்கக் கேட்டு
போனவர் தன்னைக் காக்கப் பொல்லேன்பின் னனை யேவ
யானைவாய்க் கரும்பைப் போல அரக்கனுக் கிரையா னேனே(162)

கண்டுரை கமலக் கைகள் கல்லும்பெண் ணான பாதம்
மண்டல மெங்கும் போற்றும் மன்னவன் அழகும் மேனி
அண்டினோர் தம்மைக் காக்கும் அறிவனின் தேவி யாகக்
கண்டகன் அறியா தென்னைக் கானகம் எடுத்தான் பாவி (163)

துணையாக நின்ற தம்பி சொல்லையே கானி லம்மா
குணமாகக் கொள்ளா மல்நான் கொடும்பாவி நாடு வந்தேன்
அணங்குசெய் வானோ இந்த அரக்கனும் தெரிய வில்லை
மணவாளன் தன்னை விட்டு மாளவும் நேர்ந்த தையோ. (164)

திரிசடை ஜானகிக்குச் சொல்வது.

உத்தமி கனையும் தொட்டால் உடனேயே சிரம்வெ டிக்க
மெத்தநாள் முன்னே பாவி மீளாத *சாபம் பெற்றான்
சித்தத்திற் கவலை விட்டுச் சீதாய்நீ பொறுத்து நின்றால்
சத்தியன் வருகு மட்டும் தங்கைபோல் கட்டிக் காப்பேன் (165)

* அரம்பையை இராவணன் வலிய தீண்டினதைக் கண்டு நளகூபரன் உத்தமிகளைத் தொட்டால் சிரம் வெடிக்க எனச் சபித்தான். வருணன் புத்திரி புஞ்சிகஸ்தலையாலும் பிரமதேவனாலும் சாபம் பெற்றிருக்கிறான்.

பதிவிர்தை யுள்ளம் நோகப் பார்மீது வாழ மாட்டார்
சதிசெய்து முனியெ டுத்த சண்டாளன் அழிவான் தாயே
விதியின்றன் பயனே யாகும் வீணாகக் கவலை வேண்டாம்
எதிரியில் லாமல் வாழும் இலங்கேசனைக் கொன்று மீட்பார். (166)

அரக்கனால் துன்பம் சற்றும் அணுகாது கட்டிக் காப்பேன்
பரதவிக் காதே வீணாய்ப் பாரினில் புகழைச் சேர்வாய்
மரவுரி கொண்ட மன்னன் மன்னனை யெதிர்த்துக் கொன்று
காதையே பிடிப்பான் தாயே கலவரம் வேண்டாம் சொன்னேன்.

திரிசடை சொல்லைக் கேட்டு திடமும்சா னகியும் மேரு
கரிபோலச் சுற்றி நிற்கும் காதகி களைத்தூ ரப்போய்
மரமாம்சிம் சுகாவிற் றங்கி மன்னவன் நாம மேற்றி
வருவான்லக் மணனு மென்று வடதிசை பார்த்தி ருந்தாள். (168)

லக்ஷ்மணன் செயல்.

மன்னனை வழியிற் கண்டு மலரடி போற்றி நின்று
அன்னைசா னகியின் சேதி அகம்நொந்து வருந்தக் கூற
துன்பமும் வாய்த்த தென்று துடித்துமே வேக மாய்ப்போய்
அன்னநல் லாளைக் காண அடவியில் நடந்தான் மாதோ. (169)

பர்ணக சாலை யெல்லாம் பன்னியைக் காணா தேடி
சர்வமும் படைத்த தேவன் சவம்போல மண்ணில் வீழ
வர்மம்கண் டிளையோன் வாரி மார்போடு தழுவி யந்தத்
மர்மமு மறிவோ மன்ன மயங்குவ தேனோ வென்றான். (170)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

இன்னமும் எனது தேகம் இருப்பது மேனோ செய்ய
அன்னநேர் நடையா ளின்றி அயோத்தியைப் படிநான் செல்வேன்
மன்னவன் சனகன் கேட்டால் மண்மீது வாழ்வா னோநான்
என்னமாய் வாழ்வே னோபின் எனக்கேதும் தோணி லேனே. (171)

ஸ்ரீராமன் செயல்.

விளையாட வெண்ணம் கொண்டு வேறிடம் சென்று யோநீ
களையாகு தெனக்கிப் போது கண்ணேவா முன்னே காண
துளையுதே வண்டார் யுள்ளம் தூரமாய்ப் போன தேனோ
ஒளிவது போது மிங்கு உடனேநீ வருவாய் சீதா. (172)

மானைத்தான் பிடித்து வந்தேன் மகராசன் பெற்ற பெண்ணே
கானத்தி லேளிந்து கொண்டு கலங்கவும் விடாதே யென்னே
யானையைக் கண்டு மஞ்சி அடவிபோந் தாயோ வேறு
மானைத்தான் வழியில் காண மனம்போல்பின் சென்று போவா. ()

மரமிட மிருக்க மேலும் மலர்கள்சேர் செடியி ருக்க
உருகுதே யெந்தன் நெஞ்சம் உனைத்தான் காணு தையோ
இரவுமே பகலும் காத்த இளைஞனைத் தூர விட்டு
அரக்கரால் உனக்கிப் போது அபாயம்வாய்த் ததுவோ சீதாய். ()

சூர்ப்பனை பார்த்தி ருந்து சூட்சியால் விழுங்கி னாளோ
பார்மீதெப் படிநான் வாழ்வேன் பதைக்குதே யுள்ள மிப்போ
நேர்ந்ததுன் பம்எ னக்கு நிலையாகத் தெரிய வில்லை
மார்புமே துடிக்கு தீதோ மாதேமெய் யறியேன் ஐயோ. (175)

அன்னைகை சல்யா கைகை அந்தச்சித் திரகூ டத்தில்
அன்புடன் அழைத்த போதே அயோத்திபோ யிருப்பினும் தான்
பின்னோன்சொல் லியதை யிங்கு பிழையாக்கொள் ளாமல் நின்றால்
துன்பம்நே ராது னக்குத் துடிக்குதே யுள்ள மையோ. (176)

அன்னையே யேது செய்வேன் அயோத்திவ ராமல் நாங்கள்
இன்றிங்கு மடிய லாச்சு இனியேதாய்க் காண்பே னம்மா
மன்னவர் துயரத் தோடு மகனது சோகம் கொண்டு
என்னமாய்ப் பிழைப்பீ ரங்கு ஏதுக்குப் பிறந்தேன் மண்ணில். ()

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கைவளர் பிடித்த வில்லும் கரணைக்கோல் பலமும் கொண்டு
பொய்வளர் வனம திக்கப் புண்ணியா வாட லேனோ
மெய்வளர் லக்ஷ்ம னென்று மேல்வாழ்வின் னவர்ம திக்க
செய்வன விடாது செய்து சேமமா யன்னையைச்சேர்ப்பேன். (178)

அண்டமே புரண்ட போதும் அடியது பேரா நின்று
கண்டகன் தன்னையே திர்த்துக் காலனூர் சேர்த்தா லல்லோ
புண்யரா மன்த னக்குப் பொருந்தின தம்பி யென்று
அண்டரும் மதிப்பா ரன்றோ அலையாம லிருப்பீர் அண்ணா. ()

கள்ளனும் அனையைக் கிட்ட கண்டேறு னிருப்பே னுனல்
எள்ளாக அவன்தே கத்தை எண்ணெயும் புண்ணுக் காக்கி
புள்ளாக வெலும்பைச் செய்து பொருந்தமண் ணில்ம டித்துப்
பிள்ளையாய் சனகிக் கென்றும் பெருமையைப் பெற்று நிற்பேன்.

பொல்லனு மரக்கன் வீயப் போம்காலம் கிட்ட லாலே
வல்வினைப் பயனே பாவி வலிமையாய் இங்கு வந்தான்
சொல்லுக்குப் பயந்து வீணே சூடிய புகழைப் பெற்றோர்
புல்லாதாப் படித்தி ருக்கப் பொருந்திலை மனமும் பூமா. (181)

கரியைஆ யிரமும் கொண்ட கதகிதா டகையைக் கொன்று
பரசுரா மன்தன் னைத்தான் பங்கமும் வனத்திற் செய்து
கரனையும் கொடியிற் கொன்று கலங்காத மனமும் கொண்டோய்
திருடன்ற னக்கோ வஞ்சித் தேங்கியே யழுவ தண்ணு. (182)

தம்பிலக் மணன்சொல் லைத்தான் தசரதச் செல்வன் கேட்டு
கம்பிர மனமும் தேறிக் கையிற்கோ தண்டம் கொண்டு
அம்பையும் தொடுத்துக் கொண்டு அரக்கனைக் கண்டாற் கொல்ல
சிம்மத்தின் கர்ச்சிப் போடு தீரர்கள் சென்று ரம்மா. (183)

லக்ஷ்மணன் சடாயுவைக் கண்டு ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தந்தைச டாயு வீழ்ந்தார் தாயைமீட் டற்கே லாமல்
மந்திரம் கற்ற ஞேபேய் மனந்தானும் துடிக்கு தையோ
வந்தவ னைக்கண் டாலே வானம்போய் மறைந்த போதும்
பந்துபோற் சுழற்றி யிங்கு பார்மீது மோது வேனே. (184)

ஸ்ரீராமன் சடாயுவைக் கண்டு புலம்புவது.

அண்ணாச டாயு ராசே அநியாய மெவன்செய் தானே
மண்ணிலே படுத்தல் கண்டு மனம்தடு மாறு தையோ
பண்ணின பாவந் தானே பார்க்கவிப் படியும் உம்மை
விண்ணவ ரேனும் கொல்வேன் விளைந்ததைக் கூறு வீரோ (185)

சடாயு ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மன்னவ னிலங்கை யாளும் வஞ்சனே தாயைப் பற்றப்
பின்னுகை விரைவிற் சென்று பேயனை விடாதெ திர்த்து
நின்றிடம் விட்டுப் போகா நெடுநேரம் யுத்தம் செய்தும்
பன்னியை மீட்கா திதோ பார்மீது படுத்தேன் ராமா. (186)

ஸ்ரீராமன் செயல்.

ஐயோநா னேது செய்வேன் அன்னமே யரக்கன் உன்னைக்
கையாடா தெடும்போ தேதாக் கதறிநீ யழுதா யோதான்
மெய்யாக இனிமே லுந்தன் மேனியைக் காண்ப தில்லை
ஐயகோ அனையைக் காத்தே அரசையா ளுவது மில்லை. (187)

சடாயு ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சடாயுமே சுடும்நீ தன்னைச் சுந்தரா கொண்டான் நீயந்து
குடிக்குமே கொள்ளி வைக்கக் கொடுசென்றான் பாவி யங்கு
தடமுறு தீயை யந்தத் தசமுக னேது செய்வான்
புடகம் வாழ் அன்னம் போலே பொருந்தியே வாழ்வாள் கண்டாய்.

ஸ்ரீராமன் சடாயுவுக்குச் சொல்வது.

எடுத்தபா தகன்ப யந்து இருள்சூழும் வனத்திற் பெண்ணை
விடுத்துமே மறைவா னானால் விலங்கையெங் கனம்நான் காண்பேன்
பிடித்தும்கை யிற்கோ தண்டம் பிதாவேசற் றஞ்சி டாது
கெடுத்தவன் தன்னை விட்டால் கிட்டுமோ வெனக்கு மேன்மை. ()

அண்ணாதை சரதர் பின்னால் அருமையா யென்னைக் காக்கும்
புண்யரைச் சாக விட்டுப் புவியில்எப் படிநான் வாழ்வேன்
பண்ணின பாவத் தின்கோள் பன்னியைப் பிரித்த தாகும்
கண்யமாய் உமையும் கொன்ற கண்டகன் பலந்தா னேதோ. (190)

சடாயு ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

பொருப்படி நிற்கும் ராமா பொல்லாத அரக்கன் உன்றன்
செருப்படி பொடிக்கி டோதான் சினப்பது மேனோ வீணாய்
நெருப்படி கொண்டு சென்றோன் நெடுநாளும் வாழ மாட்டான்
திருப்படி மலராப் பெற்ற தேவிக்குப் பழுது நேரா (191)

அருமைச்செல் வகனே யிங்கு ஆயாசம் வேண்டா மெற்காய்
பெருமையா யிந்த நாளே பிழைத்திருந் ததுவே போதும்
திருடனின் கையில் உன்றன் தேவியை மீட்கா விட்டேன்
உருகுதே யுள்ளம் வேறே லொன்றுமே கவலை யில்லை (192)

கழுகர சன்ச டாயு காகுத்தன் சோகம் மாற்றி
விழியால்மக் களையும் நோக்கி விட்டன னுயிரை யங்கு
பழுதுசெய் பேயன் றன்னைப் பலவான்கொல் லற்கு மெண்ணி
வழியாய்வே கமதா யோடி வனத்தில்கா ணாது சோர்ந்தான். (193)

ஸ்ரீராமன் செயல்.

அண்ணாத சரத ரோடு அன்பான சாடாயு மாள
கண்டனால் சீதை நீங்கிக் கானத்தில் மரம்போல் நின்றேன்
மண்ணிலே பிறந்த பாவம் மாதாபி தாவைக் காக்க
புண்ணியம் செயாது விட்டேன் போவதா அயோத்தி தம்பீ (194)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

இன்னமும் கவலை கொண்டு இப்படி யழுவ தேனோ
துன்பத்தை யொழித்து நின்றால் துட்டன்வாழ் லங்கை கண்டு
அன்னையை யெடுத்த வன்தான் அண்டத்தி லொளிந்த போதும்
பின்னான்லக் மணன்அஞ் சாது பேயனைக் கொன்று மீட்பேன்.

காகுத்தன் பதவி நன்றாய்க் கழுவர சுக்கங் கீந்து
தேகமும் தளர்ந்து நின்று தேவிக்காய் மனம்க லங்க
சோகம்லக் மணனு மாற்றச் சுந்தரன் மனமும் தேறி
வேகமாய்க் கான்ந டந்தார் வீரனை யெதிர்த்து மீட்க (196)

இடியோடு மேகம் கூடி இருண்டுசெப் திப்ப தேபோல்
உடலோடு கொடியு மூடி உரகம்போ லங்கு தேகம்
படிமேலே புரண்டு நிற்கும் பாதக *கவந்தன் தானும்
வடிவோர்க டம்மைத் தானும் வாயிட்டுக் கொளப்பி டித்தான். ()

தருமத்தின் நிலைதட் டாத தசரத மக்க ளங்கு
. காத்தினில் வாளை யேந்திக் கண்டகன் தோளை வெட்ட
அரக்கனும் வந்து தித்த அல்லலை எல்லாம் கூறி
கரியமால் கமல னின்றன் கழலடி தன்னைப் போற்றி (198)

---

*தனுவென்னும், கந்தர்வன். ஸ்தூலகேச னென்னும் இருடியால் சாபமேற்று இராக்கதனாய் பிறந்து, இந்திரனோடு யுத்தம் செய்து வச்சிராயுதத்தால் அடியுண்டு கிடந்தவன்.

கவந்தன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

வனரன்வா லிக்குப் பின்னால் வந்தசுக் ரீவன் தானும்
இனப்பகை நேர்ந்த தாலே இருசிய பர்வ தத்தில்
கனமான வாழ்க்கை விட்டுக் கவலையே யுள்ளம் கொண்டு
தனதுறு தோழ ரோடு தளர்ந்துமே வாழ லானன் (199)

வரமுனி மதங்க னாலே வாடாத மலரு முண்டு
பெருத்ததோர் குகையோ டுள்ளே பின்னகக் குட்டையுண்டு
கரிகளும் அதிக மாகக் கானத்தில் உலாவ லுண்டு
அருகினில் சபரி தன்னல் அடையாளம் கேட்டுப் போவாய் (200)

கங்கைபோ லோடும் பம்பைக் கரையினில் இடமே கண்டு
தங்கியே நிற்பா யாகில் சரணமும் உமைஅ டைந்து
மங்கள மாகக் கொண்டு மன்னவன் நேசம் பூண்டு
சங்கைகள் எல்லாம் நீரச் சகாயமும் செய்ய நிற்பான் (201)

மதங்கமா முனிவர் செய்த மகாதவப் பயனு லங்கு
விதியினல் நேர்ந்த துன்பம் விலகுமே தங்கி னாலே
மதியினில் மேன்மை கொண்ட மன்னவா சொல்வா றுற்றால்
சதிசெய்த மன்னைக் கொன்று சானகியை மீட்பாய் கண்டாய். ()

கபந்தன்சொன் னதனைக் கேட்டுக் காகுத்தன் விடைபெற் றேக
* சபரியும் வழியில் கண்டு சாந்தனை அழைத்துச் சென்று
தபசின்றன் பயனே யென்று தருணமும் கனியு மீய
அபயமென் றோரைக் காக்கும் ஐயனும் மகிழ்ந்தான் உண்டே. ()

சபரியும் சொர்க்கம் சேரச் சகலமும் உற்று நோக்கி
சுபத்தையே அடைய வெண்ணிச் சுக்ரீவன் தன்னைக் காண
கபந்தனும் கூறும் வாறே கானத்தில் வழியும் கண்டு
உபவாச மாய்ந டந்தே உயர் பம்மை நாடினரே (204)

---

*ஓர் பெரியவர் பம்பா தீரத்திலுள்ள மதங்காசிரமத்திலிருந்தவர், ஸ்ரீராமன் சித்திரகூடம் வந்ததைக் கேள்வியுற்று கனிகளைச் சேகரித்து வைத்து ஸ்ரீராமனுக்குத் தந்து சொர்க்கமடைந்தவர்.

ஆரணிய காண்டம் முற்றிற்று.

---

ஸ்ரீராமஜெயம்.

# கிஷ்கிந்தா காண்டம்

---

*பம்பைமா நதியைக் கண்டு பன்னிக்காய் மனமும் வாட
தம்பிலக்ஷ்மணன் றானங்கு தசரதன் சேயைத் தேற்ற
கம்பிர மனமும் கொண்டு கரையரு கினிலி றங்கி
சம்பகப் பொழிலைக் கண்டு சனகியை நினைந்து சோர்ந்தான். (1)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

வளவான ரம்வாழ் தாவில் வந்துநாம் சுகமே சேர்ந்தோம்
கனமாக இவரைக் கண்டு கண்டகன் வாழ்நா டேகி
இனமோடு கொன்று மீட்டி எங்குமே புகழ்நிற் றாமல்
வனமேநா மடுத்து வீணாய் வாடுவ தேனோ அண்ணா. (2)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

தசரத சேயாய் வந்தும் தகுமோசொல் நமக்குத் தம்பி
வசமாகக் காப்பி னும்தான் வானரற் காணப் போமோ
திசையிங்கே யிருப்போ மாகிற் றேடியே நமைய டுத்து
நிசமாக நட்புக் கொள்வார் நிலையாக நிற்பாய் கண்டாய். (3)

இளையவன் தன்னோ டங்கு இனியநற் கானம் தங்கி
களையால்ரா மன்ப டுத்துக் கரையாம்பம் பையை நோக்க
கிளை ஆதி சேட னாகக் கேசவன் முகத்தைக் காக்க
வளமான சிநேகம் கொள்ள வானரற் பார்த்து நின்றான். (4)

கண்டிரா மனைச்சுக் ரீவன் கலங்கியே விரைவில் சென்று
புண்யர்சாம் புவற்குக் காட்டப் பொருமையா யிருந்து நோக்கி
கண்யகோ தண்ட மேந்திக் கரைவந்த தேதோ வென்ன
உண்மையை அறிந்து கொள்ள ஓடினான் அனுமான் பக்கம். (5)

---

* கிஷ்கிந்தை அருகே ஓடும்நதி துங்கபத்ராவென வழங்கும்.
† கரடியரசன், சுக்ரீவன் மந்திரி.



*சுக்ரீவன் அநுமானுக்குச் சொல்வது.

கையில்கோ தண்ட மேந்திக் கவசகுண் டலம்வி ளங்க
வையகம் வான மேற்றும் வரதன்போ லிங்கு வந்து
வெய்யிலில் தங்க லேதோ விளங்கவில் லையெ னக்கு
மெய்யிலை யறிந்து வந்தால் மேலாய்யோ சிப்பேன் என்றான். (6)

†அநுமான் செயல்.

அநுமான்ஐ யனையும் கண்டு ஆனந்த நிலையில் நின்றான்
வனமன்சுக் ரீவ னுக்கு வாழ்வையு மளிக்க எண்ணி
வனமதில் விரைவாய்ச் சென்று வரதனி னெதிராய்ப் போக
தனகரன் நிகைத்தே யங்கு தம்பியின் முகத்தைப் பார்த்தான். (7)

ஸ்ரீராமன் அநுமானுக்குச் சொல்வது.

கொடியகா னத்தி லிங்கு குண்டலம் காதில் மின்ன
திடமாக நின்ற தேதோ தெரியவு மிலையெ னக்கு
எடுத்தரா வணன்றன் னைத்தான் எதிராகக் கண்ட துண்டோ
உடனேநீ சொல்வா யாகில் உயிருடன் வாழ வொட்டேன். (8)

அநுமான் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அஞ்சனா தேவி பெற்ற அநுமந்தன் என்பா ரென்னை
வஞ்சனை யால்சுக் ரீவன் வனம்வாழ விட்டான் வாலி
பஞ்சைநான் நேசித் தற்குப் பம்பையில் வரவைக் கண்டு
தஞ்சமாய் நம்பி வந்தேன் தாசனைக் கொள்வீ ரென்னை. (9)

சூரியன் காணப் பூவும் சோர்ந்ததாய் வெயிலில் வந்த
காரணம் யாதோ தேரேன் கலங்குதே யெந்த னுள்ளம்
கோரமாய் வாழ ரக்கர் கொடியது செய்தா ரோதான்
தீரமா யெதிர்த்துக் கொல்லத் திறமெங்க ளரசுக் குண்டு (10)

---

*கிஷ்கிந்தை அரசனை வாலியின் தம்பி. இவ்விருவரும் ரிக்ஷராஜனை யென்னும் வானரன் பெண் வடிவம் பெற்றபோது, இந்திரனால் வாலியும் சூரியனால் சுக்ரீவனும் உண்டாகிறார்கள். பெண்வடிவம் மாறின பிறகு இவர்களை அழைத்துக்கொண்டு கிஷ்கிந்தை அடைந்து அதற்கு அரசனானான் (கிஷ்கிந்தை பல்லாரி ஜில்லா ஆஸ்பெட்டு ரயில் ஸ்டேஷனுக்கு சுமார் 6 மையில் தூரத்திலிருக்கிறது.)

†அஞ்சனாயின் கர்ப்பத்தில் வாயுவி னனுக்கிரகத்தால் பிறந்தவர். இளம் பருவத்தில் சூரியன் மேல் பாய்ந்தவர். இந்திரனிடத்தில் தங்கத் தாமரை மாலை பெற்றவர். தேவர்களிடத்தில் வரம்பெற்றவர். சூரியனிடத்தில் சாஸ்திரங்கள் கற்றவர். இந்திரன் வச்சிரத்திற்கும் அசையாத (ஹநு) பலம் பொருந்தினவர். நம்பினவர்க்கு சஞ்சீவியாய் நிற்கும் சிரஞ்சீவியானவர். சுக்ரீவனுக்கும் மந்திரி.

ஸ்ரீராமன் அனுமானுக்குச் சொல்வது.

ஐயன்மன் தசர தன்றன் அருந்தவத் தானு தித்து
கையகி வரத்தால் நாங்கள் கானத்தில் வாழும் நாளில்
தெய்வமாய் நம்பிச் சேர்ந்த தேவியைக் கொண்டு போனேன்
வையத்தை விட்டொ ழிக்க வனத்தினில் தேடி வந்தோம். (11)

அனுமான் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

வானரன் சரண மாக வருவதற் கச்சம் கொண்டு
கானத்தில் கண்டு சேரக் காருத்தா விடைகொ டுத்தான்
வானவர் துணையும் கொண்டு வஞ்சக னெதிர்த்த போதும்
ஈனனை அஞ்சான் கொன்று இங்ஙனம் தானைச் சேர்ப்பான் (12)

ஸ்ரீராமன் அனுமானுக்குச் சொல்வது.

சரணம தடைந்த பேரைச் சகோதர னுகைக் காக்க
மரவுரி கொண்டு வந்தேன் மன்னவ னஞ்ச வேண்டாம்
துரிதமாய் அழைத்து வந்தால் துர்ச்சவா லியையும் கொன்று
அரசையும் கொடுப்ப துண்மை அனுமானே ஐயம் வேண்டாம். ()
ராமனைப் பணிந்து வீரன் சத்யலக் மணனைப் போற்றி
சேமமாய் அன்னையைக் கொண்டு சேருவீர் அயோத்தி யென்று
நாமதம் செயாம லங்கு நம்பிபால் விடையும் பெற்று
சாமத்தா லிலையும் மன்னன் சங்கையைத் தீர்க்க வந்தான். (14)

அனுமான் சுக்ரீவனுக்குச் சொல்வது.

மன்னவன் தசர தன்முன் மகனென அயோத்தி ராமன்
அன்னைகை கைவ ரத்தால் அடவியில் வாழும் நாளில்
மன்னன்ரா வணனும் ராமன் மனைவியைக் கொண்டு போகப்
பின்னுக நடந்து வந்தார் பேயனை யெதிர்த்துக் கொல்ல (15)
துன்பமெல் லாமொ ழிக்கத் தொழும்ஈச னேவந் தாற்போல்
மன்னவன் ராமன் வந்தான் மகிபதி பயமும் வேண்டாம்
பின்னுகப் பம்பை சேர்ந்து பிரியமாய் நட்புக் கொண்டால்
முன்னுன்வா லியையும் கொன்று முடிக்கபி சேகம் செய்வான். (16)
அனுமானின் வார்த்தை கேட்டு அச்சம்விட் டுச்சுக் ரீவன்
வனமதில் மகிழ்வாய்ச் சென்று வரதனைப் போற்றி நிற்க
மனகுறை யெல்லா மிப்போ மன்னவா சொல்வா யென்ன
இனவாலி கதைக ளோத *இருசியம் அழைத்து வந்தான். (17)

*மதங்க முனிவர் வாசம் செய்த இருஷியமுக பர்வதம்.

### சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

வாலியின் பின்னால் வந்த வானரச் சுக்ரீ வன்நான்
காலமும் கழிக்க விந்தக் கானத்தில் செய்து விட்டான்
பாலும்நீ ரும்போல் வாழ்ந்த †பத்னியை விட்டுக் கானில்
கோலமா யலைய நின்றேன் கோதண்டா கருணை வைப்பாய். (18)

### ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

இன்றோடே யொழிந்த தின்னல் இனிமேலே கவலை வேண்டாம்
பின்னான்பா ரியினைப் பாரில் பெண்ணாக்கொள் ளத்தீ யோனைக்
கொன்றனைக் கியேல் பட்டம் கோதண்ட மாகா தன்றி
மன்னவன் தசர தன்நல் மகனெனச் சொலமாட் டாரே. (19)

### சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

வையகத் தொருவ ரில்லை வாலியை யெதிர்த்து நிற்க
மெய்யான வார்த்தை சொன்னேன் மீள்வதாய்த் தோன்ற வில்லை
செய்வதாம் அவற்கு மேலாம் சிறப்புநீர் செய்வீ ரானால்
ஐயனே கவலை விட்டு அன்புடன் நேசிப் பேனே. (20)

### ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

அண்ணன்வா லியின்வீ ரத்தை அனுவுடன் நீயும் சொன்னால்
கண்பம்மே லாகச் செய்து கவலையைத் தீர்ப்பேன் கண்டாய்
அண்டமே புரண்ட போதும் அயோத்திமன் செல்வன் அஞ்சான்
விண்ணையும் துளைக்க வெண்ணில் விதமுடன் செய்வேன் மன்னா.

### சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

‡துந்துமி யெனும்பி னைத்தான் தோகையால் தினம்அ சைத்துச்
சுந்தர மராம ரங்கள் சூட்சியா லொழுங்காய்ச் செய்வான்
சந்தேகம் தனையொ ழித்தால் சமையமே நட்புக் கொள்வேன்
பந்தாகக் கிரியைக் கொள்ளும் பலத்தைநா னேது சொல்வேன்.

---

† ருமை சுக்ரீவன் மனைவி சுஷேணன் மகள்.

‡ மாயாதேவியின் இரண்டாம் புத்திரன் மதங்கமுனிவர் வாசம்செய்த இருஷியமுக பர்வதத்தில் வாலி இவனை கொன்று அசுத்தம் செய்தபடியால் முனிவர் வெகுண்டு வாலியை அந்த பர்வதத்திற்கு வாராதபடி சபித்தார். சுக்ரீவன் வாழ்ந்த மலை இதுதான்.

கனமான செயலைக் கேட்டு காகுத்தன் நகைப்புங் கொண்டு
மனம்போல்செய் வதுவாய்க் கூற மகாராசன் உள்ளம் தேறி
தனகரன் தன்னைப் போற்றித் தருணமே யழைத்து வந்து
வனத்தில்நிற் கும்ம லும்மை வணக்கமாய்க் காட்டி னானே. (23)

வீராதி வீரன் நோக்கப் பின்னேல் கால் விரலா லெற்ற
மாராம ரம்து ளைத்து வானரன் முகத்தை நோக்க
தீராத வினைகள் தீர்க்கும் தேவனே கருணை கொண்டு
நேராக காக்க வந்த நிலையென நட்புக் கொண்டான். (24)

அன்னையால் எறிந்த மூட்டை ஐயன்பாற் கொண்டு சேர்க்கப்
பின்னானுக் கவிழ்த்துக் காட்டிப் பெம்மானும் வெகுவாய்ச் சோர
ஒன்றும்தோ ணுமல் தம்பி யுடல்சேர்ந்து நிற்கக் கண்டு
அன்புடன் சுக்ரீ வன்றான் அயோத்திச் செல் வனையும் தேற்ற. ()

சுக்ரீவன் செயல்

வானரன் தன்னூர்க் கேகி வாலியைப் போர்க்க ழைக்க
வானமே சேர்க்க வெண்ணி வலியொடு சீறி வந்து
கானிலே யெதிர்த்து நின்று கடூரமாய் யுத்தம் செய்ய
மானவன் பார்த்துச் சூதாய் மரத்தடி நின்றான் மாதோ. (26)

வானரன் தனைப்பு டைக்க வாடியே மனமும் சோர்ந்து
கானிலே மறைவாய் நிற்கும் காகுத்தன் பாதம் வீழ
யானவ னரசை வாரி மார்போடு தழுவிக் கொண்டு
ஆனஉம் ரூபம் போரில் ஐயுற நின்றே னென்றான். (27)

ஸ்ரீராமன் செயல்.

நாளையே வருவா னாகில் நமனூரைச் சேர்ப்ப துண்மை
வேளையும் பொறுப்பா யென்று வெகுவாக அவனைத் தேற்றி
நீளமாம் மாலை யொன்று நேர்மையாய்க் கழுத்தில் சூடக்
காளையாம் தம்பிக் கோதக் கருணையாற் செய்தான் மாதோ. (28)

மாலையைச் சூடிப் பின்னான் மகாராசன் தன்னை நோக்கி
காலமு மவனை யீதே காலனூர் சேர்ப்பா ரென்ன
வாலியின் பின்னால் வந்தோன் வரதனின் பாதம் போற்றி
காலிகம் போலே சென்றான் கானத்தில் வேக மாக. (29)

சுக்ரீவன் செயல்.

வாலியைப் போர்க்க ழைக்க வணங்கிந்தா ரைத டுக்க
கோலமா யெதிர்த்த பேரைக் கொல்வதே உண்மை யென்று
மாலையோ டேநிற் பான்மேல் வாலியும் விரைவாய்த் தாக்க
காலத்தைப் பார்த்தி ருந்த காகுத்தன் பாணம் விட்டான். (30)

வாலி விழுதல்.

வேரொடு மரம்சாய்ந் தாற்போல் வேந்தனும் வாலி வீழ்ந்து
மார்பினில் தைத்த ஏவை வலுக்கொண்டு பிழுத்துப் பார்க்க
கார்முகில் ஓடித்து வந்த காகுத்தன் முன்னால் நிற்கப்
பார்மீது படுத்த வாறே பற்களைக் கடித்தே வாலி. (31)

வாலி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தருமத்தில் நோக்க முள்ள தசரத சேயாய் வந்து
கருவம்கொள் பாணம் விட்டாய் கருதாமற் சற்று மையோ
துரும்பான இலங்கை யோன்உன் தோகையைத் தூக்க லாலுன்
பெருமையெல் லாமே விட்டுப் பேதைபோல் துணிந்து செய்தாய்.

ஸ்ரீராமன் வாலிக்குச் சொல்வது.

தம்பியின் மனைவி யைத்தான் தருமமோ தொடுவ தும்சொல்
வம்பான வார்த்தை சொன்னாய் வெரும்வினை தன்னை நோக்காய்
அம்பிற்கோ தண்ட மேந்தி யடவியை யாள வேவி
தம்பியாம் பரதன் எற்குத் தந்ததா லடித்தேன் கண்டாய் (33)

வாலி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தண்டிக்க வந்தோ னிங்கு தகுமோதான் மறைந்த டிக்க
புண்ணியன் தசர தன்றன் புகழையும் கெடுக்க அந்தோ
கண்யகோ தண்ட மேந்திக் கானகம் வந்த தாலிம்
மண்ணொடு விண்ந கைக்க மன்னவா அற்பம் செய்தாய் (34)

ஸ்ரீராமன் வாலிக்குச் சொல்வது.

கடிக்கும்தன் மையை யுள்ள கானனு னதினு"லுன்னை
அடிப்பது காணு நின்ற தாசனுக் கேற்ற தர்மம்
படித்தவை யெல்லாம் போதும் பாவத்தால் தம்பி நோக
விடுத்தவன் தனக்கு நீதி விளங்கமாட் டாது கண்டாய். (35)

வாலி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

உன்னைப்போல் வீர னிந்த வுலகினிற் கண்ட தில்லை
மன்னவன் தசர தன்முன் மகனெனப் புகழப் பெற்றாய்
என்னவாய்த் துணிந்தாய் ராமா இப்படிச் சிறிது கூற
முன்னாளின் வினையே யிங்கு மூண்டது பொருந்தி வாழ்வாய்.

ஸ்ரீராமன் வாலிக்குச் சொல்வது.

என்னிடம் வாது வேண்டாம் எண்ணத்தை யறிந்தே னிப்போ
நன்மைசெய் தானு னக்கு நாடெங்கும் தழைக்கச் சொன்னாய்
முன்செய்த வினையே யெல்லாம் முடிந்தது துயரம் வேண்டாம்
அன்பாகத் தம்பி யோடுன் ஆளுநம் வேலாடு மோசொல் (37)

வாலி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தேவர்க ளேற்றும் தேவா தீவினை தீர்க்க வந்தாய்
தேவரீர் மகிமை யோரேன் தீயுரை சொல்லி விட்டேன்
ஆவலாய் வந்தீ ரிங்கு அடியேனுக் கருளைச் செய்ய
பாவத்தை மன்னித் தாளப் பாதத்தைப் பணிந்தே னானே. (38)

கார்கடல் வண்ணா போற்றி கரியைக்காத் தவனே போற்றி
கார்வணர் குலமு றக்கும் காரணா போற்றி போற்றி
காரமலி யமர்ந்த வெந்தை காயாம்பூ மேனி போற்றி
கார்முகில் ஒடித்த வீரா கழலடி போற்றி போற்றி. (39)

திருமகள் மார்பா போற்றித் தேடியே வந்தாய் போற்றி
திருமதி னகரம் வாழும் திருமாலே போற்றி போற்றி
திருமல ரேந்தும் கையா தீவினை யொழிப்பாய் போற்றி
திருவடி சேர்த்துக் கொள்ளும் தேவனே போற்றி போற்றி. (40)

*தாரை புலம்புவது.

சங்கரன் கிரியைத் தோளில் தாங்கினோன் றன்னைக் கட்டி
எங்குமே புகழைப் பெற்றோய் ஏற்குமோ மண்ணில் வீழ
அங்கத னைக்காக் காமல் அலையவே விட்ட தாலே
அங்கந்தான் துடிக்கு தையோ ஆதரிப் பார்யார் காணேன். (41)

---

*வாலி மனைவி. தாரகன் மகள்.

### வாலி தாரைக்குச் சொல்வது.

முன்னாளில் செய்த வத்தால் முதல்வினை நேரில் வந்து
நன்னயஞ் செய்தா ரூரும் நங்கையே கலங்க வேண்டாம்
பின்னானைச் செய்த வெல்லாம் பெரும்வினை யாய்வ ளர்ந்து
இன்னாளில் வாய்த்த தெற்கு ஏதுக்கோ கவலை பெண்ணே. (42)

விதியின்றன் பயனு லல்லோ விழுந்தனன் புவியி லின்று
சதியல தம்பி நல்லன் சபிக்காதே வீணாய்ப் பெண்ணே
மதியுறு குற்றம் செய்தேன் மாபவம் தீர ஈசன்
கதியென நம்பி நின்றாற் காகுத்தன் ரட்சிப் பானே. (43)

### * அங்கதன் புலம்புவது.

அண்ணாவே ஐயோ அண்ணா அவனியி லேதாய் வாழ்வேன்
மண்மீது வாழ்வே னென்று மகனையும் நினைக்க வேண்டாம்
கண்ணிரா வணனைக் கட்டிக் காகுத்த னாமேல வீழத்
தண்ணீர்மேல் காலமாகத் தவிக்குதே யுள்ள மையோ. (44)

### வாலி அங்கதனுக்குச் சொல்வது.

எனக்குமே லான தந்தை இன்றேசுக் ரீவ னென்று
மனம்போலச் சொல்தட் டாது மங்கள மாக வாழ்வாய்
தனகான் வார்த்தை கொண்டு தசமுகன் நாடு சேர்ந்து
இனமோடு கொன்று மீட்டில் எனதுசேய் புகழ்வார் யாரும். (45)

### சுக்ரீவன் புலம்புவது.

என்னையும் தம்பி யாக இன்னாளின் வரைக்கும் விட்டாய்
நின்னையும் மடியப் பாவி நின்றேன்கோ டாலிக் காம்பாய்
என்னைப்போல் பேதை யுண்டோ இனியேது செய்வேன் அண்ணா
முன்னிலும் மேலா யிப்போ மூண்டதே துன்பம் ஐயோ. (46)

### வாலி சுக்ரீவனுக்குச் சொல்வது.

உன்னைப்போல் நன்மை யெற்கு உலகினில் யார்தான் செய்வார்
பின்னாகப் பிறந்தெ னக்குப் பெரும்பதம் தந்தாய் நீயே
முன்செய்த வினையா லுன்னை மோசமே செயத்து ணிந்தேன்
அன்புடன் தாரை யோடிவ் வங்கத னைக்காப் பாயே. (47)

---

* வாலி மகன்.

கண்ணைப்போல் எந்த நாளும் காகுத்தன் தனைவி டாது
கண்டக னெதிர்த்து நின்றால் கலங்காது முன்னால் நிற்பாய்
எண்ணம்போல் செய்து வந்தால் என்னுடைத் தம்பி யென்று
மண்ணிலே புகழைப் பெற்று மங்கள மாக வாழ்வாய். (48)

வாலி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

எனக்குமோர் வார்த்தை கூறில் இலங்கோனை வாலாற் கட்டி
சனகனின் குமாரி கொண்டு சமர்ப்பிப்பேன் பாத மன்றோ
வனம்வாழும் குரங்கே யென்று வலியறி யாது விட்டோர்
இனமோடு சேர்ந்து வந்து இளையாமற் கொன்று மீட்பார். (49)

வானரன் உயிரு மேக மகனோடு தாரை சோரக்
கானகம் புரண்டு ருண்டு கதறும்பின் னோனைத் தேற்ற
மானன்அங் கதனோ டுற்று மன்னனை மாள வைத்து
வானவர் தினமே போற்றும் வரதன்பா தட்ப ணிந்தான் (50)

சுந்தரன் மனம கிழ்ந்து சுக்ரீவன் றன்னைத் தேற்றி
முந்தும்நல் வினையி னாலே முடிந்தது வென்மே கூறி
சிந்தைநொந் தேத ளர்ந்த இறைவன்சோ கத்தை மாற்றி
மந்தரம் தாரை யோடு மங்கள மாவா னென்றான். (51)

சுக்ரீவன் தனக்குக் கீடம் சூடவே தம்பிக் கோது
துக்கத்தால் தளர்ந்து நிற்கும் தோழனை யழைத்துச் சென்று
பக்கலிற் சோகம் மாற்றிப் பம்பைநீர் அபிசே கித்துத்
தக்கதோர் ஆடை சேர்த்துத் தரித்தனன் முடியை மாதோ. (52

வானரன் மனம்ம கிழ்ந்து மானவன் பாதம் போற்றி
வான்மழை யொழிந்த பின்னர் வருவனென் றோதக் கேட்டுச்
சேனையோ டுரையின் வாறே சேர்கென விடையும் பெற்று
கானிலே வேக மாய்ப்போய்க் காகுத்த னிடமே சேர்ந்தான். (53)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

தசமுகன் வாழும் நாட்டில் தம்பிலக் குமனே சீதை
நிசமாய்மாண் டேயி ருப்பாள் நிலைகொள்ள விலையே சித்தம்
திசைகளு முழுதும் தேடித் தேவியைக் கண்டு நாட
வசமான மகுடம் பெற்ற வானர னேது சொன்னான். (54)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கார்காலம் நான்கு மிந்தக் கானத்தில் கழித்து விட்டால்
மார்களி வருவ தாக வானரன் சொல்லச் சொன்னான்
பாரெங்கும் விடாமல் தேடிப் பாவியை யெதிர்த்துக் கொன்று
சேர்ப்பேன்அன் னையைப்பா தத்தில் சிறிதுமே கவலை வேண்டாம்.

போது.

ஆடியே வாலி வீய ஆவணி திரிதி பூர்வம்
சூடியே முடியை யந்தச் சுக்ரீவன் தனக்கு மெய்யன்
தேடியே யரக்கன் வாழும் தேசத்தைக் கண்டு சேர
வாடிய *மலையில் தங்கி வருணகா லம்க ழித்தான். (56)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

இந்தவெம் வனமே யொழ்ந்து இரவொடு பகலும் வாட
தந்தையாய் தசர தன்செய் தவத்தின்றன் பயனோ காணேன்
வந்துமே வனத்தில் கர்மம் வஞ்சன்ரா வணனின் கையில்
சுந்தரி யைவிட் டிங்கு சோகமும் வாய்த்த தையே. (57)

கொடுத்தவன் நாட்டிற் சீதை ஏதாகக் கலங்கு வாளோ
பிடித்தும்கை யிற்கோ தண்டம் பெரும்பழி வாய்த்த தையோ
கொடியவன் கானம் வந்து கோதையை யெடுக்கக் கண்டால்
துடி துடித் திடவே யந்தத் துட்டனைக் கொன்றே தீர்ப்பேன். (58)

புட்பங்கள் கண்டாற் சீதை பொருந்தியே நிற்க மாட்டாள்
பட்சிகள் அழகை யிங்கு பார்த்தாலே பிடிக்கச் சொல்வாள்
துட்சன்வாழ் லங்கை யிப்போ துணையுமே ஒருவ ரின்றி
கட்டமே படுவா ளல்லோ கலங்குதே யுள்ள மையோ. (59)

தண்டக வனத்தி லென்னைத் தாங்கியே காத்த தேபோல்
மண்டல தவத்தாற் பெற்ற மன்னனும் காத்த தில்லை
கண்டக ராவ ணன்பாற் கடுஞ்சிறைப் பட்ட என்றன்
பெண்டினைக் காக்க விட்டுப் பெரும்பாவ மேந்தி னேனே. (60)

---

*மாலியவந்தம். ஒருமலை. ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குப்பட்டங் கட்டின பிறகு தார்காலம் கழிக்க தங்கினமலை.

விதியின்றன் பயனுண் டானல் விண்ணவ ரான போதும்
மதியாது தாழு மென்று மாதவர் சொன்ன தன்மை
மிதிலைமன் னவனின் மேலாய் மேவியே வனத்தில் காத்தும்
சதியின்றன் செயலால் என்னைச் சானகி பிரிந்தா ளல்லோ. (61)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

காதியின் மகனைக் காக்கக் கடியதா டகையைக் கொன்ற
கோதண்டம் கரமி ருக்கக் கோலந்தா னழகோ அண்ணா
காதகன் வாழும் நாட்டைக் கண்டுவந் திடவும் சேனை
பாதக னுயிரை வீட்டி பத்னியோ டேற்ற வாழ்வீர் (62)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

மாரிகா லந்தான் சென்றும் வானர மன்னன் றெற்குத்
தீரமாய்ச் சொன்ன வார்த்தை திதோபார் மறந்து விட்டான்
வீரனை நேராய்ச் சென்றிவ் வேளையே யழைத்து வாநீ
தாரமாச் சொல்வா னுனல் தொலைப்பையே அவனைத் தம்பீ. (63)

அண்ணனின் பதம்ப ணிந்து அரசனைக் காணப் போக
கண்டுவா னரமா சேனை கற்களால் வாயில் மூடி
மண்ணாற வோடி யங்கு மாருதி யைக்கண் டோத
கண்ணத்தை யறிய வெண்ணி இளைஞனைக் காண வந்தான். (64)

மலையாக நிற்கும் மன்னை மாருதி பணிந்து கண்டு
நலமான வார்த்தை சொல்லி நாட்டுக்கு ளழைத்துப் போக
பலவானின் வரவைக் கேட்டு பயந்துமன் வரவே வீரன்
புலிபோல்வே கமதாய்ச் சீறிப் பொருந்தாமற் சற்றும் சித்தம். (65)

லக்ஷ்மணன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

வஞ்சகன் ராவ ணன்மேல் வானரன் தனக்கு நேர்ந்த
நெஞ்சந்தா னேதோ வெற்கு நிலையாகக் கூறி விட்டால்
பஞ்சுபோல் சேனை யெல்லாம் பறக்கவே யடித்திப் போதே
அஞ்சாமல் லங்கை சேர்ந்து அவனையும் கொன்று மீட்பேன்.

தாரை லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

தசரதன் சேயாய்த் தோற்றித் தருமோயிப் படியும் சொல்ல
நிச்த்தைக்கொள் ளாமல் வீணாய் நிந்திப்ப தழகோ கண்டாய்
வசமான சுகமும் கிட்ட வானரன் மறந்தான் காலம்
தசமுகன் றன்னைக் கொல்லச் சகாயமில் லாமல் மாளா. (67)

அநுமான் அங் கதனும் வேண்ட அயோத்திச்செல் வன்ம கிழ்ந்து
மனமது கவலை விட்டு மகாராசன் கரம்பி டிக்க
வனம்வாழும் சேனை கூடி வந்திடத் தூது விட்டு
தனகரா னிடமே சேர்ந்து தாளடி பணிந்து நின்றான். (68)

சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சேதியை யனுப்பி விட்டேன் சேனையைக் கூட்டத் தேவா
ஏதுக்கும் கவலை வேண்டாம் இரண்டொரு தினமே சேர்வார்
பாதகன் வாழி டத்தைப் பார்த்துமே கூற வந்தான்.
நாதனே யவன்மு கங்கள் நாய்நரி தினவே காண்பீர். (69)

ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

மாதம்நான் குக்குள் ளாக மன்னனே மோசம் செய்த
பாதகற் கொல்லா விட்டால் பரதனைக் காண மாட்டேன்
காதலி யைக்கொண் டுள்ள கண்டகன் தின்று விட்டால்
ஏதுநாம் செய்வோம் பின்னர் எனதுயிர் நிற்ப தில்லை. (70)

தஞ்சமாய் நம்பி வந்த தம்பிலக் மணனும் வாழான்
பஞ்சமி சித்ரை பூர்வம் பரதனும் தாயும் மாள்வார்
நஞ்சதைச் சனகன் உண்டு நமனிடம் சேர்ந்தே தீர்வான்
வஞ்சனை செய்த பாவி வலியேமே லான தையோ. (71)

சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அன்னையைத் தீண்ட அந்த அரக்கனு லாமோ தேவா
ஒன்றுமே கவலை வேண்டாம் ஓடிவந் தோதும் சேனை
இன்றேதான் முழுதும் விட்டு இலங்கையைக் கண்ட போதே
மன்னன்ரா வணனைக் கொன்று மாதாவைச் சேர்ப்பேன் பாதம்.

சேனைகள் சேர வந்தான் செல்வன்கோ தண்ட மேந்தி
வானர ரென்னைக் கண்டு வனத்தினில் தங்கச் செய்து
கானகம் முழுது மோடிக் கண்டகன் நாட்டைக் காண
சேனையில் வலியுள் ளோரைத் தெரிந்தெடுத் திடவே சொன்னான்.

வடதிசை போகச் செய்தான் வானரன் சதவல் லியை
திடங்கொள்சு சேனை மேற்காய்த் தேடவே விடுத்துப் பின்னும்
கொடியவின் தனையும் விட்டான் குன்றொடு கீழ்திக் கோர
அடர்ந்துமே சொல்மு டிக்கும் அநுமனைத் தெற்கே விட்டான்.

### ஸ்ரீராமன் செயல்.

ஐயனும் மனம்ம கிழ்ந்து அனுமானுக் குறிதி கூறி
கையில்மோ திரங்கொ டுத்துக் கண்டகன் வாழி டத்தை
வையகம் முழுதும் தேடி வைதேகி யைக்கண் டுற்றால்
வெய்யனு டேகி னலும் விடாமலே கொல்வே னென்றான். (75)

சேனைகள் துணையும் கூட்டிச் செகமெலாம் தேட வேகான்
வானரன் கட்டளை யீய வனமுழு திருள ஓடி
மானவன் லக்ம ணன்றான் மன்னன்ரா வணனின் நாட்டில்
சானகி கண்டு வந்தாற் சங்கையு மொழியு மென்றான். (76)

மாங்களு முறிந்து வீழ மாருதி பதம்ப ணிந்து
வரதனின் மனம்க ளிக்க வானவர் மலரும் தூவ
கரிகளும் சிதறி யோடக் கானிலே சேனை போகக்
கிரிகளு மதிர வெங்கும் கிளம்பினன் ராம தூதன். (77)

கானக முழுதும் தேடிக் காணுமல் சேனை மீள
வானவ ரேற்றும் ஈசன் வாடியே மரம்போல் நிற்கக்
தீனத யாளா கேளும் தென்திசை சென்ற சேனை
ஈனனைக் கண்டே சேர்வார் ஏதுக்குக் கவலை யென்றான். (78)

### தென்திசைச் சேனைகள் செயல்.

மண்ணுறக் கானம் ஓட மலையான கற்கள் சிந்த
மண்சிதர் வனமும் சூழ மரமெலா மொடியத் தாக்க
மண் ணுதிர் சேனை தள்ள மலையெலாம் பறந்து வீழ
மண்தரைக் குகைக ளெங்கும் மாதாவைத் தேடிச் சென்றார். (79)

### அனுமான் ஐடாதூரனைக் கொல்வது.

கருவண்டே மேலாய்க் காணக் கண்டகன் பயமே கொள்ள
இருண்டிடு வனம்ப டுத்து எதிர்வந்த பேரைக் கொல்ல
புரண்டுமே யிருப்பான் றன்னைப் புண்ணியன் அனுமான் கண்டு
துரிதமாய் வாலிற் கட்டித் துட்டனை யிழுத்தே சென்றான். (80)

வனமுழு தும்வி டாமல் வளையவே யிழுத் திழுத்து
கனமான கற்பா றைமேல் கண்டனைக் கொண்டு மோதி
இனமாக வேகமீகி இராக்கதன் றன்னைக் கொன்று
மனம்போல வேகமாகி மலைவிந்த சிகிரி கண்டார். (81)

பரும்பான இனமே யாகிப் பார்க்கவே விந்த மாக
கரும்பான சோலை கண்டு கரிபோல வதைய ழித்து [கொல்ல
துரும்பாய்லங் கோனை யெண்ணித் தோன்றினு லெதிர்த்துக்
விரும்பியே பலவுங் கையால் வேரொடு முறித்துக் கொண்டார். ()

வனமாகி வாழ்வி லங்கை வானரர் அடித்துக் கொல்ல
கனமாம்பாம் பினையும் பற்றிக் கற்பாறை சுழற்றி மோத
கனல்கொடு சிலர்க ளந்தக் கானகம் முழுதும் தீய்க்க
அனுமானங் கதனும் ஓடி அங்குள்ள குகையைக் கண்டார். (83)

வேகமாய்க் குகைநு ழைந்து வேரெலாம் குனிந்து நோக்க
தேகமும் நகர்ந்து சில்லோர் தீரமாய்க் கற்கள் பேர்க்க
ஏகமாய்ச் சிலரும் சேர்ந்து இருள்சூழ்ந்த இடமே தேடிச்
சோகமே யுளத்திற் கொண்டு சுறுக்காக வெளியே வந்தார். (84)

காலெட்டாம் கடல்வண் டாகக் கற்களை யெலாந்து ளைத்து
வாலிட்டுப் பேர்த்துத் தேடி வைதேகி தன்னைக் காணார்
நூலிட்ட மணியா யங்கு நோற்றுஒன் றாகச் சேர்ந்து
மேலெட்டி முழுதும் தேடி மீளவும் காணார் சோர்ந்தார். (85)

அனுமானுங் கதனும் வீரர் அயோத்திச் செல்வனையே போற்றி
வனங்களின் குகைக ளெல்லாம் வரிசையாத் தேடிக் காணார்
மனம்போலப் பின்னும் ஓடி மலைகளைப் பார்த்தும் காணார்
இனியேது செய்வோ மென்று ஏங்கியே மரம்போல் நின்றார். ()

*பிலத்துவாரம் காண்பது.

பிலத்துவா ரத்தைக் கண்டு பெரியசாம் புவற்குக் காட்டி
பலவானும் அனுமான் சற்றும் பயம்கொள்ளா துள்ளே சென்று
வலியோடே யொருவர்க் கோர்வர் வாலையும் பிடித்துக் கொண்டு
மலையுர கம்போல் மெள்ள மன்னனைத் துதித்தே சென்றார். (87)

---

*மயன் பிரமாவினுல் வரம்பெற்று நிர்மித்தது ஹேமை 'ஓரப்சரசு' என்கிற பெண் மீது காதல் கொண்டதை அறிந்த இந்திரன் கோபம் கொண்டு வஜ்ராயுதத்தைப் பிரயோகம் செய்து அடிக்க ஓடிவிட்டான். பிறகு இதில் ஹேமை வாசம் செய்தாள்.

**சுயம் பிரபையைக் கண்டு அனுமான் சாம்புவனுக்குச் சொல்வது.**

இவரே நம்ரகுமா தன்பெண் இவரேயென் தாயு மாகும்
தவவேடம் கொண்டா ளேயோ தசரதன் மருகி தானும்
புவனமும் ஏற்றும் தாயின் பொற்பாத கமலம் போற்றி
பவம் செய்த பேயன் றன்னைப் பார்மீது தள்வோ மென்றான் ()

அனுமானு மருகே சென்று ஐயனின் நாமம் கூற
வனரனை யுற்று நோக்கி வந்ததைத் தெரிந்து கொண்டு
சனகன் பெண் ணுளின் சேதி சகலமும் பேசி யங்கு
கனமான பிலமும் வாழ்ந்த கதையையும் சொலிமு டித்தாள். (89)

சுயம்பிர பைசொல் லைத்தான் சுந்தர வீரன் கேட்டுத்
தயவொடு மவளை வேண்டத் தாண்டவே குகையை விட்டு
மயனது பிலமும் தப்பும் மார்க்கத்தை யெடுத்துக் கூற
சயசய வெனவே சொல்லிச் சகலரும் வெளிவந் தாரே. (90)

அழகாக விளங்கிக் கானம் அடர்ந்திருப் பதையும் கண்டு
வழியாகச் சேனை சென்று வைதேகி யைக்கா ணாது
செழித்துமே வளர்ந்து நிற்கும் சிறந்திடு வனத்தை யெல்லாம்
அழித்துமே வேக மாகி ஆழ்ந்தகா வேரி கண்டார். (91)

நதியாம்கா வேரி சார்பில் நறுமலர் சிலர்கள் கொய்ய
முதலையைச் சிலர்பி டிக்க மூளைகள் சிதற டிக்க
உதிரமே சலமாய் ஓட ஒன்றுக்கொன் றுகந்து பாய
எதிரான கரையைத் தாவி எங்குந்தங் காமற் சென்றார். (92)

வனமாம்ப லாவைக் கண்டு வானரர் உள்நு ழைந்து
மனம்போல முழுதும் சுற்றி மரங்களை மண்ணிற் றள்ளி
கனமான பற்கள் கொண்டு காயினிற் றோலைப் போக்கி
கனியையும் புசிக்க வங்கு காகுத்தன் தனைநி னைத்து. (93)

வனமுள்ள கனிக ளெல்லாம் வாரியே நதியெ றிந்து
கனமான மரங்க டன்னைக் கரங்களிற் றுங்கிக் கொண்டு
வனமதிற் பிரிந்து தேடி வாதன்றே விபைக்கா ணுமல்
மனதிலே நாமம் போற்றி வானரர் பின்னும் போனார். (94)

* ஹேமைக்குத் தோழி, மேருசாவர்ணியின் புத்திரி.

மார்களி தையும் மாசி மலைக்குகை யெல்லாம் தேடி
கார்கடல் வண்ணன் மாதைக் காணமற் சேனை யங்கு
சோர்ந்துமண் மேற்ப டுத்துச் சோகத்தால் நித்ரை செய்து
பார்க்கவே தென்கோ டிக்குப் பாவியை நொந்து சென்றார். (95)

பங்குனி பூர்வ பக்கம் பகல்திரி யோதே சியில்
அங்கதன் அனுமான் மற்றம் அன்னையைக் காணார் வாடி
சங்கையே மனத்திற் கொண்டு சகலரும் அங்கு தேங்கி
புங்கனைக் காணு தாவி போக்கிட அனுமான் நின்றான். (96)

அங்கதன் அனுமானுக்குச் சொல்வது.

புண்ணியன் சடாயு வைப்போல் புவியில்வா ழாது மாள
எண்ணந்தான் திடமாய்க் கொண்டேன் இனிமேலே பயனே யில்லை
அண்ணசுக் ரீவ னுக்குச் அன்னையைக் காணு தாலே
மண்ணைஅங் கதன்வெ றுத்து மாண்டதாய்க் கூறு வீரே. (97)

அனுமான் அங்கதனுக்குச் சொல்வது.

அலைகடல் வீழ முன்பே அனுமானும் துணிந்து விட்டான்
மலைபோல நம்பி விட்ட மன்னவன் முகத்தில் நேரேன்
தலைமகன் தன்னை நீங்கித் தாரையும் மண்மேல் வாழாள்
அலையாம லாழி கொண்டு அண்ண லுக் கோது வீரே (98)

சாம்புவான் அனுமானுக்குச் சொல்வது.

தள்ளாதான் தன்னை விட்டுத் தகுமோநீர் இறக்கச் சற்றும்
எள்ளவும் பிரிய மில்லை இனிமேலே மண்ணில் வாழ
கள்ளனைக் கண்டு பற்றிக் காகுத்தன் துயரம் போக்காச்
சுள்ளிக்கும் இணையில் லாத சுமையாக நின்றே னல்லோ. (99)

சம்பாதி யாவும் கேட்டு சடாயுவுக் கிரங்கிச் சீறி
தம்பியைக் கொன்றோன் றன்னைத் தருணமே தெரிந்து கொள்ள
கம்பீரக் குகையில் நின்று காகுத்தன் படையை நோக்கி
எம்பரி னிருந்து கூவி இவ்விடம் வந்தீர் என்றான். (100)

காகுத்தன் சேனை யந்தக் கம்பீரக் குரலைக் கேட்டு
தேகமும் துடிது டித்துத் திசைகள்நான் கையும் நோக்கி
மேகம்போற் கார்நி றத்தாய் மேலாய்ச்சம் பாதி கண்டு
நாகம்போற் கிளம்பி யங்கு நாடினார் முன்னல் மாதோ. (101)

## * சம்பாதி சேனைகளுக்குச் சொல்வது.

பின்னுன என்சடாயு பிராணனை யெவரால் விட்டான்
இன்னமும் எனது சீவன் இருப்பது மேது செய்ய
மன்னவன் தசர தன்றன் மகவான ராம னீர்
என்னவா யறிவீ ரையா எனக்கேசொல் வீரிப் போதே (102)

நடந்ததை யெல்லாம் கூற நாட்டமாய் விடாது கேட்டுத்
திடமான மனமும் கொண்டு தேவன்றன் பாதம் போற்றி
கொடியவன் நாட்டைக் காண குன்றான மகேந்த்ரம் காட்டி
அடர்ந்துரா மன்நா மப்பேர் ஆற்றுவீர் எனவே சொன்னன். ()

நாமரா மப்பேர் சேனை ரம்யமா யெடுத்துக் கூற
சேமமா யிறகு கொண்டு செல்வனைத் துதித்துப் போக
நாமனின் மகிமை கண்டு நாற்புறம் சுற்றிப் பார்த்து
காமப்பேய் வாழும் லங்கை காணவே வேக மானூர். (104)

மலைமகேந் திரமும் கண்டு மாருதி படைக்குக் காட்ட
அலைகடல் தாண்டிச் சென்று அரக்கனைக் கொல்வோ மென்றார்
இலைகளு முதிர வாயு எங்கணும் சிதறி போட
மலையினிற் சிகரம் சாய மரங்களு முறிந்த தம்மா (105)

நாற்றிசை சுற்றிப் பார்த்து நாமத்தை துதிபு ரிந்து
சுற்றனை வேதை தீர்க்கும் கோவிந்தன் மலைமு டியாய்
காற்றுமே அசையா சற்றும் கருத்தொடு ஆழ்ந்து நோக்கத்
தோற்றவே லங்கை நாடித் துள்ளினர் சேனை மாதோ. (106)

அங்கதன் நீலன் தாண்ட அவரவர் பலமும் கூறி
எங்களா லியலா தென்று ஏங்கியே மரம்போல் நிற்க
புங்கன தாழி கொண்ட புண்ணியன் நகையும் கொள்ள
அங்கனம் சாம்பு வந்தன் அனுமனை நோக்கிச் சொல்வான். (107)

---

* ஜடாயு தமையன், இருவரும் சூரியமண்டல வரையில் பறந்துசென்று சிறகுகள் தீய்ந்து வீழ்ந்து கடலோரத்தில் இருந்தவன். ராமநாமத்தின் மகிமையால் சிறகு வளர்ந்து சென்றவன்.

### சாம்புவான் அனுமானுக்குச் சொல்வது.

அலைகடல் தாண்டிச் சென்று அரக்கன்வாழ் நாட்டைக் காண
பலவானு மொருவன் நீயே பாலரா லாமோ கண்டாய்
நலமேசெய் யாது போனால் நாதனும் ராவ ணன்றன்
தலைகள்பத் தையும் கொய்து தாயினை மீட்ப ரோதான். (108)

அஞ்சிலே ஒன்றாய் வந்து அனுமந்த வீர னென்று
அஞ்சிலே ஒன்றைத் தாவி அண்டர்கள் புகழ்ந்த சீலா
அஞ்சிலே ஒன்றைத் தாவி அன்னையைத் துதித்து வந்தால்
அஞ்சனு மகனென் றன்னை ஐயனும் மதிப்பா னன்றோ. (109)

### அனுமரின் சாம்புவானுக்குச் சொல்வது.

கடலையும் கடந்து செல்வேன் கண்டகன் றனையெ திர்ப்பேன்
திடமாக அவனைக் கட்டித் திரும்பவும் கொண்டு சேர்ப்பேன்
சடைமுடி கொண்டு வந்த தசரதன் சேயின் தேவி
இடமே யில்லாது விட்டால் ஈனனைக் கொன்று மாள்வேன். (110)

### சாம்புவான் அனுமானுக்குச் சொல்வது.

அப்பனே வாயு சேயே அன்னைக்கோர் அபாயம் நேரா
தப்பாமல் கண்டு மீள்வாய் தசமுகன் வாழும் நாட்டில்
தப்பிதம் செயாம லங்கு தாயைச்சே வித்து வந்தால்
ஒப்பில்லாப் புகழைப் பெற்று உலகினில் வாழ்வா யன்றோ. (111)

### கிஷ்கிந்தா காண்டம் முற்றிற்று.



ஸ்ரீராமஜெயம்.



# சுந்தர காண்டம்

## அனுமான் செயல் வேறு.

மலையதிரக் கல்சி தற மாருதியும் வளர்ந் தோங்கி
தலையதிரப் படை துள்ளத் தாரைமகன் கடல் நோக்க
இலையுதிர மரம் தாழ இராகவனின் பதம் போற்ற
அலைசிதற விண்ண டுங்க அனுமானும் பாய்ந் தானே. (1)

நீர்கிழிய மீன் சிதற நேராக நுரை யோட
வேர்வழிய *மைனாகம் வீரன்தென் திசை நோக்க
ஊரழிய மேற்கி ளம்ப உரகமென †லங்கையிற் போய்
பாரொழியச் சிம்மி கையைப் பார்த்தி ருந்தான் மாருதியே. (2)

---

* இமாசல மன்னன் புத்திரன். மலைகள் சிறகுகளை எல்லாம் இந்திரன் சேதித்து வருகையில் வாயுவினுதவியால் தப்பித் தென்கடலில் இருந்தவன்.

†இலங்கை விசுவகர்மனால் நியமிக்கப்பட்டது. இதுமுதலில் மாலிய வானுக்கும், பின்னர் குபேரனுக்கும் அவனிடமிருந்து இராவணன் அபகரித் தான். இராவணன், கும்பகர்ணன், வீடணன், சூர்ப்பநகை இந்த நால்வரும் இராக்தன் சுகேசன் மகனும் மாலியவந்தனுக்குத் தம்பியான சுமாலியின் புத் திரி கைகசிக்கும் விச்ரவனென்கிற முனிக்கும் பிறந்தவர்கள். இராவணன் மனைவி மந்தோதரி(மய்ன்புத்திரி),கும்பகர்ணன்மனைவி வச்சிரசுவாலை(விரோ சனனுடைய புத்திரி) விபீஷணன் மனைவி சரமை (சைலூஷன் புத்திரி.)

### *இலங்கிணி அனுமானுக்குச் சொல்வது.

காட்டுக் குரங்கே யிப்போதே கால னூரைச் சேர்ப் பேனே
ஆட்டம் எல்லாம் ஏதுக்கு அருகே வந்தால் போதுண்டா
நீட்டம் சொன்ன நாவினையும் நின்றால் அறுப்பேன் நிமிடத்தே
நாட்டுட் போனு லிப்போதே நமனை யெட்டிப் பார்ப்பாயே. (3)

### அனுமான் இலங்கேணிக்குச் சொல்வது—வேறு.

அருணிறை கடவுள் ராம அண்ணலின் தேவி தன்னை
திருட்டனு மெடுத்து வந்தான் தேடியே வந்தே னிங்கு
உரையறி விடுவா யுள்ளே யொறுத்திடிற் கொல்வே னென்றான்
வெருவில ளெதிர்த்தா ளிந்த வீரனு மேலே பாய்ந்தான். (4)

### அனுமான் செயல்.

சிம்மிகை யதிரத் தாக்கி சிறிதும்அஞ் சாது நின்று
எம்மாத்ர மிவளு மென்றே எதிர்த்துமே சுழற்றி மோத
சிம்மம்போல் கர்ச்சனை செய்தாள் சிரசிலே மூளை யோட
கம்பிர மாக நின்ற காகுத்தன் தூதை நோக்கி. (5)

### இலங்கணி செயல்.

குரங்காய்நீ லங்கை சேர்ந்து கொன்றவி ராதி வீரா
அரனோநீ அண்டர் கோனோ அரசன்தா னுனக்கி டோநான்
அரக்கனின் நாட்டை யெல்லாம் அழிக்கவந் தவனே என்று
கரிபோலக் கதறி யங்கு கண்டகி யுயிரை விட்டாள். (6)

மலைபோல வீழ்ந்தா டன்னை மாருதி நகைத்துக் கண்டு
பலியாக் முதலா யெண்ணிப் பலவானும் உள் நுழைந்து
வலிகொண்ட அரக்கர் வாழும் மனையெல்லாம் தேடித் தேடி
மலைபோலப் படுத்த பேடை மன்னவ னிடமே சேர்ந்தான். (7)

### அனுமான் செயல்.

மாணிக்கம் வாய்த்த குன்றோ மதிலோம ரகத மோடு
ஆணிமுத் துச்சிற் பம்மோ அழகாக வாய்த்த மேடை
வாணிவாழ் லோகந் தானோ வானுல கும்ச டாமோ
பாணம்போல் வந்த தோராப் பார்ப்பதே சௌனம திந்தான். (8)

---

*இலங்கையின் வடவாசலைக் காத்து நின்றவள்.

மன்னன்ரா வணனைக் கண்டு மாருதி யருகிற் சென்று
அன்னையை யெடுத்து வந்த அரக்கனு மிவன்தா னல்லோ
முன்னால்மா தாவைக் கண்டு மோசம்செய் யிவனை நானும்
பின்னாகக் கொல்வோ மென்று பெரியமா ளிகையிற் சேர்ந்தான். ()

*கும்பனைக் கண்டு தூதன் குன்றேவென் றையுற் றங்கு
எம்மாத்ர மிவன்தா னந்த இராமனுக் கெனவே தாண்ட
சிம்மம்போல் விடுகும் மூச்சில் சிக்குமுக் காடி நின்று
கம்பீரன் அஞ்சான் துள்ளிக் காணவே அன்னையைச் சென்றான். ()

கண்டுவீ டணனை நன்கு கருணையா யுற்று நோக்கி
புண்ணியன் எவனோ வென்னப் புகழ்ந்துமே லாகச் சென்று
மண்டப மளிகை தேடி மாதாவை யெங்கும் காணான்
மண்மீது படுத்தே சோர்ந்து மனதினில் துயரம் கொண்டு. (11)

## அனுமான் செயல்.

அங்கந்தான் துடிக்கு தையோ அன்னையைக்கா ணோமிங்கு
எங்குதான் வைத்தான் பாவி இடமுமே தெரிய வில்லை
திங்களும் மூன்ற லைந்தும் திரைகடல் தாண்டி வந்தும்
சங்கையே வாய்த்த தெற்குச் சண்டாள னையென் செய்வேன். ()

கொடும்பாவி ராவ ணன்றான் கூசாது தின்றா னேவிக்
கொடுமைக்கு ஏது செய்வேன் கோதண்ட னருள்தா னேதோ
கடல்சூழ லங்கை யோடு கண்டக னிருப்ப தேனோ
துடிதுடித் திடவே கொன்று துன்பத்தை யொழிப்பே னிப்போ.

அன்னையே ஏது செய்வேன் அரக்கன்பாற் காணே மென்று
என்னமாய்த் துணிந்து சொல்வேன் ரகுநாதன் முன்னி லேயோ
மன்னிடம் சொலவே வந்த மாருதி யிறந்தா னென்று
பின்னாக வந்த சேனை பிரியவிட் டதுவே பாவம். (14)

கண்டுமே வருவா னென்று காகுத்தன் உயர்வில் லேந்தி
எண்ணாத தெல்லா மெண்ணி எதிர்பார்த்தே யிருப்பா ரையோ
புண்ணியன் இளையான் தன்னைப் போகவே யனுப்பா விட்டால்
கண்யமாய் வாழ்வா யல்லோ கலங்குதே யுள்ள மம்மா. (15)

*கும்பகர்ணன்.

பாவியே னேவி னிங்கு பதட்டமாய் ஆழி கொண்டு
ஆவலாய் வந்தேன் மிக்க அலைகடல் தாண்டி யையோ
பாவம்செய் அரக்கன் நாட்டைப் பந்துபோற் கரத்தி லேந்தி
தேவன்பாற் சேர்த்த போதும் தேவியை காணப் போமோ. (16)

அன்னையே யினிமேல் மெய்யாய் ஐயனும் மண்மேல் வாழான்
பின்னுகை வந்த வீரன் பிராணனை விடுவா னல்லோ
மன்னன்சுக் ரீவன் வாழான் மாருதி யிங்கே மாள்வான்
இன்னமும் லங்கை தானே இருப்பது மறியே னம்மா. (17)

சத்ருக்கன் பரதன் மாள்வார் சனகனு முயிர்வெ றுப்பான்
மெத்தநாள் தவத்தைச் செய்தோர் மெய்யாக வன்றே வீவார்
இத்திசை வந்த சேனை இராகவன் தன்னைக் காணார்
சத்திய சீல னுக்குச் சார்ந்ததே துன்பம் ஐயோ. (18)

அங்கதன் மாண்ட கேட்டால் ஆவியில் வாழாள் தாரை
பங்கம்செய் பாவி யின்றன் பலமே மேலான தையோ
மங்கள மாய்வாழ் வெண்ணி மகளையும் கெடுத்த கைகை
அங்கன மரசைப் பெற்று அயோத்தியை யாள்வா ளோதான். (19)

அரக்கரை யெல்லாம் வாரி அலைகட லெறிந்து விட்டு
மரவுரி கொண்டு வந்த மன்னனைக் காணு மல்இவ்
வுரைகடல் விழுந்து நானும் உயிரையே விடுவே னென்னி
கரிபோல அசோக காவு வேறுள காதிற் கேட்டான் (20)

சிறுமையா யுற்றுக் கேட்டுச் சிலநேரம் அங்கு தங்கி
சிறிதுமஞ் சாம லின்று சேர்வேனே யசோக கானம்
பறக்கும்புட் போலத் தாவிப் பலவானு மரக்கி னைமேல்
மறப்புலி போலே ஏறி மாதாவைக் காணச் சென்றான் (21)

தேடினான் அசோக காவு தேவர்க ளேற்றும் தாயை
ஆடினான் ஆனந் தம்கொண் டன்னையை அனுமான் கண்டான்
ஓடினான் இருளி லங்கு ஓர்கிளை தாவி நின்று
வாடினான் ராம தூதன் வைதேகி கோலங் காண (22)

ஜானகி செயல்.

விழுதலும் விம்மல் நிற்றல் வேர்த்தல்வா னத்தை நோக்கல்
தொழுதலும் வாடிக் குந்தல் துடித்தல்சோர்ந் தேப டுத்தல்
அழுதலும் தம்பி என்னல் அலைதல்பே யன்செய் கையை
பழிதல்கை யைமு றித்தல் பார்ப்பேனே ராமா என்னும். (23)

அனுமான் செயல்.

வாடுதல் உற்று நோக்கல் வணங்கல்கை மாறல் மாழ்கல்
ஆடுதல் கிளைமு றித்தல் அசையாது சற்று குந்தல்
நாடுதல் அன்னை செய்கை நாகம்போற் சீறி நிற்றல்
பாடுதல் ராம நாமம் பார்த்துப்பார்த் துப்ப துங்கும். (24)

இராவணன் அசோகவனம் வந்து சீதைக்குச் சொல்வது.

அலைவளர் லங்கை சேர அயோத்திச்சேய் தன்னு லாகா
நலம்வளர் பெற்று வாழாய் நமனூரைச் சேர வேண்டாம்
தலைவளர் பத்தா லும்உன் தாளேனும் பணிய நின்றேன்
சிலைவளர் தன்னைப் போல சீதையே யழகோ வாழ்தல் (25)

சீதை இராவணனுக்குச் சொல்வது.

தாடகை தனையொ றுத்த தசரதச் செல்வன் தானும்
நாடினல் துரும்பே கேளு நாயாக மதித்துக் கொல்வான்
கோடியாம் தவங்க ளெல்லாம் கோதண்டன் தன்னுற் றுழாய்
தேடியே நிற்கும் தாவில் தேவியை விடுத்து வாழ்வாய். (26)

கழுதையும் மணமோ ராது காக்கையு மினிப்போ ராது
கழுகது கருணை தேரா கசடனும் நீதி காணுன்
செழிமைசெல் லறிய மாட்டா செறுக்கது சாந்த மோரா
உழைவினைப் பாவி தேரான் உள்ளத்தை யறியாய் பேயா (27)

துள்ளவே அரக்கன் மெத்தத் தொழுது உத் தமியைப் போற்ற
கள்ளன்போல் தலைவ ணங்கிக் கண்டகன் லங்கை போக
கொள்ளிவாய்ப் பூத தூதன் கொல்லவே யெழுந்து நின்று
தள்ளுவோம் பாவி யைப்பின் தாயைக்கண் டெனம இத்தான். ()

### ஜானகி திரிசடைக்குச் சொல்வது.

சனகனின் மகளாய்த் தோன்றிச் சகலநற் சுகமும் பெற்று
வனமதில் வாழ வந்தால் வஞ்சகன் கையிற் சிக்கி
கனிவிலாக் காலன் போன்ற கசடனாற் கொடுமை யெய்த
எனதரு மாமி கைகை இன்பமே விடுத்த தல்லோ. (29)

பிறந்தது போதும் தாயே பெண்ணாக வந்து பூவில்
இறப்பதே நலமே யாகும் என்றாலே பொறுக்க வேலா
துறவியின் யாகம் காக்கத் துட்டதா டகையைக் கொன்றோன்
அறிந்திடில் வராதி ராரே அலையுதே யுள்ள மையோ. (30)

கவசகுண் டலமு மென்னக் கையிற்கோ தண்ட மென்ன
சிவனது வில்மு றித்த சிறந்ததோள் வலியு மென்ன
தவசியின் பெண்ணைக் காத்துத் தரணியிற் புகழே பெற்ற
பவளவாய் கமலக் கண்ணன் பாதமும் பணிவ தென்றோ. (31)

கடலினுள் லங்கை யென்று காகுத்தன் அறிந்தி ருந்தால்
திடமாக யிங்கு வந்து திருடனைக் கொன்று மீட்பார்
இடத்தையே கண்டு சேர எங்குமே தேடிச் சோர்ந்து
அடர்ந்தகா டாகக் காண அயோத்தியே திரும்பி னாரோ (32)

இடதுகண் இடது தோளும் இதோபாரு எனக்குத் தாயே
துடிக்குதே யேது செய்வேன் தோடந்தான் சாரு மோசொல்
பிடிக்கவே மிதிலை வில்லைப் பேதைக்கு இந்த வாறே
துடித்ததே யெனக்கிப் போது தோணுவ சொல்லு வாயே (33)

கிஞ்சித்தும் இரக்க மின்றிக் கெடுவானும் வனத்தி லன்று
அஞ்சாமலெ டுத்து வந்து அசோகவிவ் வனத்தில் வைத்தான்
குஞ்சுடன் அரக்கன் நாட்டைக் கோதண்டம் கரம்பி டித்துப்
பஞ்சுபோல் பறக்க டிக்கப் பார்ப்பது நாளெந் நாளோ. (34)

### திரிசடை ஜானகிக்குக் கனவைச் சொல்வது

ராமன்றன் நாம தூதன் ராவணன் ஊர்பு குந்து
சேமத்தைக் கூறித் தாயே சேவித்து ஆழி தந்து
தாமத மில்லா தம்மா தம்பியோ டிங்கு வந்து
தீம்பே யனையுங் கொல்வ கருணையாய்ச் சொல்லக் கண்டேன்.

முத்துப்பல் லக்கி லேறி முதல்வனு மகிழ்வா யிங்கு
சித்திரப் புதுமை போலோர் சிறுவனு மாகச் சேர்ந்து
பத்துச்சென் னியனைக் கண்டு பயமின்றி முன்னே நிற்க
எத்திக்கும் புகழ்ந்து போற்று மிராவணன் விழக்கண் டேனே.

கொண்டுவந் திட்ட பாவி கோரமா யெருக்கஞ் சூட்டி
கண்டுஓர் கறுத்தப் பெண்ணுள் கயிற்றினாற் கட்டி யீர்க்க
எண்ணையில் முழுகிச் சேனை இடிபோலக் கதறி யோட
மண்டலி பாரில் வீழ்ந்து மன்னற்காய்ப் புலம்பக் கண்டேன். (37)

இந்திர சித்தைக் கட்டி இளம்பெண்க ளிழுத்துக் கொண்டு
தென்திசை யாகச் செல்லத் தேவர்கள் நகைக்கக் கண்டேன்
சுந்தரன் தம்பி யோடே சூரனை யெதிர்த்துக் கொன்று
உன்சிறை யொழிப்பா ரம்மா ஒன்றுக்கும் கவலை வேண்டாம். ()

இட்ச்வாகு குலத்தி ராமன் இலங்கைமன் னவனைக் கொன்று
அட்டதிக் பால ரேற்ற அண்டர்பூ மாரி பெய்ய
கட்டம்தீர்ந் துமது கையைக் கனிவுடன் பிடித்துத் தெய்வ
புட்பக விமான மேறிப் போகவும் கனாக்கண் டேனே. (39)

ஜானகி திரிசடைக்குச் சொல்வது.

சிம்மமாய்க் கொள்வார் சித்தர் சீராம னுமம் கேட்டால்
நம்பின இறையை யேற்ற நலமேசெய் யாவிட் டாலும்
கம்பிர மாக வீரன் கத்தபம் போலே கத்தும்
கும்பலை யொழிக்க விங்கு குணவானும் வருவ தென்றே. (40)

அனுமான் செயல்.

கண்யமாய் அனுமா னங்கு காகுத்தன் மாதைக் காண
கண்டகர் சோகம் கொள்ளக் கருதிய வாறே செய்ய
மண்மீது படுத்துச் சோர்ந்து மரம்போல இருப்பக் கண்ட
புண்யனும் கிளையை விட்டுப் பொறுமையாய் மெள்ளச் சென்றான்

அனுமான் ஜானகிக்குச் சொல்வது.

நாமரா மன்தூ தன்நான் ரக்ஷிக்க வென்னைப் பாரும்
சேமமும் சொல்ல விங்கு சிறுவன்வந் தேன்கே ளம்மா
காமப்பே யனையிப் போதே காலனூர் சேர்ப்பே னம்மா
நாமமும் அனுமா னம்மா நாதனும் வருவார் பின்னே. (42)

தென்கடல் தாண்டி யம்மா தேடிவந் தேனே தாயே
இன்னநற் குரங்கோ சொல்வாய் சிறிதுமே ஐயம் வேண்டாம்
இன்னமும் கவலை யேனோ எண்ணந்தா னேதோ சொல்வாய்
இன்றே தான் கொண்டு சேர்ப்பேன் ரகுநாதன் பாத மம்மா. (43)

ஜானகி அனுமானுக்குச் சொல்வது.

அரக்கன்செய் மாய மீதோ ஐயன்றான் விட்ட தூதோ
இரவினி லிங்கு வந்து என்முன்னே நிற்ப தேது
மரவுரி தரித்து வந்த மன்னரை யெங்க ணோர்வாய்
தெரிந்துசொன் னாலெ னக்குத் திடமாக நம்பு வேனே. (44)

அனுமான் ஜானகிக்குச் சொல்வது.

சடாயுதன் னைக்கண் டம்மா சங்கையே கொண்டு கானம்
விடாமலே தேடிப் பம்பை வீரர்கள் சேர்ந்தா ரம்மா
அடாதுசெய் பேயன் பாவி அடவியிற் காண நானும்
படாதபா டும்பட் டம்மா பாதம்கண் டேனிங் கம்மா. (45)

வனத்திலே வந்தார் சத்ரு வாலியின் னோனைக் காத்தார்
இனத்தையும் விடவே தேட இலங்கையே காண நாடி
மனம்போல வெங்கும் ஓடி மாதாவைக் காண விங்கே
கனத்தைப்பெற் றேயின் றம்மா கடைத்தேறப் பாரும் தாயே.(46)

தம்பியும் தளர்ந்தங் கம்மா தவிக்கக்கண் டுள்ளம் வாடி
உம்பரா யினுமே கொல்ல ஓடிவந் தேன்கே ளம்மா
சம்பாதி வார்த்தை கேட்டு சமுத்திரம் தன்னைத் தாண்டி
உம்மைச் சேவித்தே னிங்கு உண்மையா யிதுநம் பம்மா. (47)

மன்னன்மண் ணிற்ப டுத்து மனமுரு கிடவங் கேதான்
துன்பத்தால் வாட இங்கு துடிக்குதே யுள்ள மிப்போ
பின்னான்சொல் லைக்கா னத்திற் பிரியமாய்க் கேளா தாலே
பன்றிகள் வாழி டத்திற் படுக்கப்பார்த் ததுவே பாவம். (48)

மன்னனை யெதிர்த்திப் போது மண்ணிற்சாய்ப் பேனே நம்பு
இன்னமும் லங்கை தானு மிருப்பதோ இங்கு சொல்லாய்
பின்னாக வந்த சேனை பெருங்கரை நின்றா ரம்மா
அன்னையே கண்ணாற் பாரும் அடியேன்உன் சேயு மாமே (49)

கண்டகன் தன்னைக் கட்டிக் கர்த்தன்முன் சேர்ப்பே னம்மா
அண்டரோ துணைவந் தாலும் அனுமானு மஞ்சேன் கேளு
வண்டுறு தலைகள் பத்தும் வருத்தமேன் கிள்ளு வேனே
தொண்டனின் செய்லைப் பாரும் துன்பம்கொண் டிடவே வேண்டாம்.

துரும்புக்கு அஞ்சி யேனோ துடிப்பதிங் குரைப்பா யம்மா
ஒருமுகூர்த் தத்திற் பாவி யுருளுவான் தலைகள் பத்தும்
நெருப்பினைக் கொண்டு மிப்போ நின்றிலங் கையினைச் சுட்டுப்
பெருமையைப் பெற்று வாழப் பிள்ளைநான் செய்வே னம்மா. ()

காவலில் வைக்க நொந்து கலங்குதே யுள்ளம் இப்போ
பாவிகள் தன்னை யிங்கு பாரிலே மோதிக் கொல்வேன்
தேவரீர் கோலங் காண தீதுநான் ஏது செய்தேன்
ஆவிவி டாமல் இன்னும் அனுமான்ஏன் வாழ்வ தம்மா. (52)

ஜானகி அனுமானுக்குச் சொல்வது.

தசரதச் செல்வன் பின்னால் தலைவியும் தம்பி வந்தார்
நிசமென வுனது வார்த்தை நினைக்கவு மிடமே யில்லை
தசமுகன் எடுத்த மட்டும் தருணம்நீ சொல்வா யாகில்
நிசமான தூத னென்று நிலைப்படும் உள்ளம் கண்டாய். (53)

அனுமான் செயல்.

ஐயனும் வனத்தில் வந்தே யரக்கனு மெடுத்த மட்டும்
வையகம் புகழும் வீரன் வைதேகிக் கெடுத்துச் சொல்ல
தெய்வம்போல் வந்தான் என்று தேவியும் சற்று தேற
மெய்யனும் கூறும் யாவும் மீண்டுமே சொலத்து ணிந்தான். (54)

அனுமான் சீதைக்குச் சொல்வது.

செல்வநற் சிறப்பை விட்டுச் சித்திர கூடம் வாழ்நாள்
புல்கொடு கூந்தல் வைக்கப் புண்ணியன் துடையு றங்கக்
கல்லென நகைக்க வங்கு கண்விழி விவரம் கேட்க
மல்லியை நகைத்தாய் கண்டு மன்அடை யாளம் சொன்னார். (55)

அருந்தவம் செய்து பெற்ற ஐயனை அயோத்தி தன்னிற்
பொருந்திவா ழாது விட்டுப் புல்லின்மீ துறங்கும் போது
கருமையாம் புள்ளி யொன்று கன்னத்தில் வைக்க நாதன்
திரும்புமா போலெ ழுந்து திகைத்ததாய்ச் சொல்லச் சொன்னார்.

நலமாக வெடுத்துச் சொல்ல நடந்ததை யெல்லா மங்கு
கலங்கியே அன்னை கேட்டுக் காருத்தன் தனைத்து தித்தாள்
உலகமா தாக ளிக்க உத்தமன் ஆழி யீய
மலர்போல முகமும் சேர மனம்போல்சே வித்தான் தூதன். (57)

முத்திரை யாழி பெற்று முகத்தின்மே லணிந்து கொண்டு
மெத்தனுள் தவத்தில் வந்த மெய்யனின் பாதம் போற்றி
பத்துறு தலைகள் ராமன் பாணத்துக் கிரையே யென்று
சித்தமும் குளிர்ந்து நின்று சிறுதிரு வடியை நோக்கி. (58)

ஜானகி அனுமானுக்குச் சொல்வது.

அஞ்சனை பெற்ற சேயே அலைகடல் தாண்டி யிங்கு
அஞ்சாதெப் படிநீ வந்தாய் அப்பனே நினைக்க வலைதை
நெஞ்சம்தான் துடிக்கு திப்போ நிலைகொள்ள வில்லைச் சித்தம்
பஞ்சுபோல் பறந்து வந்த பலத்தையும் கூறு வாயே. (59)

அனுமான் ஜானகிக்குச் சொல்வது.

வாயுவாம் அம்சத் தில்நான் வந்தவா னரனு னலதால்
பாயவே கடலைத் தாவப் பலமிக வெனக்கு முண்டு
பேய்போலே பயமுங் கொள்ளப் பெரியதோர் உருவு கொண்டு
தீயவன் வாழும் லங்கைக் கினையாது வந்து சேர்ந்தேன். (60)

அந்தநல் உருவ மிப்போ அனுமானே காட்டு வாயேல்
சந்தேக மொழியு மென்று சமையமே சீதை சொல்ல
வந்தநல் உருவ மிப்போ வானரன் எடுப்பே னுகில்
சிந்தையும் கலங்கு வீரே சிறுவனைக் காப்பீ ரென்றான். (61)

ஜானகி அனுமானுக்குச் சொல்வது.

அனுமந்தா வதனைக் காட்ட அணுவேனும் பயமும் வேண்டாம்
மனந்தானும் கலங்க மாட்டேன் மகிழ்வே யெடுப்பாய் கண்டாய்
வனமாகி யெடுத்து வந்த வஞ்சன்வந் ததையும் கண்டு
கனமாக வெதிர்த்த போதும் கவலையே கொள்ளே னென்றாள். ()

அனுமான் செயல்.

அடிமிக வுயரத் தாயை அனுமானும் அங்கு நோக்க
உடலும்விண் மேலே யெட்ட உருவமே மலைபோல் நிற்க
குடியற வந்த தாகக் கோதண்டன் தேவி யாரப்
படிதள ரக்கூத் தாடிப் பாதத்தைப் பணிந்தான் தூதன். (63)

ஜானகி செயல்.

அஞ்சனை தவத்தில் வந்த அப்பனே யென்றும் வாழி
மஞ்சுமால் கடலைத் தாண்டும் மகாதீர னேநீ வாழி
நெஞ்சினில் நினைத்த வெல்லாம் நிலையாகப் பெற்று வாழி
வஞ்சகர் தம்மைக் கொல்லும் வலியோடு வாழி வாழி. (64)

பலவானின் சொற்கே ளாமல் பாதகி ஒன்பால் திங்கள்
அலைகிறேன் பேயன் நாட்டில் அநுமந்தா யேது செய்வேன்
மலையாம்தா டகையாள் தன்னை மண்ணிற்றள் ளினவ ரிப்போ
வலியோடே யெதிர்த்து நின்று வைதேகி யைமீட் பாரோ. (65)

அனுமான் ஜானகிக்குச் சொல்வது.

முப்புரம் எரித்தோன் வில்லை முனிவர்முன் னிலையொ டித்து
எப்புரம் புகழும் பெற்ற இராகவன் தூதாய் வந்தேன்
இப்புரம் முழுதும் வாரி இவ்வலை கடலில் சேர்த்து
அப்புர மெடுத்துச் சென்று ஐயன்பாற் சேர்ப்பே னம்மா. (66)

கடலினம் கொண்ட பேயைக் காகுத்தன் எதிர்த்து நின்றால்
முடியினம் கேட்டால் நாளை முன்னுளின் புகழும் போமே
நடையினம் தன்னை யிப்போ நமனூரைச் சேர்க்கா விட்டால்
சடையினம் காத்த ராமன் தாசனென் றெனைச்சொல் லாரே. ()

ஜானகி அனுமானுக்குச் சொல்வது.

பாவிரா வணனைக் கொல்லப் பரமனு லாகா தென்று
தேவியைக் கொணரு மாறு தேடித்தூ திட்ட தாகக்
கேவல மாய்நி னைப்பார் கேட்பவர் மண்மீ தென்று
ஆவிநா னஞ்சு கின்றேன் அறிவனே யெண்ணிப் பாராய் (68)

அன்னையை வணங்கித் தூதன் அடையாளம் தரவே கேட்கத்
தன்சூடா மணியைத் தந்து தசமுகன் தன்னைக் கொன்று
இன்னமுப் பதுதி னத்தில் எந்தனை மீட்கா விட்டால்
அன்றேநா னிறப்ப தாக ஐயனுக் குரைக்கச் சொன்னாள். (69)

அனுமான் ஜானகிக்குச் சொல்வது.

பத்துறு தலையும் தாயே பார்மீது அறுத்துத் தள்ளச்
சத்யசீ லனையும் கொண்டு சாற்றின வாறே செய்வேன்
சித்திரை பூர்வ நவமி சிறப்பாக அயோத்தி சேர்ந்து
எத்திக்கும் புகழ வாழ்வீர் எனக்குமே விடைத வாயே (70)

### ஜானகி அனுமானுக்குச் சொல்வது.

பாரினிற் படர்ந்த புல்லாய்ப் பாவிகள் பிறப்ப தென்று
வீரனே கானம் சொன்ன விளங்கின உண்மை யென்று
கோரமாய் லங்கை வாழும் கொடியரா வணன்தன் னாலே
காரியம் கிடையா தென்று கருத்தில்எந் நாளும் கொள்வாய். (71)

வனமதில் எனது காலின் மன்னரும் படுத்தி ருக்க
வினையாலே *காகா சூரன் வேகமாய்த் தேகம் கொத்த
கனமான கணையை யேவக் கண்டன்று வுலக மோட
புனிதனை யொடுங்கிப் போற்றப் புல்லினால் காத்தல் சொல்வாய்.

சுந்தர லங்கை வந்து சூரனை யெதிர்த்துக் கொன்று
வந்தபோல் நாட்டை விட்டு மன்னரோ டயோத்தி சேர்ந்து
மந்திரம் வாழு மந்த மாமிமற் றோர்க ளோடு
தந்தைதாய் †தங்க ளோடு ‡தம்பியை நான்காண் பேனோ. (73)

### அனுமான் ஜானகிக்குச் சொல்வது.

பருத்தியும் பெருத்த தேபோல் பாவிகள் பெருத்து நின்றார்
நெருப்புறு துளிக்கு முன்னே நீறவர் வாழ மாட்டார்
இருக்கும்ஊர் கேட்ட துந்தான் இளைஞன்அஞ் சாது வந்து
துரும்பாக வெதிர்த்துக் கொன்று துன்பத்தை யொழிப்பா னம்மா. ()

### அனுமான் செயல்.

சேவித்தான் அனையின் பாதம் சிரஞ்சீவி அசோக காவில்
தாவினன் கிளையை யங்கு தரையினில் முறித்தெ றிந்தான்
பாவிநான் லங்கை வந்து பாதகற் கொல்லா விட்டால்
தேவனு மதியான் என்றுதேங்கியே யிருந்தான் மாதோ. (75)

அஞ்சன மகனைக் கொல்ல அரக்கர்க ளோடிச் சார
மிஞ்சுற விடாது கொல்ல மேலதோர் மரமும் தாங்கி
அஞ்சாது மணில்கு தித்து அரக்கருக் காட்டம் காட்டி
பஞ்சுபோற் பறக்க வங்கு பார்மீது மோதிக் கொன்றான். (76)

---

* ஜயந்தன் = (இந்திரன் மகன்).

† ஊர்மிளை, ஜனகன் புத்திரி. மாண்டவி, சுருத கீர்த்தி ஜனகன் தம்பி குசத்துவஜன் புத்திரிகள்.

‡ பானுமந்தன், ஜனகன் புத்திரன்.

ராவணன் தனக்குச் சொல்ல ராட்சதப் படையை அங்கு
ஏவவே விரைவாய் வந்து இராமதூ தனையும் தேட
பார்வரை யெல்லாம் கொல்லப் பலவானு மறைவாய் நின்று
கூவினான் கள்ள மாகக் கூடினார் பிடித்துச் சேர்த்து. (77)

குடுகுடு வெனவே ஓடிக் குதித்துமே கிளையைத் தாங்கி
ஒடியொடி யெனவே யங்கு ஒடித்துமண் மீது தள்ள
பிடிபிடி யெனவே சேனை பின்னாகத் துரத்திப் போக
அடியடி யெனவே யெல்லா அரக்கரைக் கொன்று நின்றான். (78)

*சாரணர்கள் இராவணனுக்குச் சொல்வது.

குட்டியாம் குரங்கொன் றற்றுக் குடிமக ரெல்லாம் கொன்று
அட்டகா சம்செய் கின்ற தசோகநல் வனத்தி லிப்போ
கட்டியே கொண்டு வந்து காலனூர் சேர்க்கா விட்டால்
அட்டியில் லாமல் எங்கை யலைகடற் சேர்க்கும் அன்றே. (79)

இராவணன் இந்திரசித்தனுக்குச் சொல்வது.

மதுபானம் உண்ட சோர்வால் மனம்போல வுரைத்த தாக
மதிக்கிறேன் மகனே யிந்த மடமையை யென்ன சொல்வேன்
மதம்கொள்யா னைவந் தாலும் மண்ணிற்றன் மக்க ளுக்கு
விதியதோ குரங்கால் மாள விளைந்ததைக் கண்டு வாபோ (80)

†இந்திரசித்தன் செயல்.

குடிமகன் கண்சி வக்கக் கோலமாய் வில்லைக் கொண்டு
துடிதுடிக் கத்தே ரேறித் துரிதமாய் வனமும் சேர
அடிமுடி நீக்கிக் கொப்பை அனுமானும் கரம்பி டித்து
திடமாக நிற்கக் கண்டு சிரித்தனன் குலுங்கத் தேகம். (81)

இந்திரசித்தன் அனுமானுக்குச் சொல்வது

யாரடா குரங்கே யிங்கு அலைதாண்டி வந்தா யோடா
ஊரடா யெதுவே யுன்தை ஓதடா யெனக்கிப் போதே
பேரடா அதையு மிப்போ பிழையின்றிச் சொல்லா விட்டால்
பாரடா உன்னை யிப்போ பாணத்தா லடித்துக் கொல்வேன். (82)

*தூதர்கள். †இராவணன் செல்வகுமாரன் இந்திரனை கட்டினவன், அனேக வரங்கள் பெற்றவன்.

அனுமான் இந்திரசித்தனுக்குச் சொல்வது—வேறு.

மனுட னல்ல ரகுராமன் மாலே யுதித்தான் நான்தூதன்
அனுமான் வீரம் நீபாரு அரக்கர் மண்ணில் வீவார்கள்
வினைபால் மாள உம்மன்னன் விமலன் பகையை மேவினனால்
உனக்கும் போகக் காலமதால் ஓடி வந்தா யிங்கேயே. (83)

வேறு

கையில்வில் லைப்பி டித்துக் கண்சுடப் பற்க டித்து
மெய்யனும் தூதைக் கொல்ல மேலாகப் பாணம் ஏவ
ஐயனின் பாதம் போற்றி அனுமானும் பாணம் யாவும்
கையினாற் பிடித்தொ டித்துக் கல்லென நகைத்தான் மாதோ. (84)

அனுமான் செயல்.

பொடிபொடி யாகச் செய்யப் புண்ணியன் ரதத்தை யங்கு
கடிகடித் தெற்ற மற்றோர் கண்டகன் தேரி லேற
மடமட வெனவே யங்கு மரத்தையு முறித்துக் கொண்டு
அடஅட வென்னு முன்னே †அரக்கரைக் கொன்று நின்றான்.(85)

இந்திரசித்தன் செயல்.

அனுமானை யெதிர்த்துப் பாவி அயனின்பா ணத்தாற் கட்ட
வனவாழும் குரங்கை யென்று வலியாகச் சேனை கூடி
கனமான காவ லோடே கனகன்பாற் கொண்டு போக
இனமான தூதைக் கண்டு இதுவோதான் அழித்த தென்றார். ()

இந்திரசித்தன் அனுமானுக்குச் சொல்வது.

துள்ளின குரங்கே யிங்கு துடிதுடித் திடவே யுன்னை
பள்ளத்திற் றள்ளி மேவிப் பழியையுங் கழித்துக் கொள்வேன்
குள்நரிக் கிணையா காஓர் குரங்கேஅஞ் சாம லென்னை
கள்ளனே வென வழைத்த கண்யத்தை யெங்கே விட்டாய். (87)

---

†அனுமானல் மாண்டு போனவர்கள் :—அக்கன் (இராவணன் மகன்) ஜம்புமாலி (பிரகஸ்தன் மகன்), யூபாக்ஷன், (தயித்தியர்களி லொருவன் இராவணனுக்கு மந்திரியாய் யிருந்தவன்), பஞ்ச சேனபதிகள், கிங்கரர்கள் முதலானோர்கள்.

அனுமான் இந்திரசித்தனுக்குச் சொல்வது.

வானமே விழுந்த போதும் வஞ்சகா லங்கை மாய்த்த
வானரன் அஞ்சு மென்று மனதிலே நினைக்க வேண்டாம்
போனவர் இடமே யுன்னைப் பொருந்தியே வாழச் செய்வேன்
சேனையங் கிருப்ப தாலே சேரயிப் படியே நின்றேன். (88)

பலங்கொண்ட மட்டும் பற்றிப் பாதகர் இழுத்துப் போக
விலங்கர சதனைப் போல வீரனும் பின்னுற் செல்ல
பலங்கரம் கொண்டு வந்த பலத்தையு மறிவா யென்று
இலங்கோன்முன் னுகை விட்டு இதுதானே யழித்த தென்றான். ()

வெள்ளியங் கிரியும் தோளில் விசித்திர மாய்வி ளங்கி
கள்ளிபோல் கிளையு மொன்றிக் கற்களும் சொலிக்க மேலாய்
முள்ளைபோல் இரண்டு பற்கள் முகில்போல மேடை குந்தி
கொள்ளிபோ லெரியும் கண்கள் கோலமா யிருக்கக் கண்டான். ()

பிரகஸ்தன் அனுமானுக்குச் சொல்வது.

இருப்பது மெந்த நாடு இங்குற்ற வாறு மேது
உரகடல் தன்னைத் தாண்டி ஒண்டியெப் படிநீ வந்தாய்
அரசரால் விட்ட தூதோ அண்டர்கள் விட்ட தூதோ
அரக்கரால் குற்றம் நேரா அஞ்சாது சொல்வாய் நீயே. (91)

அனுமான் பிரகஸ்தனுக்குச் சொல்வது.

மரவுரி கொண்ட மன்னன் மாதினை வந்து தேட
அரசனும் சுக்கி ரீவன் அடவியில் விட்ட தூதன்
புரமெலாம் தேடிக் காணு புகழ்லங்கை யினிலே தேட
அரசனே யிங்கு வந்தேன் அனுமான்என் பேரு மாமே. (92)

இராவணன் அனுமானுக்குச் சொல்வது.

வானர பதியாய் நின்றும் மன்னவன் ராம னுக்குப்
பூனைபோ லொடுங்க வாலி புகமெலா மொழியு மன்றோ
மானவற் கொல்லா விட்டால் வானவர் நகைப்பா ரென்று
வானரா சொன்னே னென்று வாலிக்குச் சொல்வாய் கண்டாய். ()

அனுமான் இராவணனுக்குச் சொல்வது.

மன்னவன் ராமன் தன்னை வனத்திற்சுக் ரீவன் கண்டு
அன்புடன் நேசம் பூண்டு அல்லலை யொழிக்க வேண்ட
உன்னையே கட்டும் வாலி ஒருகணை யாலே சாகப்
பின்னவன் தனக்குப் பட்டம் பிரியனே தந்தார் கண்டாய். (94)

வாலியும் உன்னைக் கட்டும் வாலுமே யொழிந்த தாலே
பாலிய அங்க தன்தான் பலம்காணத் தேடு கின்றான்
கோலமாய்ப் பின்னால் வந்து குன்றமே லவனைக் கண்டு
காலமுள் வரையும் தானே கனமாக வாழச் செய்வாய். (95)

இராவணன் அனுமானுக்குச் சொல்வது.

விதியென்னும் நோயே யுன்னை விடாமலே கட்டி யீர்த்து
மதியாகக் கொண்டு வந்தார் மாளவே லங்கை தானே
பதியாம்ரா வணன்பேர் பெற்ற பலங்கொள்மக் களையே னேநீ
சதிசெய்து வீணாய்க் கொன்றாய் சண்டாளா சீக்ரம் சொல்லே. ()

அனுமான் இராவணனுக்குச் சொல்வது.

தலைகள்பத் தோடும் வாழும் தசமுகா கானம் வாழ்ந்த
சிலையான சீதை கொண்டு சேர்த்தால் லங்கை மூடா
அலைகடல் தன்னைத் தாண்டி அன்னையைக் காண வந்தேன்
மலையான அரக்க ரென்னை மன்னவா வெதிர்க்கக் கொன்றேன். ()

இராவ்ணன் செயல்.

கடகட வெனவே பல்லைக் கடித்துமே விடாம லங்கு
அடியடி யெனவே கையை அறைந்துமே சபைந டுங்க
துடிதுடித் திடவே மீசை துள்ளியே குதித்து மண்ணில்
அடடா வெனவே கூறி அனுமானை வெட்ட வந்தான். (98)

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது.

அரனின்வாழ் கிரியைத் தாங்கி அண்டரால் புகழப் பெற்று
திரிலோக மஞ்ச வாழும் தேவன்போல் லங்கை நின்றும்
அரசரின் தன்மை தேரா அற்பமாம் கனிகள் தின்னும்
குரங்கையும் கொன்றா லிப்போ குவலயம் நகைக்கு மன்றே. ()

அனுமான் இராவணனுக்குச் சொல்வது.

கடலோசைக் கஞ்சா வந்த காகுத்தன் தூத னுடன்
கடியோசை தன்னைக் கேட்டு கலங்கியே நிற்பான் கண்டாய்.
குடியோசை யெல்லாம் கேட்கக் கோதண்டன் அருள்பெ றாது
இடியோசை போலே வீணாய் ஏதுக்கோ கத்து கின்றாய். (100)

இராவணன் செயல்.

கண்களிற் கனல்ப றக்கக் காதுகள் புகையெ ழும்ப
மண்டப மெங்கும் அஞ்ச மணிகளு முதிர்ந்து வீழ
அண்டமே பிளந்த தேபோல் அடிமுடி நிலையா னகி
கண்டகன் வாளை வீசிக் காகுத்தன் தூதை நோக்கி. (101)

இராவணன் அனுமானுக்குச் சொல்வது.

துட்டகான் குரங்கே என்றன் தோள்வலி தெரிய மாட்டாய்
எட்டுமாத் திசையு மஞ்சும் இலங்கைமன் னவனைக் கண்டால்
கட்டொடு ராமன் வந்தால் கானிலே யெடுத்த பெண்ணை
எட்டிட விடுக்கேன் சற்றும் இனியிங்கு நின்றாற் கொல்வேன். ()

அனுமான் இராவணனுக்குச் சொல்வது.

நில்நில நில் ராவ ணாகேள் நீதியோ யிதுசொல் வாயே
நல்லதோர் வார்த்தை கேளு நாளையே கேடு நேரும்
சொல்லையே கேட்டா லிப்போ சுகமாக வாழ்வா யிங்கே
வில்லும்வாள் எந்தன் மேலே விட்டுப்பார் சற்றே வீணா. (103)

திசைகளு மதிர வெங்கும் தேகமும் துடிது டிக்க
விசையாக வாளை யோங்கி வீரனை வெட்ட நேர
அசையாமற் குந்தி யங்கு அனுமானும் நகைக்கப் பார்த்து
தசமுகன் தம்பி தானும் தடுத்தனன் றருமம் கூறி. (104)

அனுமான் இராவணனுக்குச் சொல்வது.

அரசர்மக் களுமே யல்ல அட்டதிக் பால ரல்ல
இருடிக ளினமு மல்ல இந்த்ராதி தேவ ரல்ல
அரனுமே அயனு மல்ல ஆதியாய் விளங்கு மந்தப்
பரமமே சொரூப மாகிப் பாரினி லுதித்தான் கண்டாய். (105)

அலையான கடல்ப டுத்த அச்சுதன் அண்ட ரேற்ற
மலையான வரக்கர் தம்மை மண்மீது வெறுக்க வந்தான்
தலையான பத்தால் தாழ்ந்து தாயைரா மன்பாற் சேர்த்தால்
நிலையாகப் பொருந்தி யிங்கு நெடுநாட்கள் வாழ்வாய் மன்னா. ()

மாலையாம் நவம ணிக்கல் மண்டபம் இந்த்ர லோகம்
சீலமே முடிகள் பத்தும் நெடுநாட்கள் வாழ வெண்ணில்
வாலினா லுன்னைக் கட்டும் வாலியைக் கொன்றான் தன்னை
காலமும் இதுவே நல்ல கருணையும் பெறவே கண்டாய். (107)

அடியதில் ராமன் றன்சீர் அன்னையை விடுத்து உன்றன்
முடிகள்பத் தால்வ ணங்கி முதல்வனி னருளைப் பெற்றால்
குடியான சேனை யோடு குறைவின்றிப் புகழே பெற்று
குடையான நிழலே தங்கிக் குவலயம் வாழ்வாய் மன்னா (108)

இராவணன் அரக்கருக்குச் சொல்வது.

சொல்லாத வார்த்தை யிங்கு சொல்லிடு மற்ப மான
பொல்லாத குரங்கை யிப்போ பொழுதுமே விடியு முன்னே
கல்லான திடையிற் கட்டிக் காகுத்தன் தேவி முன்னால்
செல்லான வெரிப்ப தேபோல் சேலிப்பீர் எறிவீர் என்றான். ()

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது.

தூதனைக் கொல்வ தாமோ தோன்றிலே நீதி யாக
தீதுமே சார்வ தன்றித் தேவரும் நகைப்பா ரண்ணா
பாதகம் விடாது நம்மைப் பாராளு மன்ன னும்நீர்
நீதியை விடாது வாழ்ந்தால் நிலையாகப் புகழ்சேர் வீரே, (110)

இராவணன் † மகோதரனுக்குச் சொல்வது.

காட்டிலே கனியைத் தின்று கண்டிடு மரமே வாழ்ந்து
நாட்டில்அஞ் சாது வந்து நம்வன மழித்து நின்று
நீட்டமாய்க் கூறும் வார்த்தை நெடும்பகைத் தேவர் தானும்
கேட்டிடில் மதிப்பா ரோவால் சீனமாய்க் கொளுத்து வாயே.(111)

அரக்கரொன் றாகச் சேர்ந்து அனுமானைப் பிடித்து வாட்டித்
துரிதமாய்ச் சீலை கொண்டு தோகைநேர் வாலில் சுற்றி
பெரியயெண் ணெய்க்கு டத்தில் பெருத்தவால் நனையப் போத்து
எரிகொள்ளி தன்னைக் கொண்டு எதிராகச் சுட்டார் மாதோ.(112)

† இராவணன் சிறிய தாய் புத்திரன், மந்திரியாய் நின்றவன்.

அனுமான் செயல்.

மதிமிகு மனுமன் பாய்ந்து மதிலணி மாட கூடம்
குதிரையி னணியும் யானைக் கூடமும் கொடியும் நாடும்
அதிரவே வடவை போல அண்டமும் புகையிற் றீய
சுதரனே வீரர் மாய வெரித்தனன் சொல்லப் போமோ. (113)

ராகவன் தூத னென்று ராவணன் மதிக்க வங்கு
வேகமாய்ச் சிகர மெட்டி வீரனும் நகைத்துக் கொண்டு
தேகத்தைக் கழுவி நீரில் தேவனின் பாதம் போற்றி.
ஆகமம் தேடிக் காணு அன்னையைப் பணிந்து நின்றான். (114)

சீதை அனுமானுக்குச் சொல்வது.

புண்ணியா அபாயம் நேர்ந்தால் பொல்லாதான் வாழும் நாட்டில்
மண்ணினுக் கிரையே யல்லால் மன்னவன் முகத்தைப் பாரேன்
கண்டக னிடமே மீண்டல் காகுத்தன் கிருபை யென்று
எண்ணுகின் றேன்கு முந்தாய் இலங்கையை விட்டுப் போவாய்

அனுமான் சீதைக்குச் சொல்வது

அண்டமே விழுந்த போதும் அன்னையின் அருளி ருக்க
கண்டனல் தீது நேரா கலங்குவ தேனோ தாயே
வண்டுகட் செறியும் தீய வஞ்சகன் தனக்கஞ் சிற்போர்
மண்டல மெங்கும் போற்ற மன்னவன் தூதென் பாரோ. (116)

அரக்கரை யெல்லாம கொன்று அன்னையே உம்மை மீட்க
துரிதமாய்க் கொண்டு சேர்ப்பேன் துன்பத்தை விடுவா யென்று
கரத்தையும் சிரமேற் கொண்டு காகுத்தன் மாதைப் போற்றி
உரகடல் தன்னைத் தாண்டி யுத்தமன் சென்று னம்மா. ()

இலங்கையின் அழிவு.

இலங்கையு மெரிய வெங்கும் எழில்மணி மாடம் சாய
விலங்கர சிராவ ணன்போய் வேகமாய்க் கான மோட
மலங்கியே பலர்கள் மாய வானவர் நகைக்க வாடி
உலங்குபோல் சிலர்க ளங்கு ஓடியே துடித்து வீழ்வார். (118

கும்பனும் விழுந்தெ ழுந்து குன்றுபோ லோடிச் சார
சிம்புமும் கண்ட மாப்போல் திண்மகோ தரனும் ஓட
உம்பரின் பெருமான் தேவி யுள்ளநள் வனத்தி னூடு
தம்பிமா ளிகையு மங்கு தருமமே காத்த தம்மா. (119)

ராச்சதப் பெண்க ளோடு ராவணன் தேவி மாரும்
ஆச்சநல் மரத்தின் தாளில் அலைந்தோடித் தங்கி வாட
காச்சலாய்ச் சிலர்கள் வீழக் கழனியில் சிலர்கள் நிற்க
தாச்சக ரரக்கர் தீயைத் தணித்தசீர் சாற்ற வொண்ணு. (120

சங்கலர் நுழையா வண்ணம் சலத்தினுல் சூழப் பட்டு
எங்குமே புகழைப் பெற்ற இலங்கையில் பாதி வீய
புங்கவன் தூ தனுலே புரமெலாம் நகைத்துப் பொங்க
மங்களம் வாய்க்கு மென்று மாதாவும் சந்தோ டித்தாள். (121)

இந்திரன் வாழும் லோகம் இணையாகா லங்கை பாதி
வெந்ததைக் கண்டு பாவி வெகுவாக மனம்க லங்கி
மந்திரி யோடு சேர்ந்து மற்றவை சுற்றிப் பார்த்து
வந்தநற் குரங்கைப் பற்ற வலமிகு சிலரை விட்டான். (122)

அரக்கனு மயனைக் கொண்டு அழிந்தவை யெல்லாம் முன்போல்
சரிவரச் செய்து கொள்ளச் சகலரும் வந்து சேர
வரங்களைப் பெற்று மிக்கு வாழ்ந்தநற் பெருமை யெல்லாம்
குரங்கினு லொழிந்த தென்று கோரமாய்த் துக்கித் தானே. (123)

வனமுறு மரங்கள் தேடி மாருதிக் குரங்கைக் காணும்
கனமான லங்கை காத்தாள் காலனூர்ச் சேர்ந்து விட்டாள்
இனியது வருமே யாயின் இலங்கைதா னழியு மென்றார்
நினையாத வெல்லா மெண்ணி நெஞ்சமே கலங்கி னுனே. (124)

சேனைகள் செயல்.

அனுமானின் வரவைக் கண்ட அங்கதன் முதலா னோர்கள்
வனத்திலுள் மரத்தை யெல்லாம் பணம்போல முறித்துக் கொண்டு
கனமாக வாழு மந்தக் கண்டகன் தனையெ திர்க்கச்
சனகனின் புதல்வி யின்றன் சங்கதி கேட்க நின்றார். (125)

அனுமான் சாம்புவனுக்குச் சொல்வது.

அலையான லங்கை முற்றும் அன்னையைக் காணு மல்நான்
தலைகள்பத் தையுமே தள்ளத் தருணம்பார்த் தேயி ருக்க
அலைபோலச் சேனை சுத்த அவ்வனத் திடமே சேர்ந்து
நிலகமா காவைக் கண்டேன் உன்னத வனம்அ சோகே. (126)

### சாம்புவன் அனுமானுக்குச் சொல்லுது.

அரக்கன்வாழ் லங்கை யிற்றான் அன்னையை யேதாய்க் கண்டாய்
காத்திற்கோ தண்டம் கொண்ட காகுத்தன் பின்னால் வந்தும்
தருமமு மறியாப் பேயன் தாய்க்குமே துன்பம் செய்த
திருகுதே யுள்ள மிப்போ உண்மையை யெடுத்துச் சொல்வாய். ()

### அனுமான் சாம்புவனுக்குச் சொல்வது.

கண்டகன் வாழும் லங்கை காகுத்தன் தேவி யங்கு
கண்டகற் காவற் குள்ளே கர்த்தனைத் துதிக்கக் கண்டேன்
தொண்டன்நான் எனவே கூறி தொழுதாழி தன்னைத் தந்து
எண்ணமும் தெரிந்து கொண்டு இங்கனம் வந்து சேர்ந்தேன். ()

### அங்கதன் சாம்புவனுக்குச் சொல்வது.

இங்கனம் கடலைத் தாண்டி இலங்கையெல் லாம ழித்து
பங்கம்செய் பாவி யின்றன் பத்துநற் றலையும் சாய்த்து
அங்கத குமார னென்று அண்டரால் மதிக்க வென்னை
மங்களம் தாயைக் கொண்டு மன்னன்பா தத்திற் சேர்ப்பேன். ()

### சாம்புவன் அங்கதனுக்குச் சொல்வது.

அங்கதா பதற வேண்டாம் அரக்கன்வாழ் நாடு சென்று
மங்கள மாய்வந் தோற்கு மன்னவன் நிகரோ சொல்லும்
அங்கிருந் தேவை வீசி யரக்கனைக் கொல்வான் வீரன்
எங்குநிற் காமல் சீக்ரம் இராமன்தாள் சேரு வோமே. (130)

### வானரர் செயல்.

மலைகளை யதிரத் தூக்கி மண்மீது தருவில் மோதி
அலைகடல் சுவற வீசி அங்கன மார்த்துப் பாய
வலையில்மீள் மானைப் போல வனத்திலே விரைவா யோட
குலமன்னன் மதுவ னம்முன் குறுக்கேநிற் பதனைக் கண்டார். ()

மதுவனம் உள்நு ழைந்து மனம்கொள்மட் டும்குடித்து
அதிலுள்ள மரத்தை யெல்லாம் அடியோடு பேர்த்துக் கொண்டு
குதித்தங்கே யொன்றைக் கொன்று கோலமே செய்யக் கண்ட
ததிமுக னோடி வந்து தாரையின் மகனை நோக்கி. (132)

### ததிமுகன் அங்கதனுக்குச் சொல்வது.

அரசுக்கா மிவ்வ னத்தை அஞ்சாம லழித்த தன்றி
மரத்தையெல் லாம்மு றித்து மண்மீது தள்ளி விட்டார்
தருமமோ சொல்லு னக்குத் தடையேயில் லாம லிப்போ
அரசனி னிடமே கூறி ஆக்கினை செய்யச் சொல்வேன். (133)

அங்கதன் மனம்வெ குண்டு அவனையும் பிடித்து மோத
அங்கனம் சேனை யோடு அனுமானும் புடைக்க வோடி
அங்கமும் பழுதே யாக அழுதுமே துடிது டித்து
சங்கையே யுளத்தில் கொண்டு சாற்றவே யோடி னானே. (134)

### ததிமுகன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

அங்கதன் சேனை யோடு அரசேநம் வனம்நு ழைந்து
உங்களுக் காம்ம தூவை ஒன்றுய்க்கூ டிக்கு டித்து
அங்கமும் பழுதா யென்னை அடித்துமே துரத்த வேநான்
இங்கனம் விரைவாய் வந்தேன் எண்ணத்தைச் சொல்வீர் வேந்தே.

### சுக்ரீவன் ததிமுகனுக்குச் சொல்வது.

தென்திசை சென்ற சேனை தேடியே வனத்தி லங்கு
அன்னையைக் கண்டு வந்தே அழித்ததா யெண்ணு கின்றேன்
ஒன்றுக்கு மஞ்சா திப்போ உடனேதான் விரைவாய்ச் சென்று
என்னிடம் சேனை யாவும் இன்றேவந் தணுகச் சொல்வாய். (136)

சேனைகள் வந்த சேதி செல்வனுக் கெடுத்துச் சொல்ல
கானத்தில் நோக்கம் கொண்டு காகுத்தன் பார்த்தி ருந்தான்
போனவன் சேரு முன்னே புலிபோல்வே கமதாய்ப் பாய்ந்து
வீரன் சதுர்த்தி மாலை வரதன்பா தம்ப ணிந்தான். (137)

### அனுமான் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கண்டேன்கண் டேனே ராமா கடலினைக் கடந்து சென்று
கண்டகன் வாழும் லங்கைக் காவற்குள் அன்னை யைத்தான்
மண்ணிலே புரளக் கூந்தல் மனதிலே துயரம் கொண்டு
தண்ணீர்த்தா மரையே போலத் தவித்திருக் கக்கண் டேனே. (138)

ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

அன்னனோர் நடையா ளைத்தான் அரக்கன்தின் றுதி ருத்தல்
முன்னோர்செய் யறமே யென்று முடிவாக வெண்ண லானேன்
மன்னவன் சனகன் பெண்ணை வல்லவா மீட்டுக் கொண்டு
அன்னையைக் காண்ப தெப்போ அலையுதே யெந்தன் உள்ளம்.(139)

சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

எழுபத்தி ரண்டு வெள்ளம் என்படை யதனைக் கொண்டு
வழிதனைக் கடந்து சென்று வஞ்சகன் நாட்டிற் கேகிப்
பழுதுசெய் திட்ட வன்றன் படையொடு மவனை யங்கு
அழித்தன்னை தன்னை மீட்பேன் ஆயாசம் வேண்டாம் ஐயா. ()

ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

கண்டுற்ற அநுமா னாலே கண்டகன் சேதி கொண்டு
தண்டுடன் விரைந்து நாமே தசக்ரீவன் நாடு சேர்ந்து
விண்ணவர் மகிழ மாதை விடுத்திடச் சொல்லிப் பார்ப்போம்
கண்டகன் மறுப்பா னாகில் காலனூர் சேர்ப்ப துண்மை. (141)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தம்பியா மெனையெண் ணாமல் தருக்கிய அரக்கன் மேவும்
கம்பீர மான நாட்டைக் கண்டுவந் ததுவே போதும்
எம்மாத்ர மெனக்க வன்றான் இங்கனே இலங்கை சேர்ந்து
சிம்மம்போ லெதிர்த்துக் கொன்று சேர்ப்பேனே சனகி தன்னை.

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

தசரத சேயாய் வந்து தருமத்தை விடுவ தாமோ
தசமுகன் வாழும் நாட்டில் தண்டுடன் சென்று நாமே
வசமான வார்த்தை சொல்வோம் வராமற்போ னால்வ ழிக்கு
நிசமாக அவனைக் கொன்று நீதியை நிலைக்கச் செய்வோம். (143)

ஸ்ரீராமன் அநுமானுக்குச் சொல்வது.

மதிமுகம் கொண்ட சீதை மனம்போல வாழா ளங்கு
பதிதனைத் தெய்வ மென்றே பரவிவந் தவளைத் தீண்டாச்
சதிசெய்து எடுத்த வன்றன் தலைகள்பத் தூங்கத் ரிக்கப்
பதைக்குதே யெந்தன் உள்ளம் பகருவாய் கண்ட வாறே. (144)

அனுமான் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தேகமும் சருகு போலத் திடமில்லா மல்ந டக்க
மேகஞ்சூழ் திங்கள் போல மேனியி லிருளே சூழ்ந்து
சோகமே மனதிற் கொண்டு சோர்ந்துமே மரத்திற் சாய்ந்து
ஆகமம் காணு ளான அன்னையு மிருக்கக் கண்டேன். (145)

வடதிசை முகமே நோக்கி வஞ்சகன் காவல் வைத்த
கடலெனக் கத்தும் பேயர் கட்டமும் மதித்தி டாமல்
திடபர மிலாம லங்கு சிம்சுகா மரத்தின் தாளில்
அடர்ந்துமே ராம நாமம் அன்னையும் துதிக்கக் கண்டேன். (146)

புழுதிகள் உடலி லெல்லாம் புரளுது மண்ணிற் கூந்தல்
பழுதுநேர் உடையும் கண்டேன் பசியினல் மனது சோர்ந்து
மழுகிய தன்மை கண்டேன் மலர்போல வேர்வை காண
விழுமிய கண்கண் மூடாள் விண்ணேபார்த் திருக்கக் கண்டேன்.()

ஸ்ரீராமன் அனுமானுக்குச் சொல்வது.

சனகன்றன் பெண்ண னக்குச் சாற்றின வெல்லா மிப்போ
அனுமானே கூற வேண்டும் அலையாது வுள்ளம் நிற்க
வனத்திற்கோ தண்ட மேந்தி வந்துவஞ் சகனின் கையில்
மனைவியை விட்ட திப்போ மனந்தானே துடிக்கு தையோ. (148)

அனுமான் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தொட்டெடா மல்மண் ணோடு தூக்கியே வந்தோ னாட்டில்
பட்டது போலொ ருத்தி பட்டுமே யிருக்க மாட்டாள்
தொட்டிட லாகா வென்னைத் துரிதமாய் அங்கு சேரத்
தட்டாமற் பாரு மென்று தணிவுடன் பணிந்து சொன்னள்.(149)

தப்பிதம் செய்து விட்டேன் தம்பியின் உரைகே ளாது
எப்படி மனம்நொந் தாரோ இப்படி வாய்த்த தெற்கு
முப்பது தினத்துக் குள்ளாய் முடிவாக மீட்கா விட்டால்
தப்பாம லுயிர்போ மென்று தாயவள் கூறச் சொன்னள். (150)

ஸ்ரீராமன் அனுமானுக்குச் சொல்வது.

உன்னைக்கண் டதுமே தேவி ஒன்றுமே கவலை கொள்ளா
தன்பாகப் பேசி னளோ அதனையும் கூற வேண்டும்
என்னுடை வினையி னலே எனதன்னை அன்பு போச்சு
பின்வந்த வினையும் பாவம் பிடித்துக்கொண் டதுகாண் ஐயோ. ()

### அனுமான் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

எனதுசொற் கேட்ட வன்னை எழுந்துமுன் னாக வந்து
எனதுரு பத்தைக் கண்டு ஏங்கியே மனமும் வெம்பி
எனதுநா யகன்நா மப்பேர் எவனோகூ றுகிறா னென்று
மனதுயர் கொண்டு மாதா மரம்போல நின்று விட்டாள். (152)

கணையாழி கையிற் றந்து கனமோடு எல்லாம் கூற
குணமான அன்னை யங்கு குறைகள்யா வையுமே சொல்ல
துணைவியின் பாதம் தாழத் துட்டனைக் கொல்லக் கூறி
மணியையும் கொடுக்கப் பெற்று மன்னவா விரைவாய் வந்தேன்.

அனுமானு மணியைக் கொண்டு அயோத்திச்செல் வன்கை யீய
மனதினிற் கவலை விட்டு மன்னனுக் கதனைக் காட்டி.
இனமொடு வாழா தங்கு என்னுடன் வந்த தாலே
கனமான காவ லுக்குள் கலங்கவே நேர்ந்த தென்றான். (154)

### ஸ்ரீராமன் அனுமானுக்குச் சொல்வது.

அப்பனே புகழும் கொண்ட அஞ்சனை மகனே வாழி
ஒப்பிலா வீரம் பெற்று உலகினி லென்றும் வாழி
தப்பாதென் னுயிரைக் காத்த தாட்டிகா அனுமா வாழி
எப்புரம் நாளும் போற்ற என்னாளும் வாழி சேயே. (155).

### ஸ்ரீராமன் சுக்கிரீவனுக்குச் சொல்வது.

உனதரு ளால்யா னின்று உற்றேனே பெரும்சு கத்தை
சனகன்பெண் மணியி னாலே சஞ்சல மொழிந்த தின்று
வனத்தில்வே கமதாய்ச் சென்று வஞ்சகன் நாடு சேர்ந்து
கனமாகக் கொடாவிட் டாலே கண்டகற் கொன்று மீட்பேன். ()

### ஸ்ரீராமன் அனுமானுக்குச் சொல்வது.

அன்னைகௌ சல்யாள் நோற்ற அருந்தவந் துணையாய் நின்று
மன்னன்ரா வணனின் நாட்டில் மனைவியைக் கண்டு வந்தாய்
இன்றோடே யொழிந்து விட்ட தெனையுறு கவலை யெல்லாம்
என்னவும் வேண்டு நீயும் இயம்பிடிற் கொடுப்பேன் என்றான்.

**அனுமான் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.**

அடியேற்கு வரங்கொ டுப்பின் அன்புட னுரைத்த வாறே
முடிகள்பத் தையுமே மண்ணில் முடிவாகத் தள்ளி விட்டு
அடியற்ற மரம்போல் வாடும் அன்னையின் சிறையொ ழித்து
அடியேனுக் கருள்செய் வீரேல் அருந்தவப் பயனு வேனே. (158)

**ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.**

இருப்பதின் னம்சுக் ரீவா இருபது நாளே யாகும்
அரக்கர்பூண் டைவெ றுத்து அயோத்திசே ருவதெப் போது
பரதனைச் சித்ரை பூர்வம் பஞ்சமி பார்க்கா விட்டால்
ஒருக்காலே உயிரை விட்டால் உலகிலெப் படிநான் வாழ்வேன்.

**சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.**

இருபக லோரி ராவு எங்குமே வனந்தங் காமல்
கரையணை சேர்த்துத் தீர்ப்பேன் காகுத்தா கவலை யேனோ
அரக்கர்பூண் டைவெ றுத்து அன்னையோ டயோத்தி சேர்ந்து
மரவுரி தன்னை நீக்கி மகிழ்அபி டேகம் செய்வீர். (160)

சங்கையு மொழிந்தி ராமன் சமையமே போவோ மென்ன
அங்குள்ள *சேனை யெல்லாம் அணியாக வகுத்துக் கொண்டு
அங்கதன் தம்பி தன்னை அண்ணலை மன்னன் தாங்க
பங்குனி பூர்ணை யெல்லில் பம்பைவிட் டேகி னாரே. (161)

---

*மந்திரிகள் :—அனுமான், சாம்புவன். சேனைத் தலைவர்கள்:—ரிஷபன், சுசேடன், கந்தமாதன், கவாக்ஷன், குமுதன், கும்பன், சரபன், சுசேஷணன், தீர்க்கபாதன், துமிந்தன், நீலன், நளன், பனசன், வரக்கசோமுகன், மயிந்தன், சதவல்லி, இடும்பன் முதலானோர்கள். சேனைகள் எழுபத்திரண்டு வெள்ளம்.



**சுந்தர காண்டம் முற்றிற்று.**

ஸ்ரீராமஜெயம்.

# யுத்த காண்டம்.

---

### இராவணன் ஆலோசனை.

மந்திர சபையும் கூடி மகனுடன் கும்பன் சேர
தந்த்ரமாய் ராமன் மாளத் தசமுகன் சூழ்ச்சி செய்தான்
சுந்த்ரவீ டணன்த டுத்துச் சொல்லவே தாயை நீக்க
பந்துபோ லெழுந்து துள்ளிப் படித்தவை போது மென்றான். (1)

### இராவணன் பிரகஸ்தனுக்குச் சொல்வது.

மலையான வரக்கர் தன்னை மந்திரி லங்கை சுற்றி
பலமாகக் காக்கச் சொல்லும் பாழாகி விட்ட தேசீர்
அலைகடல் தாண்டி யிங்கும் அஞ்சாத குரங்கு பின்னும்
வலியாம்ரா மனையே கொண்டு வந்தாலும் வருமே கண்டாய். (2)

நிழலைச்சூ ரியன்தீண் டாத நிலையாகப் பொருந்தி நின்று
அழகினைக் காண அந்த அண்டரா லியலா தன்றோ?
விழியால்நோக் குறவா ரென்னை விண்ணொடு மண்ணி லில்லைப்
பழிக்கச்செய் ததுவே வந்த பாழான குரங்கும் அந்தோ. (3)

### விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது.

கனலையே யெரிக்கும் தீயைக் காவலில் வைத்த தாலே
தினமுமே யதின்வெப் பத்தால் தீய்ந்துமே கிடந்த லங்கை
வனவாழும் குரங்கு தீக்க வாயுவும் துணையாய் நின்று
இனமெலா மழிய லாச்சு இக்கணம் விடுப்பாய் மாதை. (4)

### பிரகஸ்தன் இராவணனுக்குச் சொல்வது.

வானரற் கஞ்சி யிப்போ மாதினை விடுத்தா லந்தோ
வானவர் தினமே சொல்லி வலிமையை யிகழ்வா ரன்றோ
கானமெல் லாம்க டந்து கடலிலே யணையைக் கட்டி
சேனையோ டிலங்கை வந்து சேரவு முடியா வேந்தே. (5)

அலைகடல் தாண்டி யிந்த அரக்கனின் நாடு சேர்ந்தால்
மலையான சேனை தன்னை மன்னவா யெதிர்க்க வொண்ணு
தலைகள்பத் தையுமே கண்டால் தசரதன் பெற்ற மக்கள்
குலையாக நடுக்க முற்றுக் குவலயம் விட்டுப் போவார். (6)

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது.

எட்டிப்பார்க் கவும்வா னோரால் இயலாத லங்கை வந்து
கட்டோடி ருந்த சேனை காலன்பாற் சேர்த்து விட்டுச்
சுட்டவா னரனே யந்தச் சுக்ரீவ சேனை யோடு
சட்டமாய்க் கொண்டு சேர்க்கச் சற்றுமே யஞ்சான் கண்டாய். (7)

ஆயிர யானை யாற்றல் அடவிவாழ் தாட கையை
நாய்போல்ம தித்துக் கொன்ற நாதனு மஞ்சு வானே
பேய்போல யெதிர்த்து நிற்பின் பெம்மான்பா ணத்தால் வீட்டி
தாயினைச் சிறையு மீட்பான் தருணமே விடுக்க நிற்பாய். (8)

பிரகஸ்தன் விபீஷணனுக்குச் சொல்வது.

அற்பமாம் குரங்கை வெல்வ தழகல்ல வெனவே விட்ட
குற்றமே முடிந்த திப்போ குறையினி நேர மாட்டா
விற்கொண்ட ராமன் தன்றன் வீரிய மெல்லாம் இங்கே
சற்றுமே பயனு காது சங்கையை யொழிப்பாய் வேந்தே. (9)

விபீஷணன் பிரகஸ்தனுக்குச் சொல்வது.

மந்திரி தனக்குக் கீர்த்தி மன்னனைக் காப்ப தன்றோ
பந்துமித் திரர்க ளோடு பாழாகும் வழியில் நின்றாய்
சுந்தர தரனை வெல்லும் சூச்சத்தை நீய றிந்தால்
மந்திர சபையில் குந்தி மனம்போலக் கூற மாட்டாய். (10)

எங்குமே புகழைப் பெற்ற இலங்கையைக் கொள்ள வந்தால்
சங்கையில் லாதெ திர்த்துச் சயத்தைநீ ரடைய வேணும்
புங்கனின் தேவி யைத்தான் பொருந்தியே வாழ விட்டு
மங்களம் பெறச்செய் யாது மன்னனைக் கொல்ல நின்றாய். (11)

பிரகஸ்தன் விபீஷணனுக்குச் சொல்வது.

மயன்மாம னாகை நிற்க மன்னவா ராம னுக்கு
பயமதை மனதிற் கொண்டு பதராம லிருப்பீ ராகில்
அயலாரே நுழையா வண்ணம் அலைகடல் தன்னில் செய்து
சயத்தையே பெறச்செய் வேனே சற்றுமே கவலை வேண்டாம். (12)

### விபீஷணன் பிரகஸ்தனுக்குச் சொல்வது.

அதலவிதல மென்னும் ஆழம்போ யொளித்த போதும்
மிதிலையின் வில்லொடித்த வீரனோ விடாது கொல்வான்
மதியிலே சிரேட்டமான மந்திரியாய் லங்கை வந்தும்
விதியாலே சொல்லை விட்டு வேந்தனைக் கொல்ல நின்றாய். (13)

### பிரகஸ்தன் விபீஷணனுக்குச் சொல்வது.

சங்கரன் வாழுங் குன்றைச் சற்றுமஞ் சாது தாங்கி
எங்குமே புகழைப் பெற்ற இலங்கையன் நகரில் ராமன்
இங்கனம் வருவா னானால் இரவொடு பகலு மாகச்
சிங்கம்போ லெதிர்த்து நின்று சேனைபோ டொழிப்பேன் கண்டாய். (14)

### விபீஷணன் பிரகஸ்தனுக்குச் சொல்வது.

மன்னவன் கையை தூக்கி மண்மீது புகழ்பெற் றதாய்
வன்னவ அண்டம் போர்க்க மனமுங்கான் துணிந்து விட்டாய்
பின்னுக வெரிந்து சாயும் பெருந்தீயைத் தணிக்க வெண்ணி
முன்னுகச் செய்து கொண்டு மூர்த்தியை யெதிர்த்து நிற்பாய். ()

### விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது.

தீப்பட்ட லங்கை கண்டு தேவர்கள் நகைப்ப தேபோல்
நோய்ப்பட்ட மாய்வைச் சொல்லி நோன்மையை யிகழ்வார் மண்ணில்
வாய்பட்டி தன்னையே நம்பி வரதனை யெதிர்த்தால் மன்னா
நாய்பட்ட பாடாய்ச் சேனை நாளையே யழிவார் கண்டாய். (16)

மனதைவில் லாய்வ ளைத்து வான்கடல் உள்ள டக்கக்
கனவுகாண் பவன்சொல் லாலே காரியம் முடிய மாட்டா
சனகன்பெண் ணைத்தான் கொண்டு சமையம்ரா மன்பாற் சேர்த்தால்
இனமொடு புகழை பெற்று இலங்கையை யாள்வாய் அண்ணா. (17)

### மகோதரன் இராவணனுக்குச் சொல்வது.

அற்பமாங் குரங்கின் சொல்லை யரக்கர்கேட் டுப்ப யந்தால்
பெற்றதோர் புகழும் லங்கைப் பெருமையும் கெடுமே யந்தோ
புற்றுகள் வாழ்நா கத்தைப் புலிபாய்ந்த கதையாய் இங்கே
விற்பிடி வல்ல னாலும் வேந்தேயெப் படிசேர் வானே. (18)

ராமனைச் சரண மாகி ராச்சதர் லங்கை நின்று
சேமத்தை யடைவ தின்மேல் சிவனை விடுதல் நன்று
நாமத்தைக் கேட்ட போதே நான்முகன் அஞ்ச வாழ்ந்தோய்
ஓமத்தில் விட்ட நெய்யாய் ஒழிந்ததே கீர்த்தி யந்தோ. (19)

விபீஷணன் மகோதரனுக்குச் சொல்வது.

கையற்றுக் காலு மற்றுக் கனவில்மாண் டைை யிப்போது
வையகம் சொலிந கைக்க வானரன் செய்தல் கண்டு
மையற்று மதிதான் பெற்று வாய்த்துநீ யிருந்தா யானல்
மெய்யனை யெதிர்ந்து நிற்க வேந்தனைத் தூண்ட மாட்டாய். (20)

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது.

எரியும்நற் கனல்த ணிக்க எண்ணையை விடுக்க மந்திரி
பிரியமாய்க் கூறக் கேட்டுப் பேதைமேன் மனமும் நொந்தேன்
தருமநல் நிலையை விட்டால் தசரதன் பெற்ற மக்கள்
புரமெல்லாம் புகழே சேரப் புலிபோல வெதிர்த்துக் கொல்வார். (21)

இராவணன் விபீஷணனுக்குச் சொல்வது.

எனக்குநீ பகையாய் நிற்க இலங்கையில் வந்து தித்தாய்
உனதுவார்த் தையைக் கேட்டால் உலகினில் புகழே போகும்
சனகனின் குமாரி யைநான் சாகினும் விடுவ தில்லை
வனமதைக் கடந்து ராமன் வந்தாலும் பிழைக்க மாட்டான். (22)

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது.

உருவமும் நிறமு மில்லா துலகினில் இடமு மற்றுப்
பெரியதும் சிறிது மில்லாப் பேரற்ற பராப ரந்தான்
தருமமே யுருவ தான தசரதன் சேயாய்த் தோற்றி
அரக்கர்பூண் டைவெ றுக்க அடவியில் வாழ்ந்தான் கண்டாய். ()

இராவணன் விபீஷணனுக்குச் சொல்வது.

கதையதைச் சொலத்து ணிந்தாய் கயிலையை யெடுத்த வெற்கே
மதியது மெனக்கே யுண்டு மன்னனை யெதிர்த்துக் கொல்ல
விதியாகச் சுடுகு ரங்கை விடுத்தது உன்னு ளன்றோ
எதிரியில் லாது வாழ்ந்த என்னையும் நகைக்கச் செய்த. (24)

வனஞ்சென்று சேனை யோடு வானர ேேடு ராமனை
கனமாக வெதிர்க்க நின்று காலனூர் சேர்த்தி ருப்பேன்
வனராறு மறைவாய் நின்று வந்துமே இலங்கை பின்னும்
இனமேசுட் டாலென் செய்வ இதற்கல்லோ அஞ்சி நின்றேன். ()

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது

திங்களை யணிந்தோன் குன்றைத் திருத்தோளில் தாங்கும் வீரம்
புங்கனை யெதிர்த்து நின்றால் பொருந்தியே வாழ மாட்டாய்
சிங்கமாய்த் தூணில் தோன்றிச் சிறுவனைக் காத்த ஈசன்
இங்கனம் வருவ தேனோ இலங்கையை யழிக்க அண்ணா. (26)

இராவணன் விபீஷணனுக்குச் சொல்வது.

சிரலின்றன் நுனியா லந்த வீரனைச் சேனை யோடு
பெரியதாம் கடலே சேர்ப்பேன் பெருமையை யறிய மாட்டாய்
நாரணன வற்கே யஞ்சி நான்முகன் புகழ வன்று
அரனை கிரியெ டுத்த அண்ணனைக் கெடுக்க நின்றாய். (27)

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது

குட்டையாய் மாப லீபாற் கொண்டுமூன் றடியாய்ப் பூமி
எட்டியே யளந்தோ னுக்கு எதிரியு முண்டோ அண்ணா
பட்டதே குரங்கால் போதும் பலமாக வெதிர்த்த போதும்
சிட்டிகை லங்கை முற்றும் சீராமன் அழிப்பான் கண்டாய். (28)

இராவணன் விபீஷணனுக்குச் சொல்வது

காய்க்குக்கால் முளைத்த தான காகுத்தன் சேனை யோடு
தீயிட்ட குரங்கைக் கொண்டு தென்கடல் கடந்த போதும்
நோயது சேனைக் கின்றி நொடியிலே யெதிர்த்து நின்று
வாயிட்டுக் கொள்வான் கும்பன் வாடுவ தேனோ வோரேன். (29)

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது

அண்டரும் பணியும் ராமன் அணுவாக விருந்தா லென்ன
வண்டது துளைக்கும் மிக்க வயிரமும் சேர்ம ரத்தை
எண்ணமும் கொள்வ தாமோ ஏற்குமோ சொலுமெ னக்கு
விண்ணிலே பறக்கச் செய்வான் வீணாக வழிய வேண்டாம். (30)

### இந்திரசித்தன் இராவணனுக்குச் சொல்வது

சிறியதந் தைசொல் கேட்டால் செகமெலாம் நகைக்கும் நம்மை
பிறந்துமே உமக்குப் பின்னால் பெருமையைக் கெடுக்க நின்றார்
சிறியவன் கானம் சென்று சேனையை யெதிர்த்து மங்கே
சிறிதுமஞ் சாது கொல்வேன் சீக்கிரம் விடையீ வீரே. (31)

### விபீஷணன் இந்திரசித்தனுக்குச் சொல்வது

இந்திரன் போலெ ண்ணாதே இராமனை லங்கைச் செல்வா
வந்ததோர் குரங்கா லிப்போ வானவர் நகைக்க நின்றாய்
மந்திரத் தாலு மாகா மன்னனை யெதிர்த்து நிற்க
தந்திரத் தாலும் சாயா தரணியில் வாழ நிற்பாய். (32)

### இந்திரசித்தன் விபீஷணனுக்குச் சொல்வது

விண்ணவர் கோனைப் பற்றும் வீரற்குக் குரங்கு நேரோ
எண்ணத்தை யறிந்தி ருந்தால் இப்படிக் கூற மாட்டீர்
கண்யமாய் கோதண் டம்சேர் காகுத்த னைக்கொண் டேற்றால்
தண்டுடன் கொல்ல வெண்ணித் தந்தையும் விட்டான் கண்டாய். ()

### விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது

மலைகளை நகத்தாற் பேர்க்கும் மகன்லங்கை யிருப்ப தாலே
வலியான மக்கட் கொன்ற வானரற் கொல்லா விட்டு
அலையான கடல்ப டுக்கும் ஆதியை யெதிர்த்து நின்று
குலமாக முழுதும் தோற்றாக் குவலயம் தாழ்த்த நின்றாய். (34)

### இந்திரசித்தன் விபீஷணனுக்குச் சொல்வது

தசமுகம் கொண்ட மன்னன் தம்பியா யேன்பி றந்தாய்
நிசமாக நாளைச் சென்று நேரில்ரா மனையெ திர்ப்பேன்
வசமாய்க்காக் கச்சுக் ரீவன் வந்தாலும் அவனைக் கொல்வேன்
அசைகவே யியலா தென்னை அயோத்திச்செல் வன்தன் னாலே. ()

### கும்பகர்ணன் இந்திரசித்தனுக்குச் சொல்வது.

அற்பமாம் குரங்கே வந்து அசோகநல் வனம ழித்து
சற்றுமஞ் சாது நின்று சகோதரர் தன்னைக் கொன்று
முற்றுமே யெரித்தல் கண்டும் முதல்வனை நேரில் சென்று
பெற்றசே யேயெ திர்த்துப் பெருமையாய் வாழ்வா யோபார். ()

கும்பகர்ணன் இராவணனுக்குச் சொல்வது

பாலான கழுதை தந்தாற் பசும்பாலுக் கிணையா காது
மேலாகச் சொன்ன லும்செய் மேன்மையா கான்தம் பிக்கு
வாலாலே யெரிகு ரங்கை வலியாக வெதிர்க்கா வீரன்
மேலான பதவி யியும் மெய்யனை யெதிர்ப்ப தெங்கன். (37)

வானம்வில் லாய்வ ளைத்து வடமலை அம்பாய்ப் பூட்டி
மானவி ரிருவ ரைத்தான் மகனை விந்த்ர சித்தன்
சேனையோ டெதிர்த்து நின்று செய்வன்மா யத்தைச் செய்தும்
வானவர் தினமே யேற்றம் வரதனை அசைக்க வொண்ணு. (38)

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது

அரனை கிரியெ டுத்து அண்டராற் புகழப் பெற்றுக்
புரமெலா மஞ்ச வாண்டும் புண்ணியம் கிடைக்க மாட்டா
காத்திற்கோ தண்டம் கொண்ட காகுத்தன் திருவ டியை
சிரமதால் வணங்கி னுன் சென்மம்சா பல்ய மாமே. (39)

இராவணன் விபீஷணனுக்குச் சொல்வது

அண்ணனைப் பழிக்க நின்ருய் ஆ! ஆ! ஆ! அழகே யம்மா
எண்ணத்தைத் தெரிந்தே னிப்போ எதிராக நிற்க வேண்டாம்
பண்ணின பாவத் தாலே பதட்டமாய்க் கூறி விட்டாய்
புண்ணியா யினிமே லிங்கு பொருந்தினுற் கொல்வேன் கண்டாய்.

அண்டமே வெடித்த போதும் அலைகடல் புரண்டா லும்தான்
மண்ணொடு விண்ணும் சேர்ந்து மன்னற்குத் துணையா னலும்
கண்முன்னே யெதிர்த்து நின்று காலனூர் சேர்ப்பே னன்றி
எண்ணம்போல் நடப்பே னென்று எள்ளள வெனுமெண் ணுதே.

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது

நவலோக மதிக்க வேதான் நாட்டையே ஆண்டு வந்தும்
பவத்தின்றன் செயலைத் தட்டப் பட்சத்தை விட்டீ ரல்லோ
சிவன்தந்த வரமெல் லாமே தேவனு லழியு முன்னே
நவலோகம் ஏற்றும் தாயை நாதன்பாற் சேர்ப்பாய் அண்ணு. (42)

சண்டாளன் லங்கை நீக்கச் சமையமே துணிந்து விட்டான்
எண்ணம்போல் முடியு மென்று எள்ளள வெண்ண வேண்டாம்
அண்டமே புரண்ட போதும் அயோத்தியின் செல்வன் அஞ்சான்
தண்டுட னழியச் செய்வான் தரணியில் வாழ நிற்பாய். (43)

அனுமான்மன் னனையே கொண்டு அலைகடல் கரையும் சேர்ந்து
கனமாக வெதிர்த்து நிற்கக் காலத்தை நோக்கி நிற்பார்
இனமான தம்பி யென்று எனையும்கொல் லாது நீக்கார்
சனகன்பெண் ணைவி டுத்துத் தளராம லாள நிற்பாய். (44)

இராவணன் விபீஷணனுக்குச் சொல்வது

தம்பியும் இறப்பா னுனல் தசரதன் பெற்ற சேயால்
கம்பீர மழியா வாழ்வேன் கண்முன்னே நிற்க வேண்டாம்
உம்பரார் துணையைக் கொண்டு உரகடல் தாண்டி னுலும்
கும்பனு மொருவன் சென்று குரங்குக ளோடு கொல்வான். (45)

விபீஷணன் இராவணனுக்குச் சொல்வது

கும்பனும் மகனும் நேரே குன்றுபோ லெதிர்த்த போதும
பம்பரம் போலே பாயும் பாணத்தைத் தாங்கப் போமோ
கம்பீர மழியக் கண்டு கலங்காது முன்னே சென்று
உம்பரா ரேற்றும் தேவால் உயிர்விடத் துணிந்தேன் மன்னு. (46)

இராவணன் விபீஷணனுக்குச் சொல்வது

ராமனுல் தம்பி மாய்ந்தால் ராவணன் அழுவே மாட்டான்
தாமதம் செயாம லிந்தத் தருணமே விட்டுப் போவாய்
சேமத்தை யடையா னேனும் சீதையை விடுத்தே யந்த
ராமனை நேசிப் பேனேல் ராச்சதர் பெருமை போமே. (47)

தருமஞ்சொல் தம்பி தன்னைத் தசகண்டன் போகச் சொல்ல
இருகண்ணீர் சொரிய அன்னுன் எழுந்துமே திகைத்து நோக்கி
இருகரம சிரமேற் கொண்டு இதமொழி சொலித்து தித்து
வருமுன்னே விடுவா யென்று வணங்கியே சென்றுன் மாதோ. (48)

கும்பகர்ணன் இராவணனுக்குச் சொல்வது

தம்பிவி பீட ணன்றன் தன்மையை யறியாய் சற்றும்
சம்மதம் கொண்ட துள்ளம் சபையினில் நீங்கச் செய்ய
இம்மமா யிருந்த போதும் சீரான நகங்க ளற்றால்
ஏம்மாத்ரம் பலமே யேனும் எதிரியை வெல்லப் போமோ. (49)

இராவணன் தும்பகர்ணனுக்குச் சொல்வது

என்னுடன் பிறந்து நீங்கள் எனக்கேதான் பகையா னீர்கள்
இன்னமு மிருப்ப திந்த இலங்கையி லேயோ வீணில்
முன்னாக ஆவி மாய்க்க முடிவாக மதித்து விட்டேன்
பின்னாக வரசை யாண்டு பெருமையாய் வாழ்ந்து நிற்பாய். (50)

மகோதரன் இராவணனுக்குச் சொல்வது

மண்ணொடு விண்ணின் றூனும் மகோதரன் தன்னை வெல்லார்
எண்ணமும் சொல்லி விட்டேன் இனிமேலே துயரம் வேண்டாம்
புண்ணியா யெனக்கிப் போது போகவே விடைகொ டுத்தால்
கண்ணிமை தட்டும் நேரம் காகுத்தற் றள்ளி வாரேன். (51)

தும்பகர்ணன் மகோதரனுக்குச் சொல்வது

கருவறுத் தனிக மெல்லாம் களிப்பாய்வாழ்ந் தாலு மிங்கு
திருடினன் அரக்கன் என்று தேசத்தில் சொலிந கைப்பார்
தருமமாய் யுத்தம் செய்து சானகி தன்னைக் கொண்டால்
இருபது தோளா னென்று எங்குமே புகழ்வா ரன்றோ. (52)

தும்பகர்ணன் இராவணனுக்குச் சொல்வது

பின்செய்யும் காரி யத்தைப் பிசகாய்முன் செய்து விட்டாய்
முன்செய்யும் காரி யத்தை முடிவிற்பின் செயத்து ணிந்தாய்
அன்றோராம் லக்ம ணனை அடவியிற் கொன்று விட்டு
கன்னிகை யெடுத்து வந்தாற் கன்லாலே எரிய மாட்டா. (53)

இராவணன் தும்பகர்ணனுக்குச் சொல்வது

அறுபட்ட தங்கை காண அண்டர்கள் நகைப்பா ரென்று
சீறிதும்பியோ சிக்கா மல்நான் செய்யவே துணிந்தேன் தம்பி
பிறந்துமே யெனக்குப் பின்னால் பெருமையெல் லாமே தீரம்
அறிந்துமற் பமதாய்ச் சொல்ல அவனையே யொழித்தேன் கண்டாய். ()

தும்பகர்ணன் இராவணனுக்குச் சொல்வது

ஒருங்குறு சேனை கொல்ல வுறுதிகங் கணமுங் கொண்டேன்
ஒருகால்சீ தையைவி டற்கு உள்ளமே யுற்றுப் பார்த்தேன்
தருமத்தில் நோக்க முள்ள தம்பிசொல் மெய்யா னுக்கால்
திரும்பிநான் வருவ தில்லைத் திடமான வார்த்தை அண்ணா. (55)

### *மாலியவான் இராவணனுக்குச் சொல்வது

வாய்வேத வரனைப் போற்றி வானவர் தினமும் வேண்ட
பேய்மகர் பூண்டைப் போக்க பெம்மானே உதித்தான் மண்ணில்
தீயிட்டு தேரு ரங்கு தேவர்கள் நகைக்க உன்னை
காயத்தோ டிருக்க வெண்ணில் காகுத்தன் மாதை நீக்கும். (56)

நவகோடி லிங்க பூசை நான்முகன் மதிக்கச் செய்து
பவம்செய்யத் துணிந்த தேது பாவனே தோன்ற வில்லை
தவம்செய்த பெருமை யாவும் தரணியிற் கீர்த்தி யாவும்
சிவனாரின் வரமும் வாழ்வும் சீதையா லழிய நின்றாய். (57)

கண்கெட்டுப் பலமுங் கெட்டுக் கயிலைதாங் கினதும் கெட்டு
மண்கெட்டு வாசங் கெட்டு வானோரஞ் சினதும் கெட்டுப்
பெண்கெட்டுப் பிள்ளை கெட்டுப் பேரொடு லங்கை கெட்டு
புண்பட்டுப் புகழுங் கெட்டுப் போகவே வாய்க்கும் பூமா. (58)

நோய்கொண்ட ராவ ணன்றான் நோன்மையா மதித்தி டாமல்
நாய்போலத் துள்ளி யேழ்ந்து நாகம்போல் சீறிச் சென்றான்
ஆய்மல ரமர்ந்த தாயால் ஆபத்து நேர்ந்த தென்று
வாயினில் வந்த மட்டும் மந்த்ரியைக் கும்பன் வைதான். (59)

### விபீஷணன் செயல்

தலையாலே வணங்கு வேனோ தசரதன் பெற்ற சேயை
மலையான வரக்க னென்று மதித்தடிப் பாரோ என்னை
நிலையாக வாழச் சொன்னால் நீங்கவே செய்தான் என்னை,
வலைபட்ட மானைப் போலே வாடுதே யுள்ள மையோ. (60)

துதிக்கும்நல் வழியும் தேரேன் துளசிசார் வரதன் பாதம்
கதியென அடைந்த காலும் காகுத்தன் கருணை யேதோ
சதிசெய்த பேய னுக்குச் சகோதர னிவனு மென்று
மதியதும் மயங்கி நின்று மண்மீது தள்ளு வாரோ. (61)

### விபீஷணன் கும்பகர்ணனுக்குச் சொல்வது

இங்கனம் கூடத் தோன்றி இப்படி வாய்த்த தெற்கு
மங்களம் வாழச் சொன்னால் மன்னவன் துரத்தி விட்டான்
புங்கன்பாற் போகக் கண்டு பொல்லாதான் தம்பி யென்று
அங்கன மடிப்பா னென்று அலையுதே யுள்ள மையோ. (62)

* இராவணனுக்குப் பாட்டன்.

தும்பகர்ணன் விபீஷணனுக்குச் சொல்வது

கருமத்தில் நோக்க முள்ள தசரத செல்வன் தானும்
சரணம தடைந்த பேரைச் சாகவே யடிக்க மாட்டான்
வருவினை தன்னை வென்றோர் வையகத் தொருவ ரில்லை
புரமெல்லாம் புகழே பெற்றும் பொருந்தியே வாழ்வாய் கண்டாய்.

விபீஷணன் தும்பகர்ணனுக்குச் சொல்வது

அரனாலே வரத்தைக் கொண்டு அண்டர்கோ னைக்கெ லித்து
திருடாடி லங்கை நின்று தேவராற் பணிய யாண்டும்
கருமநல் நிலையைச் சொன்னால் தம்பியைத் தள்ளி விட்டான்
பொருந்தியே வாழச் சொல்லும் புண்ணியன் தேவி நீக்கி. (64)

தும்பகர்ணன் விபீஷணனுக்குச் சொல்வது

கடிமலர் தன்னைப் போலக் கண்டகன் குணமே சேரான்
அடிமலர் தன்னைப் பட்டு மன்னையா லழிய நின்றான்
கொடிமலர் கெடாத வண்ணம் கோதண்டன் அருளைப் பெற்றுக்
குடிமகர் தம்மைக் காத்துக் குவலயம் வாழ்வாய் தம்பி. (65)

மண்ணாளக் காக்கா தின்னு மதியது தாழ நிற்கும்
புண்ணாகப் பெருகல் நோக்கப் புரையூரல் தான்கொ டுக்கும்
பெண்ணான மயக்கம் கொண்டால் பெம்மனை வெறுத்து நிற்கும்
எண்ணமெல் லாம்வி டுத்து இராமனைச் சேர்வாய் தம்பி. (66)

காலனும் கண்முன் நின்று காகுத்தன் பகையை மூட்டி
கோலமாய்ப் படுக்கப் பார்த்துக் கொடுவுயிர் போக நிற்க
பாலுமே யமுர்தம் நல்ல பாயசம் கொடுத்த போதும்
ஆலமாம் அவனுக் குத்தான் ஆயாசம் உனக்கு வேண்டாம். (67)

கும்பனால் விடையும் பெற்றுக் கோதண்டன் தன்னைச் சார
நம்பின நாதன் காக்க நாமமே ராமற் போற்றி
எம்முடி வுறினு மேதான் இராமனே கதியு மென்று
கம்பீர விமான மேறிக் கண்டனை விட்டுச் சென்றான். (68)

ஸ்ரீராமன் தென்கரை சேருவது.

வனமாம்எல் லாம்க டந்து வானர சேனை யோடு
கனபிர தமையின் மாலை கண்டுதென் கரையைச் சார
வனரனும் கடலைக் டந்த வலியையோ சித்து நிற்கச்
வினையால்ரா வணனும் விட்ட விபீடணன் ராமற் கண்டான். (69)

### விபீஷணன் சரணாகதி

ஆதியே யருளே மெய்யே அண்டினோர் தம்மைக் காக்கும்
சோதியே சுடராய் வந்த சுந்தரா சரணம் துய்த்தேன்
நீதியை நிலைசெய் யற்கு நெடியநாள் தவத்தில் வந்து
காதியின் மகனைக் காத்த காகுத்தா சரணம் தேவே. (70)

பொல்லாத வரக்கர் தம்மைப் பூமகள் தனில்வெ றுக்க
எல்லாத்தே வர்களும் போற்ற இறங்கியே யயோத்தி வந்த
செல்வனே ராம நாமா சேவடி நம்பி வந்தேன்
கல்லையும் பெண்ணுச் செய்த காகுத்தா சரணம் தேவா. (71)

தூக்கமே கடல்ப டுத்துத் தொண்டரை யெல்லாம் வாழ்த்தி
நீக்கிவி டாமற் காக்கும் நெடுமாலே தேடி வந்தேன்
பாக்கியம் பெற்றே னிப்போ பாதத்தைச் சேவித் தற்கு
காக்கையைக் காத்த ஈசா கடைக்கண்பார் சரணம் ஐயா. (72)

### சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அரக்கனு மெவனோ பொய்யோ ஐயனே நமைக்கெ டுக்க
பெரியவி மான மேறிப் பிழைத்திவன் வந்தான் ஏதோ
இருள்சூழ்வ தற்கு முன்னே எமனுரை சேர்க்கா விட்டால்
உரகம்போல் வாய்த்துக் கொல்வான் உடனேதான் விடுவீர் பாணம்.

### ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

சரணமென் றோரைக் காக்கச் சமையமும் விடுவே னானல்
கரத்திற்கோ தண்டங் கொண்ட காகுத்த னென்பா ரோதான்
தருமநல் வழியிற் சென்றால் தகாதன செய்த போதும்
அரசனே நமக்க பாயம் அணுவேனு மணுக மாட்டா. (74)

### ஸ்ரீராமன் விபீஷணனுக்குச் சொல்வது.

எங்குமே புகழைப் பெற்ற இலங்கைவாழ் அரக்கன் நீயும்
அங்கமும் முழுதும் சோர அபயமென் றேனே வந்தாய்
மங்கள நாட்டை யாளும் மன்னன்தா னென்ன வேண்டும்
சங்கையே கொளாம லிப்போ சாற்றுவாய் நடந்த வற்றை. (75)

### விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

கண்டற்கோ மாயை யுண்டு காக்கைக்கும் ராம னுண்டு
தொண்டர்க்குத் தெய்வ முண்டு துட்டர்க்குப் பலமு முண்டு
புண்யர்க்குப் புகழு முண்டு பொல்லார்க்கு வஞ்சம் உண்டு
சண்டன்ரா வணன்தம் பிக்குச் சகத்திலே எதுதா னுண்டே. (76)

அரசற்கு நாடே யுண்டு அடவியும் விலங்குக் குண்டு
கரிவாழத் துதிக்கை யுண்டு கானற்கு நிழலு முண்டு
மரமாகில் கிளையே யுண்டு மச்சமும் நதியே யுண்டு
அரக்கன்வீ டனான்ற னக்கு அவனியில் ஏது உண்டு. (77)

தீக்குமே சுடரே உண்டு தேரைக்குச் சலமே யுண்டு
நோய்க்குமே மருந்தே உண்டு நோன்மையே பல்லிக் குண்டு
நாய்க்குமே வீரம் உண்டு நத்தைக்கு ஓடு உண்டு
பேய்க்குலன் பின்னால் வந்த பேதைக்கு ஏதுதா னுண்டு. (78)

ஸ்ரீராமன் விபீஷணனுக்குச் சொல்வது.

நோன்புக்குப் பயனே உண்டு நொந்தார்க்குக் காப்பா ருண்டு
ஈன்றோற்குச் சுகமே உண்டு இருடிக்குத் தவமு முண்டு
கூனுக்கும் கோலே உண்டு கொசுவுக்கு இறகு உண்டு
நான்தானும் உனக்கே உண்டு நமனேலங் கோனுக் குண்டு. (79)

அண்ணன்ரா வணனை விட்டு அலைந்தோடி வந்த தேது
புண்ணுச்செய் தானோ பாவி பொருந்திவா ழாம லங்கு
விண்ணவர் புகழத் தானே விதிப்படி யாளச் செய்வேன்
புண்ணியா யெனக்கிப் போது புகலுவாய் உண்மை தானே. (80)

விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அனுமான்லங் கையைய டைந்து அசோகநல் வனம ழித்து
இனமெலா மெதிர்த்துக் கொல்ல இந்திர சித்தன் கட்டி
கனமாக வாழு மந்தக் கண்டகன் முன்னால் நிற்க
வனவாழும் குரங்கே யென்று வஞ்சகன் வால்தீ யிட்டான். (81)

ராமனின் தூத னென்று ராச்சதன் மதிக்க வங்கு
ஓமத்தை யெரித்த தேபோல் ஓடோடி லங்கை தீய
சேமமாய் வாழ வெண்ணிச் சீதையை விடவே சொல்லக்
காமத்தா லழியும் பேயன் கடிந்துமே துரத்தி விட்டான். (82)

ஐயனும் செல்வ னங்கு அஞ்சனை மகனை நோக்க
கையதைச் சிரமேற் கொண்டு காகுத்தன் தன்னைப் போற்றி
தெய்வம்போற் சீதை காக்கும் திரிசடை யத்த னுக்கும்
வெய்யவன் வெட்ட மேவ விலக்கின மெய்யன் என்றான். (83)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

காக்கைக்கு மிடம்த ராத கமலபூ வதுவே போல
வாக்கற மில்லா விட்டால் வாழுவென் னிடமொண் ணாது
சீக்கிர மபிஷே கம்தான் சிறப்பாகச் செய்வாய் தம்பி
நீக்கினை அவனைக் கொன்று நிலையாக வாழச் செய்வேன். (84)

அண்ணன்ரா மன்றன் சொல்லை யன்புடன் சிரமேற் கொண்டு
புண்ணிய சலத்தைக் கொண்டு புகழ்அபி டேகம் செய்ய
அண்டர்பூ மாரி பெய்ய ஐயனைப் பாதம் போற்ற
மண்ணிலே சிரஞ்சீ விப்போர் ஆகியே வாழ்க வென்றான். (85)

ஸ்ரீராமன் விபீஷணனுக்குச் சொல்வது.

அண்ணன்ரா வணனின் சூதும் அருமையும் குணத்தி னோடு
பண்ணின தவத்தின் சீரும் பலத்தின்றன் பெருமை யெல்லாம்
புண்ணியா வொளியா துண்மை புகலுவா யாணு லிங்கு
தண்ணீர்மேற் கமலம்போலத் தவிக்காது மனமும் கண்டாய். (86)

விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தக்கன்போல் தவத்தைச் செய்து சகலவ ரங்கள் பெற்றான்
முக்கணன் கிரியைத் தாங்கி மூவுல குடிம்ம திதோன்
திக்குவி சயமும் செய்தான் தேவர் கடமைச்செ யித்தான்
எக்காலும் பாவத் தைத்தான் இரங்காது செய்த பாவி. (87)

ஸ்ரீராமன் விபீஷணனுக்குச் சொல்வது.

அண்டமே த்தணையா னாலும் அயனொடு அரன்வந் தாலும்
கண்ணிமை தடாமல் நின்று கண்டகன் தனைக்காத் தாலும்
அண்டத்தில் மறைந்த போதும் அதலம்போய் ஒளித்த போதும்
புண்ணியா கொல்லா விட்டால் பொருந்தாது ராம நாமம். (88)

அலைகட லணையைக் கட்டி அரக்கன்வாழ் நாடு சேர
நலமான வழியு மொன்று நாடினுற் சொல்லும் தம்பி
மலையான சேனை யெல்லாம் மண்மீதி லறுத்துத் தள்ளி
தலைவியை மீட்டுக் கொண்டு தம்பியாற் சேரு வேனே. (89)

விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

இந்தநற் கடலும் தாண்டி இலங்கைமா நகரம் சேர
தந்திரம் கேளும் அண்ணு சலபதி தன்னைக் கோறி
சுந்தரமாய்த் தெர்ப்பை நின்று சுசிமனம் கோளநி னைத்தால்
சந்தேக மிலாம லிப்போ சகாயம்செய் திடவே சார்வான். (90)

சேதுக்காய்ப் பிரதிஷ்டைமேல் திரிதிகை வரைய டுத்து
நீதியா யவனைக் கோறி நினைத்தும்வா ராது போக
கோதண்ட மேந்தி நீரைக் குறைக்கவே யெண்ணங் கொள்ள
ஓதியே அபய மென்று சலபதி ஓடி வந்தான். (91)

சமுத்திராஜன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அண்டர்கள் தினமே போற்ற அலைகடல் தன்னை விட்டு
புண்ணியா மண்ணி லுற்றாய் பொறப்பாய்வி டாதே பாணம்
கண்டகர் தமைவெ றுக்கக் கடலாகோ தண்டம் கொண்டாய்
எண்ணம்போல் செயவே யிங்கு இனியேதும் தடையே யில்லை. ()

ஸ்ரீராமன் சமுத்திராஜனுக்குச் சொல்வது.

படுத்துத்தெர்ப் பையை ழைத்தும் பாராமல் வராதி ருத்தல்
அடுக்குமோ அதனைச் சற்றே அரசேயோ சிப்பாய் கண்டாய்
தொடுத்திட்ட கணையை நானும் தோசமே சும்மா விட்டால்
படித்தவை யெல்லாம் போதும் பரிகாரம் சொல்லும் முன்னே. ()

சமுத்திராஜன் ஸ்ரீராமனை துதிப்பது—வேறு.

ஆதிமூ லமென்ற யானையைக் காக்கவே
அன்றோடி வாவில்லையா
அரக்கனும் சோமுகற் கொன்றுமே தங்களோ
அயனுக்க ளிக்கவில்லையா
மாதவா இந்த்ராதி தேவர்சித் தர்வேண்ட
மந்த்ரகிரி தாங்கவில்லையா
வானவற் காய்நஞ்சை அமுர்தமு மாக்கியே
வறுமையைத் தீர்க்க வில்லையா
பாதகன் இரண்யனைக் கொன்றுமே பிரக்லாத
பாலனைக் காக்கவில்லையா
பாழான கல்லையும் பெண்ணுக்க வில்லையா
பன்காக்கை காக்கவில்லையா
நாதனேதிருவடி வீழ்ந்திட்ட ஏழைக்கு
நலம்செய்ய ஓர்பெரியதா
நான்முகன் தனையீன்ற ரகுராமபிரபுவே
நவலோக மேற்றும் வேதா. (94)

## ஸ்ரீராமன் சமுத்திராஜனுக்குச் சொல்வது.

கோதண்டம் தொடுத்த பாணம் குணவானே யெடுப்ப திப்போ
நீதியா காதே யென்று நிலைபட வில்லைச் சித்தம்
ஓதினால் தோணும் வாறு ஒன்றுமே கவலை யின்றி
வேதனை யணுகா வண்ணம் விண்ணவர் புகழச் செய்வேன். (95)

வடகடல் வாழ ரக்கர் மாண்டிடக் கணையே வென்னத்
தொடுகணை தன்னை விட்டுத் தொலைத்தனன் அரக்கர் பூண்டை
கடலிலே யணையைக் கட்டிக் கண்டகர் தலைமையொ றுக்கக்
கொடுப்பேன்நான் முதுகை யென்று கோதண்டற் போற்றிச் சென்றான்.

### அணைகட்டுதல்.

குரங்குகள் மலையைத் தூக்கிக் கொண்டுமே கடலிற் றள்ள
வரிசையாய் நீலன் வைக்க வானரர் நூல்பி டிக்க
சிரஞ்சீவி வாயு சேயன் செந்தூக்காய் மலைகள் தள்ள.
உரகடல் அணையைக் கட்டி அட்டபி மாலை யுற்றார். (97)

அலைகடல் அணையும் தீர அனைவரும லங்கை சேர்ந்து
மலையான சுவேகம் தங்கி மன்னவன் நாட்டை நோக்கி
தலையையும் அசைத்தி ராமன் தம்பிக்கு முழுதும் காட்டி
வலியான படையைக் கொண்டு வானர ரைக்காத் தானே. (98)

வீரர்கள் வந்த தோர்ந்து வேந்தனும் ராவ ணன்றான்
சாரணர் தம்மை யேவிச் சகலமும் காண விட்டான்
தீரமாய்க் குரங்காம் தூதர் தெரிந்துமே பிடித்துக் கொண்டு
காரணன் முன்னால் நிற்றக் கருணையாற் போக விட்டான். (99)

### யுத்த ஆரம்பம்.

தவத்தையே செய்து பெற்ற தசரத சேய்க ளிக்க
நவமிகா லையிலே சேனை நலமாய்நீ லன்வ குக்க
பவமது செய்தோன் றன்னைப் பார்த்துமே யிருக்க மன்னன்
சிவன்வாழும் கிரியெ டுத்தோன் சேர்ந்தானே யகழி சார்பே. (100)

எங்குமே புகழும் லங்கோன் எதிராய்நிற் கச்சுக் ரீவன்
சிங்கம்போல் அவன்மேற் பாய்ந்து சேர்த்துமே காத்தாற் பற்றி
அங்கன மோதி வீசி அகழியில் வீழ்ந்தெ ழுந்து
தங்கமாம் முடிகள் பத்தும் தாளடி சேர்த்துத் தாழ்ந்தான். (101)

ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

தனியாக யிருக்கும் காலே தருமோகீ யெதிர்த்து நிற்க
சனகன்பெண் ணை விடுத்தால் சகோதர னுவா னல்லோ
வனவாழ்வா னருமென்று வானவர் நகைக்கச் செய்தாய்
இனிமேலே செய்யும் யாவும் என்னையோ சித்துச் செய்வாய்.

சுக்ரீவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அன்னையை யெடுத்துப் போன அரக்கனைக் கண்ட தும்தான்
ஒன்றும்தோன் றுமலெற்கு உடனேயெ திர்த்து விட்டேன்
இன்றேலங் கையை யழித்து ராச்சத சேனை யோடு
மன்னன்ரா வணனைக் கொன்று மாதாவை மீட்ப தேமேல். (103)

ஸ்ரீராமன் சுக்ரீவனுக்குச் சொல்வது.

அரசனுக் கேற்ற தர்மம் அரக்கனுக் கெடுத்துச் சொல்ல
ஒருவனைத் தூத னுப்பி உண்மையை விளங்கச் சொல்லி
தருமநல் நிலையை விட்டால் தசமுகன் வாழும் நாட்டை
அரசேநாம் அழிப்போம் பின்பு அனுப்புவாய் யாரை யேனும்.

அங்கதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தசமுக னிடமே பெண்ணைத் தருணமே விடுவீ ராகில்
வசமான வார்த்தை யாலே வழிபடச் சொல்வேன் தேவா
நிசமாக வென்னை யங்கு கொல்லவே நினைப்பா னாகில்
அசையாமல் வாலாற் கட்டி அண்ணலே பாதம் சேர்ப்பேன். (105)

ஐயனு மனம கிழ்ந்து அங்கதற் கிதமும் சொல்லி
மெய்நிலை யறிந்து கொள்ள மேவலாய்த் தூது மேவ
வையகம் வானம் எற்ற வானரன் விரைவாய்ச் சென்று
வயிரமா முடிகள் கொண்ட வஞ்சகன் முன்னால் நின்றான். (106)

அனுமானோ வெனலங் கோனும் அச்சத்தால் திகைத்து நோக்க
கனமான சேனை யங்கு கலங்கியே நிற்கக் கண்டு
வனம்வாழும் அங்க தன்தான் வாலியால் பெற்ற சேயன்
தனைகாண் தூத னுப்பத் தசமுகா வந்தே னென்றான். (107)

### இராவணன் அங்கதனுக்குச் சொல்வது.

வாலியின் மகனென் றாலே வாடுதே யுள்ளந் தானே
பாலும்நீ ரும்போல் நாங்கள் பட்சமா யிருந்தோம் கண்டாய்
வாலியின் பட்டம் நிற்கு வஞ்சனைக் கொன்று மீவேன்
பாலனே கவலை வேண்டாம் பக்கமாய் வந்து சேர்வாய். (108)

### அங்கதன் இராவணனுக்குச் சொல்வது.

அன்னையை யெடுத்து வந்த அறிவில்லாப் பேயே கேளு
உன்னாலே யாமோ சொல்லும் உத்தமற் கொன்று வாழ
இன்னமு மிருக்க வெண்ணில் இராமனின் தேவி கொண்டு
பின்னாக வருவா யாகிற் பெருமையாய் வாழ்வாய் கண்டாய். (109)

### இராவணன் அங்கதனுக்குச் சொல்வது.

அங்கதா வுனக்கிப் போது அழியவே காலம் நேர்ந்த
எங்குமே புகழைப் பெற்ற என்னையா யற்பம் சொன்னாய்
திங்களை யணிந்தோன் வந்தும் திரும்பநான் விடுவ தில்லை
இங்கனம் நடக்கப் பாரு எதிராக நிற்க வேண்டாம். (110)

### அங்கதன் இராவணனுக்குச் சொல்வது.

பத்துறு தலையு மெந்தை பற்றியே யிழுத்த நாளில்
சத்யமா யிப்ப டித்தான் சதிசெய்வ தாய்த்தெ ரிந்தால்
குத்தியே உதிரம் உண்டு கோலினில் உடலை மாட்டி
நித்தியம் நகைக்க யாரும் நிலைபாகக் கட்டி வாழ்வேன். (111)

அலைபோலச் சீறி யெழுந்து அரக்கன்மா மனம்வெ குண்டு
தலைகள்பத் தலையக் கோபம் தங்காது சபையில் துள்ளி
மலைபோல நிற்கும் சேனை வானரற் கொல்லச் சொல்ல
வலியோடு சேர்த்துப் பற்ற வருவதைக் கண்டு பார்த்தான். (112)

### அங்கதன் செயல்.

கடிகடி யெனவே யங்கு கண்டகர் தமைக்க டித்து
அடிஅடி யெனவே மண்ணில் அங்கதன் அடித்துத் தள்ளி
குடுகுடு வெனவே ஓடிக் கோபுர சிகரம் பேர்த்து
பொடிபொடி யாகச் செய்து புங்கனைப் பணிந்து நின்றான். (113)

அங்கதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அத்திபோல் மேடை குந்தி அரக்கன்முன் னுகச் சென்று
எத்திசை புகழ நின்று இலங்கையை யாளச் சொல்ல
பத்துறு தலைகள் பாரில் பனங்காய்போல் விழச் செய்து
சத்யமாய் அன்னை யோடு சம்பத்தாய் வாழச் சொன்னான். (114)

அங்கதன் சொல்லைக் கேட்டு அரசனின் முகத்தை நோக்க
அங்கனம் சேனை யேவ அகழிகள் முழுதும் தூர்த்து
தங்கமா மதிலை யெல்லாம் தரைமட்ட மாகச் செய்து
சிங்கனு தம்செய் தார்த்த சேதிரா வணனும் கேட்டு. (115)

வலியான் படையை யங்கு வஞ்சகன் அமருக் கேவ
மலைபோல விரைவில் வந்து மன்னவன் படையைத் தாக்க
புலிபோல்வா னரர்கள் பாய்ந்து புவியிலே யறுத்துத் தளளி
பலம்கொண்டு நிற்ப தைத்தான் பாவிரா வணனும் கேட்டு. (116)

பேயாக அலையப் பாவி பிரகத்தன் மெல்லத் தேற்ற
சேயான இந்த்ர சித்தை சேனையைச் சபைக்க ழைத்து
நோயாம்பேய் கொண்டான் சீறி நொடியிலே ராமன் சேனை
நாயான நரிக ளுண்ண நலஞ்செய்ய ஏவி னானே. (1.7)

இந்திரசித்தன் யுத்தத்திற்கு வருவது.

சிங்கம்போல் துள்ளி யெழுந்து சேனையோ டிரத மேறி
எங்குமே அதிர வந்தே இராமனின் படையைக் கண்டு
அங்கமும் துடித்துச் சீறி அரக்கரை விடவே கண்டு
அங்கதன் அனுமா னோடு அஞ்சாம லெதிர்த்து நின்றார். (118)

கையொடிந் தனசி லர்க்குக் கால்முறிந் தனசி லர்க்கு
வயிருமே சிலர்க்குப் பீற மார்புமே சிலர்பி ளக்க
உயிரினைச் சிலரி ழக்க ஓடுவர் சிலர்க ளெங்கும்
கையில்வில் பிடித்துச் சீறிக் கண்டகன் எதிர்த்து நின்றான். ()

அனுமான் இந்திரசித்தனுக்குச் சொல்வது

சுட்டவா லைத்தான் பாரு சொகுசுடன் திருடா வந்தாய்
கட்டியே உன்னை யிப்போ காலனூர் சேர்ப்பேன் கண்டாய்
பட்டபா டதனை யென்னு பாரிலே வாழக் கோறு
சிட்டிகை உன்னைக் கொல்லச் சிறுவர்வந் தாரிப் போதே. (120)

அனுமானின் வார்த்தை கேட்டு அரக்கனும் கண்சி வந்து
வனவாழும் குரங்கை யெல்லாம் வையகம் விட்டொ ழிக்க
கனமான பாண மொன்று கையிலே யெடுக்கக் கண்டான்
தினகரன் தம்பி தானும் தேகமும் துடித்தெ ரித்தான். (121)

இளையவன் எதிர்க்க வந்து இந்த்ராதி தேவர் காண
வளமான பாணம் விட்டு வஞ்சகன் தேகம் தாக்க
கிளையான அனுமான் தாங்கிக் கீழாக ரதத்தைத் தள்ளி
உளவான மேக முட்போய் ஒன்றுமே தோன்றா தானன். (122)

இந்திரசித்தன் செயல்.

நாகபா ணத்தைத் தூக்க நடுக்கமே தேவர் கொள்ள
மேகதன் பற்க டித்து மேலாக விடவே யங்கு
சோகத்தால் லக்ம ணன்றான் சோர்ந்துமே படைப டிக்க
வேகமாய் லங்கை சார்ந்து வேந்தற்கு வெற்றி சொன்னன். (123)

பெரியதிருவடி செயல்.

மரங்களு முறிய உள்ள மலைகளு மதிர வெங்கும்
கரிகளும் கலங்கி ஓடக் கடல்நீரும் பெருகிப் பாய
வரதனும் தன்னைக் காக்க வனத்திலே கருடன் வந்து
அரக்கன்விட் டிடுபா ணத்தை அறுத்தெறிந் தாற்றி னானே. (124)

சேனையும் லக்ம ணன்றான் சேமமா யெழுந்து நிற்க
வானவர் மனம்க ளிக்க வரதனைப் பணிந்து போக
மானவன் நகைத்துப் பக்கம் மன்னவன் முகமும் நோக்க
வானர சேனை சென்று வஞ்சகன் நாடெ ரித்தார். (125)

* தூமிராக் கன்முன் னானோர் துரிதமாய் வந்து சேர்ந்து
ராமன் சேனையெ திர்த்து ரம்யமாய் யுத்தம் செய்ய
நாமத்தைத் துதிபு ரிந்து நமலோகம் சேர்த்து விட்டு
சேமத்தை யடைந்த தற்கு சிங்கநா தம்செய் தாரே. (126)

* அனுமானால் : தூமிராக்ஷன் (சுமாலி மகன்). அகம்பன் (கரன் மந்திரி). தேவாந்தன் (இராவணன் மகன்).

அங்கதனால்: வஜ்ரதம்ஷ்டன் (இராவணன் படைத்தலைவரில் ஒருவன்)

நீலனால் : பிரகஸ்தன் (இராவணன் முதல் மந்திரி)

இருபன் : மகாபார்சுவன் (இராவணன் மகன்). இன்னம் சேனைகள் முதலானோர்கள்.

அரக்கர்வே கமதாய்ச் சென்று அரசினுக் கெடுத்துக் கூற
சிரசுகள் பத்து மாடச் சீரான மாலை வாட
வரவழைத் தங்கு சேனை வானரற் கொல்லச் சொல்ல
கரிபோலத் துள்ளிப் பாய்ந்து கண்டகன் எதிர்த்து நின்றான். ()

அனுமான் இந்திரசித்தனுக்குச் சொல்வது.

கற்றிடு வித்தை கண்டேன் கள்ளமா யோடிப் போடா
பெற்றிடு புகழ்தான் இன்றே பேதையே யொழிந்து போகும்
சற்றுமே யெதிர்த்து நில்லு சங்கையு மொழியும் பின்னே
முற்றுமே மாயம் காட்டு முடியுமுன் மூர்க்கா நில்லே. (128)
குடிமகன் முன்னால் நின்று கோரமா யெதிர்த்து நிற்க
கடித்துமே பல்லைப் பின்னன் கண்டகன் முன்னால் சென்று
பிடித்துக்கை யிற்கோ தண்டம் பேயனைத் துளைத்துப் பீற
துடித்துமே மாய மாகச் சூழ்மேகம் மறைந்தான் பாவி. (129)
பிரமாத்தி ரத்தா லங்கு பிரமிக்கச் செய்து விட்டு
அரக்கனும் லங்கைக் கோடி அரசனுக் கதனைக் கூறக்
கரங்களால் தழுவி யன்னோன் கழுத்தில்முத் தாரம் போட்டு
இருபது தோள்கு லுங்க இராவணன் நகைத்தான் மாதோ. (130)
ஐயனும் தம்பி தானும் அரசனோ டொழிந்த தாக
வைகொடி நாட்டி யங்கு வைதேகி முன்னே காட்ட
வியப்பொடு சொல்லப் பேயன் விமானத்தில் கொண்டு காட்ட
மெய்நிலை மறந்தே யன்னை மீளாத துயரம் மேவ. (131)

ஜானகி புலம்புவது.

ஐயகோ! நாதா! நாதா ஐயோவு னேதாய் வாழ்வேன்
பொய்யாகி விட்ட திப்போ புண்ணியன் சொன்ன வெல்லாம்
ஐயகோ லக்ம ணா! ஓ! ஐயையோ லக்ம ணா ஓ
வையகம் வாழ்வு சொன்ன வரமுனி வார்த்தை போச்சே. (132)
அடியும்ஆ டலுமே பட்டு அலைபோல வொழியா நின்று
அடிவெட்டி அடையும் போட்டு அழகாய்மா ளிகையும் செய்து
கொடிகட்டிக் கோல மாகக் குடியேறும் நாளில் பாவம்
இடிவிழுந் தழிந்த தாக இங்ஙனம் வாய்த்த தையோ. (133)
கடலோரம் தம்பம் நாட்டிக் காற்றினுக் கசையா நின்று
உடல்கட்டி யோடங் குந்தி யுற்றவர் தமைம றந்து
கடல்பூந்து முத்தெ டுத்துக் கரையேறுங் காலை தன்னில்
வடமறுந் ததுபோ லாக வாய்த்ததே யெனக்கு மையோ. (134

வானம்அம் பால்து ளைத்து வயிரமண் டபமுங் கட்டி
வானவ ரேவல் கொண்டு வாடாத மலரும் சூடி
யானைமேல் கோலம் கொண்டு அழகாக வருகும் போது
மானின்மேல் வல்லி போல வாய்த்ததே எனக்கு மையோ. (13௦)

திருவுக்கு வீட ணன்பெண் திருமுகம் வீரம் காட்டி
வருத்தமு மனுகா தென்று வஞ்சகன் செயலைக் கூற
அருமறை தினமே யேற்றும் அன்னையும் சற்று தேற
திரும்பினார் லங்கை போகத் திரும்பியே பார்த்துச் சென்றாள். ()

மண்மீது புரண்டு சோர மாருதி முதலோ ரேங்க
புண்ணியன் சாம்பன் கண்டு பொருந்தவிட் டனுமா னைத்தான்
கண்ணைப்போல் காக்கா மலீ கலங்குவ தேனோ வென்ன
கண்டக ரெல்லாம் கொன்று கடல்வீழ்ந்து மாள்வே னென்றான்.

சாம்புவன் அனுமானுக்குச் சொல்வது.

அஞ்சிலே ஒன்றைப் பாய்ந்த அனுமந்த வீரா இப்போ
சஞ்சீவி கிரியைக் கொண்டு சமுத்திரம் தாண்டி வந்தால்
வஞ்சம்செய் பேயன் தன்னை வரதனும் விடாமற் கொல்வான்
அஞ்சாமல் விரைவாய்ச் சென்று ஐயனே கொண்டு மீள்வாய். ()

சிரமதி யனுமான் சென்று செந்தூக்காய் மலையைச் சேர்க்க
மரவுரி கொண்டு வந்த மன்னவன் எழுந்து நிற்க
கரத்தில்பின் னானைத் தாங்கிக் கண்ணிமை தட்டா மற்றான்
அரக்கனும் வருவா னென்று அனுமானும் பார்த்தி ருந்தான். ()

ஸ்ரீராமர் புலம்புவது.

சுந்தரப் பெண்கள் கோடி சுகமாகக் கிடைப்பா ரென்னைத்
தந்தைபோல் வனத்தில் காத்த தம்பிபோல் கிடைப்பா ரோதான்
இந்தவாழ் வெனக்குப் போதும் இனிமண்ணில் வாழேன் வாழேன்
வந்தபோல் வஞ்சிக் காமல் வாழவே அவன்பால் போறேன். ()

ஸ்ரீராமன் அனுமானுக்குச் சொல்வது.

மஞ்சுசூரு கடலைத் தாண்டி மாதுகண் டுயிரும் காத்து
வஞ்சனின் மாயை யாலே வருந்தின தம்பி தன்னை
சஞ்சிவி மலையைக் கொண்டு சஞ்சல மெலாமொ ழித்த
அஞ்சனை பெற்ற சேயே சிரஞ்சீவி யாகு வாயே. (141)

இளைஞ்சனும் சோகம் தீர்ந்து எழுந்தண்ணை லீப்ப ணிந்து
துளைப்பேனோர் பாணத் தாலே துட்டனை யின்றே யென்ன
கிளைகளைக் கையிற் கொண்டு கிட்டவே சேனை யங்கு
களைஞ்சன்நாட் டைய ழிக்கக் காகுத்தன் விடைகொ டுத்தான்.

வீரமாய் நாட்டில் புக்கி வீதிக ளெலாம ழிக்கச்
சாரணர் விரைவாய் ஓடிச் சாற்றவே அரக்க னுக்கு
தீர*கும் பனையே யங்கு சேனையா லெழுப்ப ஏவ
கோரமா யெழுந்து கேட்டுக் குன்றம்போல் நடந்தா னம்மா. (143)

இராவணன் கும்பனுக்குச் சொல்வது.

வானர சேனை யெல்லாம் வாயாலே விழுங்கா விட்டால்
வானவர் நகைப்பா ரென்று வாடுதே யுள்ளம் தம்பி
போனவ னல்ந மக்குப் பொல்லாங்கு நேர்ந்த திப்போ
மானன்ரா மனையும் வென்றால் மண்மீது புகழைச் சேர்வாய். ()

கும்பகர்ணன் இராவணனுக்குச் சொல்வது.

காளிக்குப் பலியாய் நிற்கும் கடாதனை தாவு மாப்போல்
வேளையே யுத்தம் செய்து விழுங்கியே படையை யங்கு
காளைரா மனையெ திர்த்துக் காலனூர் சேர்ந்து விட்டால்
நாளையே மோசம் சேரும் நம்புவாய் எனந டந்தான். (145)

ராவணன் தனையே நொந்து ராச்சதன் கும்ப னங்கு
தேவனை யெதிர்த்து நிற்கத் தேரேற நரிகள் கத்த
மூவுல கேற்றும் லங்கை முடிவாக வழியு மென்று
சீவனை விடத்து ணிந்து சேனையோ டெதிர்த்து நின்றான். (146)

கும்பனும் வந்து நிற்கக் குரங்கெனும் படைக லங்க
சிம்மம்போல் கர்ச்சனை செய்யச் சேனைகள் சிதறி யோட
உம்பரின் பெருமா னங்கு உருவம்கண் டேதி கைக்க
கம்பீர விபீட ணன்தான் காகுத்தன் தனையே நோக்கி (147)

விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

எனக்குமூத் தவனே யாகும் இலங்கையோற் கிளையா னுகும்
கனமான பலமும் கொண்டே கண்டகன் நிலையாய் நின்றான்
வனம்அழிந் ததனைக் கேட்டு மாதாவை விடவே சொல்ல
மனம்போல நடவா தாலே மண்ணையே வெறுத்து வந்தான். (148)

---

* இராவணன் தம்பி.

ஸ்ரீராமன் விபீஷணனுக்குச் சொல்வது.

கண்டக னலைஎன வீணையக் காகுத்தன் முன்னல்
விண்ணவர் துணையா னாலும் விடாதுதுட் டனையும் கொல்வேன்
அண்ணனும் கும்ப னுக்காய் அணுவுமே கலங்க வேண்டாம்.
எண்ணம்போல் வருவா னானல் இலங்கையில் வாழச் செய்வேன்

கும்பனும் படையெ திர்க்கக் குரங்குமன் துடித்து நின்று
கம்பீர யுத்தம் செய்யக் கண்டகன் பிடித்துக் கட்டி
நம்பின அண்ண னுக்கு நலம்கூற லங்கை போக
சிம்மத்தின் குகையாம் மூக்கைச் சேரவே கடித்து வந்தான். (150)

மூகவன் மூக்கை நீத்து முகமோடு விழிக்க வெள்கி
தேகத்தை விடத்து ணிந்து தேவனை யெதிர்க்கப் பின்னும்
வேகமாய்த் திரும்பி வந்து வீரரைக் கரத்தால் தாவி
ஏகமாய் விழுங்க வுள்ளே யாவரு மோடி னரே. (151)

சிலரும்நா சித்து வாரம் சிலருமே செவித்து வாரம்
நலமாக வெளியே வந்து நாதனைச் சரண மாக
தலையையு மசைத்தி ராமன் தசமுகன் தம்பி யின்றன்
மலைபோலாம் சிரசை யண்ணல் மண்மீதி லறுத்தெ றிந்தான்.(152)

கும்பனும் விழுந்த தோர்ந்து குரங்கினம் களித்துக் கூட
தம்பிவீ டணனும் வாடத் தசரதச் செல்வன் தேற்ற
அம்பினை ஏவிப் பின்னன் அரக்கரை யெல்லாம் கொல்ல
நம்பின லங்கை யோற்கு நடந்ததைக் கூறச் சென்றார். (153)

இராவணன் தூதற்குச் சொல்வது.

கும்பனின் வெற்றி தன்னைக் கூறவந் தீரோ இங்கு
எம்மாத்ரம் ராமன் சேனை இன்றேதான் சுகத்தைப் பெற்றேன்
தம்பிவீ டண னிப்போது தசமுகன் நாடு வந்தால்
நம்பின ராமன் சார்பே நலம்பெறச் சொல்லு வீரே. (154)

சாரணர் இராவணனுக்குச் சொல்வது

வானரப் படையை யெல்லாம் வாரியே விழுங்கும் போது
சேனைக்காய்ச் சுக்ரீ வன்றான் தீரமா யெதிர்க்கக் கட்டி
பானுபோல் வேக மாகப் பாதகன் மூக்கைப் பேர்த்து
மீனவன் தனையெ திர்த்து மண்மீது விழுந்தா னையா. (155)

கும்பனும் மாண்டா னென்று கொடியவன் கேட்ட போதே
தம்பியே! கும்பா வென்று தளர்ந்துமே மண்ணில் வீழ்ந்து
சிம்மம்போற் கதறி யங்கு சிலைபோலப் படுக்கக் கண்ட
சம்மோகன் மகோத ரன்றான் சயந்தரத் தேற்றி னானே. (156)

மகோதரன் மன்னை வாரி மார்போடு தழுவிக் கொண்டு
சகோதரன் மாண்ட தாலே சயத்தையும் தராமற் போகா
சகோதிரம் தாண்டி வந்த சகலநற் படையும் கொன்று
சுகோசமாய் வாழச் செய்வேன் சோகத்தை விடுவீ ரென்றான். ()

அரக்கனு முள்ளம் தேறி அதிகாயன் முதலா னோரை
வரவழைத் தவையும் சேர வரதனின் செயலைக் கூற
நரரையே யெதிர்த்து நின்று நமனாரைச் சேர்ப்போ மென்று
துரிதமா யோடி வந்து தொலைந்தனர் தம்பி யாலே. (158)

அதிகாயன் முதலா னோர்கள் அயோத்திச்செல் வன்னால் மாள
பதியான லங்கை மன்னன் பார்மீது படுத்துச் சோர்ந்து
விதியின்றன் பயனை நொந்து வீரனும் இந்த்ர சித்தை
சதியேனும் செய்து கொன்று சயம்பெற்று வருவா யென்றான்.

ராமனின் படையைத் தாக்க ராவணச் செல்வன் பாய்ந்து
தாமதம் செயாம லங்கு தம்பியை யெதிர்த்து நிற்க
ராமபா ணத்தை விட்டு ராக்கனை நோகச் செய்ய
சாமவே தனையால் நொந்து தக்கணம் லங்கை சென்றான். (160)

நோய்பட்ட வரக்க னுந்தான் நொந்துரா வணனை விட்டுப்
பேயான வரக்க னாலே பேதையா யாகித் தன்றன்
மாயமந் திரத்தால் காட்டி மாதாவாம் சீதை போலக்
காயாம்பா ருங்கள் என்று தம்பியின் முன்னாற் கொன்றான். (161)

அரக்கனின் செயலைக் கண்டு அனுமானும் துடிது டித்து
உரகம்போல் மேற்கி ளம்பி உடல்ஆவி பதறித் தாக்க
கரத்தாலே துடைத்துக் கொண்டு கண்டகன் லங்கை போக
வரதன்பால் வந்து சேர்ந்து வலைபட்ட மான்போல் நின்றான். ()

லக்ஷ்மணன் புலம்புவது.

மாயமா னென்று ரைத்து மாதாகே ளாமற் பொல்ல
பேயனின் கையில் மாளப் பின்னைத் தரத்தி விட்டாய்
சேயன்வந் தாலிப் போது சேர்த்திடு வேன்கா லன்வரர்
காயத்தை யிங்கு விட்டுக் காணவே வருவே னங்கு. (163)

ஸ்ரீராமன் புலம்புவது.

இன்னலோ டாவி போனால் இனியேது செய்வே னையோ
அன்னையு மரசும் வேண்டேன் அவனியில் சற்றும் வாழேன்
மன்னன்றே வியினா லன்றோ மனைவியை நீங்க லாச்சு
பின்னொன்சொல் தட்டி நின்ற பேதமை மாண்டா யந்தோ. (164)

விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

நிகும்பலை யாகம் செய்ய நினைத்திந்த மாயம் செய்தான்
தகுமோஇப் படிநீ வாடத் தாய்க்கொரு பழுது மில்லை
நிகும்பலை முடியு முன்பே நீக்காவிட் டால்மண் விட்டு
வகையேது மில்லைப் பின்னால் வஞ்சனைக் கொல்லத் தேவா. (165)

லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

தசரத செல்வ னென்று தரணியில் எங்கும் வாழ்த்த
தசமுகன் மகனைக் கொல்லத் தடையேது மில்லை அண்ணா
திசைபுகழ் பெற்ற கோவே தேங்காது விடைய ளித்தால்
வசமாக யெதிர்த்து நின்று வானுல கேற்றி வாரேன். (166)

ஸ்ரீராமன் விபீஷணனுக்குச் சொல்வது.

தந்தைபோல் கட்டிக் காத்த தம்பியைத் தனியாய் விட்டால்
மந்திரம் கற்ற பேயன் மாயமென் செய்கு வானோ
இந்திர சித்தி ருக்கும் இடத்திற்கு நானே சென்று
சந்தேக மின்றிக் கொல்வேன் சமயமே கொடுசேர்ப் பாயே (167)

விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

அற்பனைப் பொருட்டா யெண்ணி அண்ணாவே தேவர் போக
சற்றுமே பிடிக்க வில்லைத் தம்பியும் நானும் சென்று
விற்பிடி இந்த்ர சித்தை விண்ணுல கேற்றி விட்டு
குற்றமே யனுகா திங்கு கொடுவந்து சேர்ப்பே னென்றான். (168)

தசமுகன் மகனைக் கொல்லத் தம்பிலக் மணனை வாழ்த்தி
அசையாது சற்று நின்று அனுமானைத் துணைய னுப்ப
விசையாக நடந்து சென்று வீரனும் யாகம் செய்யும்
திசைதனை வந்து சேர்ந்து திகைத்தங்கு நின்று விட்டார். (169)

### இந்திரசித்தன் நிகும்பலை.

நேர்மையாய்க் கிளைநு னியில் நீர்த்துளி நுழையா வண்ணம்
நார்கொண்டு கோட்டை கட்டு நலமான பறவை யேபோல்
கார்வண்ணர் குலம்வி ளங்கக் கறந்தஇந் திரசித் தும்தான்
சீர்பட யாகம் காக்கச் சேனைநே மித்தான் மாதோ. (170)

யானைகள் முதலாம் பந்தி ஆயுதம் கொண்டா ரோடு
வானத்தை யெட்டும் ஒட்டை வரிசையா யிரண்டாம் பந்தி
சேனைகள் சூலம் கொண்ட தீரர்கள் மூன்றாம் பந்தி
கானத்தில் திட்டம் செய்து கண்டகன் யாகம் செய்ய. (171)

எருதுடன் பன்றி யானை எதிராக வொன்றில் நூறாய்
அரக்கனும் பலிகொ டுத்து அக்கினி வளர்த்தி யங்கு
வரிசையாய்த் தீபம் நாட்டி வகையான மேடை குந்தி
கருமணி கையிற் கொண்டு காளியைச் செபித்தி ருந்தான். (172)

### அனுமான் செயல்.

அனுமனும் சேனை யங்கு அடர்ந்திருப் பதனைக் கண்டு
கனமான கிளையு மொன்று கரத்தினில் பிடித்துக் கொண்டு
மனம்போல வெதிர்த்துக் கொன்று மன்னன்யா கத்தைச் செய்யும்
வனமதில் காட்சி யெல்லாம் வரிசையாய்ப் பார்த்து நின்றான். (173)

பாலோடு தயிரு மங்கு பாங்கொடு வைக்கக் கண்டு
வாலோடு சேர்த்துக் கட்டி வானத்தில் சுழற்றி விட்டு
தோலோடு தொங்கி நிற்ப தூக்கிமேல் வீசி விட்டு
சூலோடு வீழ்ந்த பேரைச் சுந்தரன் நகைத்தான் பார்த்தே. (174)

பொன்மய மான தேரும் புறப்பட யாகம் தன்னில்
பின்னாக நடந்து சென்று பிளந்திட வதின்மேற் பாய்ந்து
குன்றுபோல் குதித்துப் பீறிக் கோலமா யழித்து விட்டு
துன்பத்தைக் கொடுத்து வந்த துட்டனைக் கண்டு சூழ்ந்தான். ()

### அனுமான் இந்திரசித்தனுக்குச் சொல்வது.

தவத்தையு மெச்சினேன் கேள் தாவேவவந் தேன்வான் உன்னை
பவங்களெல் லாமே தீரும் பாரைநீ விடுத்தொ ழிந்தால்
நவமணி யேனோ பேயா நமனிடம் சேரு நில்லாய்
புவனயா கம்செய் போதும் புதைக்கவந் தேன்இப் போதே. (176)

காயாகக் கனிபோற் சாகக் கண்டகா மறைந்த போதும்
காயாம்பூ வண்ணன் தம்பி காலனூர் சேர்க்கா மீதகார்
வாயாரத் துதித்த மந்த்ரம் வழிபட உன்னை யிப்போ
பேயாக வலையச் செய்யப் பின்னுகைப் புண்யன் வந்தான். (177)

கண்டக னெழுந்து நின்று காகுத்தன் தூதற் பார்த்து
விண்ணவர் புகழ்ந்த தெல்லாம் வினையாலே யொழிந்த தென்று
எண்ணுக தெல்லா மெண்ணி இலங்கைமா யமதாய்ச் சென்று
கண்யலக் மனையெ திர்க்கக் கால்படை கொண்டு வந்தான். (178)

இந்திரசித்தன் விபீஷணனுக்குச் சொல்வது.

தந்தைக்குத் தம்பி யாயும் தருமமெல் லாம றிந்தும்
சுந்தர மாமோ சொல்லும் சூதாக வெனைக்கெ டுக்க
பந்தைப்போல் சரத்தால் வாரிப் பார்மீது மோதிக் கொன்று
வந்தவற் கொல்லா விட்டால் வானவர் நகைப்பார் கண்டாய். (179)

விபீஷணன் இந்திரசித்தனுக்குச் சொல்வது.

காமத்தா லழியும் அந்தக் கயவற்குப் பிறந்த தாலே
நாமமா யிரங்கி வந்த நாரணன் தனைப்ப கைத்தாய்
சேமத்தைப் பெறவே யெண்ணிச் செல்வனை சொல்லை விட்டான்,
சாமத்தா லழியா தாகச் சனகியைச் சேர்க்கச் சொல்வாய். (180)

இந்திரசித்தன் செயல்.

அரக்கனும் சூலம் தூக்க அண்டர்கள் தூர மோட
இரவதே பகலாய்க் காண இலங்கேசன் தம்பிக் கேவ
பரிந்தனு மான்சூ லத்தைப் பற்றியே உடைக்கச் சேர்ந்த
அரவம்போல் சீறிப் பாய அயோத்திச்செல் வனுமே தாக்கி. (181)

லக்ஷ்மணன் இந்திரசித்தனுக்குச் சொல்வது.

பேயான வரக்கன் சேயாய்ப் பிறந்ததா லறத்தை விட்டு
நாயாக அலையத் தந்தை நற்றுணை மேற்சூல் விட்டாய்
மாயாசீ தையை வெட்டி மண்மீது வாழப் பார்த்தாய்
ஏயாது இனிமேல் நீயும் சாகாது பிழைப்ப தில்லை. (182)

இந்திரசித்தன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

இன்றேநீ யொழியும் காலம் இளைஞ்சனே நேர்ந்த தாலே
என்னையே யெதிர்த்து நின்றாய் இராமனைக் காண மாட்டாய்
இன்னமோர் முகூர்த்தத் துள்ளே எமனூரைச் சேர்க்கா விட்டால்
மன்னன்ரா வணன்சீர் பெற்ற மகனென வெண்ண வேண்டாம். ()

லக்ஷ்மணன் இந்திரசிந்தனுக்குச் சொல்வது.

மன்னவ உன்னோ டாகி மண்ணொடு விண்ணும் வந்து
என்னையே யெதிர்த்து நின்று எவ்வித அமர்செய் தாலும்
நின்னைய மாக நின்று நேரெம னூரைச் சேர்த்து
பின்னுமுன் கோனைக் கொல்வேன் பேதையே யறியா யென்னை. ()

கண்டகன் கண்கள் பொங்கக் கரத்தினில் விற்பி டித்து
புண்ணியன் மார்பு நேராய்ப் பொருந்தவே பாணம் ஏவ
அண்டர்கள் பயந்து மோட அனுமனு மொடித்துத் தள்ள
அண்ணனின் நாமம் போற்றி ஆர்த்தன னிளைய னம்மா. (185)

ஒன்றெனப் பத்து நூறு ஒருகோடி வீர னேவ
துன்பமே யுளத்திற் கொண்டு துரிதமாய் வில்லை யேந்தி
மன்னவன் இந்த்ர சித்தன் மானவன் தன்னை வெல்வான்
முன்னாளில் சுரரை வென்ற முதற்கணை ஏவிச் சோர்ந்தான். (186)

முழுதுடல் பிளந்து சில்லோர் முடிதலை யற்றார் வீழ்ந்தார்
புழுகென சிலர்து டித்தார் புரண்டுயிர் சிலர்கள் விட்டார்
கழுகுக ளங்கு கூடிக் கலந்துமே குடிக்க ரத்தம்
கொழுத்தபேய் கள்பி ணத்தைக் கூத்தாடித் தின்ற தாமே. (187)

வாயுவாம் இடியாம் பிர்ம வருணஅத் திரங்க ளங்கே
ஓயாமல் விடுத்து நிற்க ஒன்றும்தோன் றாமல் கண்டன்
பேயொடு கழுகும் கூடிப் பிணத்தைத்தின் பதனைக் கண்டு
நாயுமே மதியா நம்மை நாட்டினி லெனத்தெ ரிந்தான். (188)

இரவுமூன் றாகச் சோரா தெதிர்த்துமே யுத்தம் செய்தும்
மரவுரி கொண்டு நிற்கும் மன்னனை வெல்ல வொண்ணான்
அரசரின் தனய ரானு லிலகடல் தாண்ட மாட்டார்
வரந்தரும் தெய்வ மிங்கு வந்ததாய் வாடி னானே. (189)

லக்ஷ்மணன் இந்திரசித்தனுக்குச் சொல்வது.

ராகவன் தம்பி தன்னை ராச்சதா வெதிர்ப்பா ருண்டோ
வேகமாய் முன்னால் வந்த வீரத்தை யெங்கண் விட்டாய்
மேகம்போய் மறைந்த போதும் மீள்வதா யெண்ண வேண்டாம்
சாகவே வழிதே டாமற் சட்டென லங்கை சேர்வாய். (190)

இளையவன் சொல்லைக் கேட்டு இந்திர சித்தன் சீறி
களையுமே தேறி யெழுந்து கண்களை யுருட்டி நோக்கி
வளமான பாண மொன்று வலியாக விடுக்க வங்கு
சளையாது பாணத் தோடு தலையையு மறுத்தான் தம்பி. (191),

அமரர்கள் வானம் நின்று அயோத்திச்செல் வனையும் வாழ்த்த
சமையமே ராமன் பக்கம் சரத்தொடு சேர்ந்து போக
கமைகொள்அண் ணனைத்து தித்துக் கண்டகன் முடிவை யோதக்
கமலனும் தம்பி தன்னைக் கரமதால் தழுவி னானே. (192)

இரவினில் திரியோ தேசி இளையவன் தன்னால் மண்ணில்
கரிபோல விழவே கண்ட கண்டகர் கலங்கி யங்கு
துரிதமா யிலங்கைக் கோடித் தொழுதுமன் னன்பா தத்தை
அரசால்மாண் டதனைக் கூற அச்சமே கொடுநி கைத்தார். (193)

இராவணன் தூதருக்குச் சொல்வது.

இந்திர சித்தை நேர்ந்த இளைஞனும் விழுந்தா னென்று
சந்தேக மிலாது சொல்வேன் சாற்றுவீர் நடந்த வாற்றை
முந்தின வினையின் செய்கை மூண்டதா லிலங்கை மாண்டான்
இந்தநற் கணமே சேயை என்னிட மழைப்பீ ரென்றான். (194)

தூதர் சொல்வது.

சுட்டவோர் குரங்கு தானும் சுந்தர யாகம் சாய்த்துக்
கட்டொடு நின்ற சேனை காலனார் சேர்த்துச் சீற
எட்டுறு திசைக ளஞ்ச இந்திர சித்தெ திர்த்துப்
பட்டனன் இளையான் கையால் பாவிவீ டணன்கோ ளாலே. ()

குடிமகன் மாண்டா னென்னக் கொடுஞ்சொலைக் கேட்ட போதே
படிமீது சோர்ந்து ருண்டு பதறியே புலம்பி வீழ
படுத்தவன் கண்வி ழித்துப் பலவாறு பாடி யாடி
இடிபோலே குமுறி னானே இலங்கைமன் றேவி கேட்டு. (196)

மண்டோதரி புலம்புவது.

எப்படி மனம்து ணிந்தாய் என்னையும் பிரியச் சேயே
இப்படி வாய்க்கு மோதான் இனியேது சொல்வேன் கண்ணே
தப்பால்தீ தாகு மென்ற தம்பியின் உறுதிச் சொல்லை
ஒப்பாமல் போன தாலே உனக்குமே வாய்த்த துன்பம். (197)

தேவரை வென்ற செல்வா திருமுடி மண்ணில் வீழ
ஆவிதீர்ன் துடிக்கு தையோ அப்பனே ஏதாய் வாழ்வேன்
தேவர்கள் காண லங்கை தீயிட்ட போதே அஞ்சி
பாவிநான் உரைத்த வாறே பாலனே முடிந்த திப்போ. (198)

இராவணன் புலம்புவது.

இந்திரன் தனைச்செ யித்தோன் எப்படி மறந்தா யென்னை
இந்தவா றாமே யென்று எனக்குமோ தோன்ற வில்லை
தந்தைபோ லெங்கும் போற்றத் தரணியை யாள்வா யென்று
சுந்தரா நம்பி வாழ்ந்தேன் சூதுசெய் தாயே சேயே. (199)

தம்பிசொல் வார்த்தை யெல்லாம் தடைசெய்து விட்ட தாலே
கும்பனு முனைப்பி ரிந்து கொடுமையாய் மாள லாச்சு
சம்ப்ரம வாழ்வு யாவும் சீராமன் தேவி யாலே
பம்பரம் போலே மாளப் பாலனே நேர்ந்த தெற்கே. (200)

கண்முன்னே யிருப்ப தேபோல் காணுதே யெனக்குக் கண்ணே
விண்ணவர் நகைக்க வென்னை விட்டுப்போ வதுவு மாமோ
பண்ணின பாவந் தானோ பாலனே பிரிந்தி ருக்க
அண்ணாவென் றழைப்ப தெப்போ அப்பனே ஏது செய்வேன். ()

மண்டோதரி இராவணனுக்குச் சொல்வது.

அக்கினிக் கொழுந்தைக் கொண்டு அழகாக வாழப் பார்த்து
தக்கதாய்ப் பெற்ற சேயைத தரைதனில் விட்டீர் நாதா
துக்கத்தால் வாடாய் வீணே துரிதமாய்க் கொண்டு சேர்த்தால்
எக்காலும் வாழ்ந்து நிற்க இராமனும் கிருபை செய்வான். (202)

அயனை உந் தியினில் பெற்ற ஆதியே ராம னானன்
சயத்தையும் பெறவே மாட்டீர் சனகியை விடாமற் போனால்
மயங்கியே மன்ன னங்கு மரம்போல திகைத்து நிற்க
வயசதி கொண்டோ னங்கு வஞ்சனைக் காண வந்தான். (203)

### இராவணன் மகோதரனைப்பார்த்து துக்கிப்பது.

இந்திர சித்தை விட்டேன் இலங்கையை யாண்டு வந்தும்
இந்திரன் கண்டா லென்னை ஏதாக வேசு வானோ
மந்த்ரத்தில் வாழ மாட்டேன் மகனைவிட் டெப்பி ரிந்து
தந்திரம் சொல்லு மிப்போ தசரதன் சேயைக் கொல்ல. (204)

### மகோதரன் இராவணனுக்குச் சொல்வது.

அண்டர்கள் நகைக்க விப்போ அழுவது மழக தாமோ
எண்ணமும் தவற லெல்லாம் இலங்கையிற் பிறந்தா னாலே
புண்ணாகா மல்வீ ணைகப் பொருந்தியே நிற்பீ ராஞல்
கண்யமாய் நாளைப் போழ்தில் காகுத்தன் படையைக் கொல்வேன்.

தலைவினை யங்கு தேற்றித் தசமுகன் மனமும் தேறி
மலைபோல வாழும் சேனை மன்னவன் வரவ ழைத்து
வலியாக வெதிர்த்து நாளை வானர சேனை முற்றும்
அலைகடல் தன்னிற் சேர்த்து ஐயனை யொழிக்கச் சொன்னான். ()

### மூலபல யுத்தம்.

சதுர்த்தசி மூல சேனை தரணியுங் கிரிகள் சாய
அதிர்ச்சியில் விண்மீன் வீழ அலையடி கடலும் வற்ற
எதிர்த்திட முடியா தென்று இந்த்ராதி தேவர் வாட
கதிர்ப்படு தூசி மூடக் கண்டகர் கிளம்பி னரே. (207)

*வேகமா யெங்கும் தாவும் வெங்கல ரதங்கள் கோடி
வாகனம் தன்னிற் சேனை வரிசையாய்க் கோடி யாக
சோகம்வீ டணனும் கொள்ளச் சுந்தரன் நகைக்க வூழி
நாகம்போற் படைகள் சீறி நாற்புறம் சூழ்ந்து நிற்க. (208)

இடிமேலே யிடியைப் போல இராமனும் கணைதொ டுத்து
அடிமேலே யடிகள் பட்டே அரக்கர்கள் சிதறி மாள
படிமேலே முடிகள் வீழப் பர்வதம் கிடுகி டென்ன
படைமேலே படைகள் மேவப் பஞ்சுபோற் பறக்க டித்தான். ()

---

*யானைகள், குதிரைகள், ரதங்கள், சேனைகளின் மொத்தம 176,41,80,000. பகல் 15 நாழிகைக்குமேல் 22½ நாழிகைக்குள் ஸ்ரீராமர் தனியாய் நின்று சம்மரித்தார்.

தூதர்கள் விரைவாய்ச் சென்று துட்டரா வணற்குச் சொல்ல
பூதம்போல் மண்ணில் விழுந்து புரண்டுமே கதறி யங்கு
வேதனை யாலே நொந்து வினையாலே தேறி மீண்டும்
மாதவன் தனையெ திர்க்க வந்தனன் இரத மேறி. (210)

வலியாம்ரா வணனும் வந்து வானரப் படையைக் கண்டு
தலைகள்பத் தலையத் தம்பி தன்னையும் துடித்து நோக்க
மலைபோல வெதிர்க்க வந்த மன்னைச்சுக் ரீவன் கண்டு
அலைபோலத் துள்ளி யோடி அரக்கன்முன் னாக நின்றான். (211)

சுக்ரீவன் இராவணனுக்குச் சொல்வது.

பெண்களைக் கண்டால் அஞ்சிப் பேயுமே யிரங்கும் பேதாய்
விண்ணோரை வென்ற மன்னு விளைவதெண் ணாது செய்தாய்
அண்டத்தி லொளிந்த போதும் அலைகடல் தங்கி னாலும்
கண்டகா விடாமற் கொல்வார் கர்த்தன்தே வியைவிட் டிப்பாய். (212)

அனுமான் இராவணனுக்குச் சொல்வது.

சுட்டதோர் குரங்கு நானே சொல்வதைச் சற்றே கேளு
சட்டமா யுன்னை யிப்போ தடையில்லைக் கொல்லத் தானே
எட்டுறு திசையின் கீர்த்தி இன்றோடே யொழியும் சீறில்
கெட்டுப்போ காதே தாயைக் கேசவன் முன்னே சேர். (213)

திருபடி லங்கை யென்று தேவரால் புகழப் பெற்று
உருபடி தலையும் பத்தாய் உலகினிற் பெருமை கொண்டு
பெருபடி குந்து மன்னு பெம்மான்ரா மன்சீர் கொண்ட
திருவடி பொடியும் தாங்க தீவினை யொழியு மன்றே. (214)

அங்கதன் சொல்வது.

வாலியின் மகன்நான் கேளு வாளும்வில் லேனோ வீணாய்
மாலையை யணிந்தும் தேராய் மாளவந் தாயோ சொல்லு
காலமா றிறதே பாவி கர்த்தனை யேற்ற நில்லு
ஓலையும் கிழியும் முன்னே ஓடியே வருவாய் கொண்டே. (215)

லக்ஷ்மணன் சொல்வது.

தேவரை வென்ற கர்வம் தீரமாய் மதித்துக் கெட்டால்
பாவியே உனைத்தா னந்தப் பஞ்சவடி கண்டி ருந்தால்
மூவுல கொன்றா னாலும் முடிகள்பத் தையுமே தள்ளிக்
காவலைக் கடந்த தற்கு காதகா வதையும் செய்வேன். (216)

வல்லமை மயக்கிக் காட்ட வரிசைசகளோடு நின்றாய்
புல்லாக மதித்து விட்டேன் பூச்சுக்கா யஞ்ச மாட்டான்
வில்பிடி வீர னென்று விண்ணவர்க் காக்க வந்தான்
பல்லிபோல் பாய்ந்தொ ளிந்து பட்டதை மறந்து வந்தாய். (217)

கொடியதோர் செயலைச் செய்தும் கோபத்தை விடுத்தார் அண்ணா
அடிபட்டு மாளாய் வீணே அன்னையை விடுக்க நிற்பாய்
முடிகள்பத் தையுமே காட்டி முன்னாலஞ் சாது நின்றால்
பொடிபொடி யாகச் செய்வேன் பொருந்தாது சேர்த்துப் போவாய். ()

சாம்புவான் சொல்வது.

வாலியும் கடலி லன்று வலியொடு வாலால் கட்டி
பாலன்அங் கதனும் ஈர்க்கப் பட்சிபோல் தொங்க விட்டோன்
காலனூர் வாழச் செய்தார் காகுத்தன் கணையொன் றாலே
காலத்தைப் போக்கா தேநீ கண்யமாய்த் தாயை யீவாய். (219)

மந்தரம் கடையும் நாளில் மன்னவா நானி ருந்தேன்
பந்துபோல் மலையைத் தாங்கும் பகவானே யிவரே கண்டாய்
சுந்தரன் கானில் உன்மேல் சுழல்பாணம் விடுகு முன்னே
வந்ததை நன்றாய் யோசி மாதாவைக் கொடுசேர்ப் பாயே. (220)

அக்கினிக் கொழுந்தை யன்று அடவியி லெடுத்த போதே
அக்காலம் சபிக்கா துன்னை அன்னையும் விடுத்த தைப்பார்
மக்களோ டுறவே யெண்ணில் மாதாவை விடுப்பாய் மன்னா
எக்காலும் நகைக்க வெண்ணில் எதிர்த்துநில் இறைவ னேடே. ()

ஸ்ரீராமன் இராவணனுக்குச் சொல்வது.

வில்லையும் கரம்பி டித்து வீணாக வெதிரில் வந்தாய்
செல்லாது உனது மாயம் சீ! ராமன் முன்னா கத்தான்
கொல்லாது விடவே மாட்டேன் கொடுத்திடு சீதை யைத்தான்
நில்லாதே சென்று வாபோ நிலையாக வாழ நிற்பாய். (222)

இராவணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது

அருந்தவத் தாற்பி றந்து அரக்கனின் நாடு புகுள
பிரமனால் விதித்த தாலே பேரையென் னாலும் வந்தாய்
ஒருகணை யாலே சேனை ஒருமிக்கக் கொன்று னும்மென்
பெருமைக்கே டாகா தென்று பிடித்தனன் வில்லைப் பாரே. (223)

ஸ்ரீராமன் இராவணனுக்குச் சொல்வது.

கட்டொடு நின்ற சேனை காலனூர் சேர்ந்த தோர்ந்தும்
பட்டியின் நாயைப் போலே பாதகா குரைத்து நின்றாய்
எட்டுத்திக் கொன்றாய்க் கூடி எனையெதிர்த் தேநின் றாலும்
எட்டிய வடிபே ராமல் எமனூரைச் சேர்ப்பேன் கண்டாய். (224)

இராவணன் செயல்.

இருபது கண்சி வக்க இராமனை யுற்று நோக்கி
குரங்குச்சே னையை யங்கு கொல்லவே கட்டளை செய்து
தருமத்தின் நிலையை விட்டுத் தசமுகன் மண்டி யிட்டு
கரத்தில்வில் லைப்பி டித்துக் கனமான பாணம் விட்டான். (225)

ஸ்ரீராமன் செயல்.

அரக்கனும் பாணம் ஏவ அண்டராற் போற்றும் ஈசன்
கரத்தில்கோ தண்ட மேந்திக் கனமான ரதமு டைத்து
இருபது தோளும் கொண்ட எல்லாயு யுதமும் தள்ளித்
துரிதமாய் பாணம் விட்டுத் தொலைத்தான்சே னையை மாதோ. ()

லக்ஷ்மணன் செயல்.

புண்ணியன் இளைஞ னங்கு பொருந்தின கிரீடம் பத்தும்
மண்மீது சிதறத் தள்ளி மன்னன்ரா வணனை நோக்கி
அண்டத்தை நகத்தால் பேர்க்க அலைந்தோடி யிங்கு வந்து
விண்ணவர் நகைக்க நின்ற விதமேதோ சொல்வா யென்றான். ()

இராவணன் செயல்.

இருபது தோளும் கொண்ட எல்லாயு யுதமும் ராமன்
இரண்டுதோ ளால றுத்தான் இராவணன் றனைந கைக்கக்
கரத்தின்வே கந்தா னென்ன கயிலைதாங் கியவல் வீரன்
புரமெல்லாம் செயமும் பெற்றுப் பொருந்திய வாழ்வு போச்சே.

தலைகள்பத் துளவே யிந்தத் தரணியில் வீர னாகி
அலைகடல் லங்கை யென்று அண்டர்கள் பயந்த தென்னை
கலைமகள் நாதன் நம்மைக் கண்டாலும் கலங்க வாழ்ந்தும்
நிலையாக நின்றோ மென்று சிந்தித்தான் அரக்கன் மாதோ. (229)

## ஸ்ரீராமன் இராவணனுக்குச் சொல்வது.

இடையில்கட் டியபேர் வாளும் இருபால் தோட் படையும் யாவும்
பொடிப்பொடி யாக விந்து புவியினில் விழுந்த தோடு
படையும்மக் களுமே தோற்றாம் பாதகா வேனே நிற்பாய்
நடையாக லங்கை சேர்ந்து நாளையே வருவாய் கண்டாய். (230)

## இராவணன் செயல்.

அரனரின் கிரியைத் தாங்கும் அழகான தோள்கள் யாவும
சுருளல்போரில் துவளப் பாவி சுர்தர வாடை சோர
சிரசுகள் மண்ணை நோக்கச் சீமெதெல் லாமொ ழிந்து
அரியதோ விதியும் என்று அரக்கனும் நடந்து சென்றான். (231)

மன்னவன் லங்கை சேர்ந்து மகோதான் தன்னைக் கண்டு
இன்றோடே யொழிந்த யாவும் இனியேதாய் வாழ்வே னென்னப்
பின்னாக வந்தா னேலே பிழையது நேர்ந்த மன்னு
துன்பமு மொழிய இன்றே தொலைப்பேன்ரா மனையு மென்றான்.

அரக்கரின் சேனை யந்த அயோத்திச்செல் வனையும் தேடி
ஒருவர்பின் னொருவ ராகி ஓடி வந் தெதிர்த்து மாள
மரமபோல மண்ணில் வீழ்ந்து மன்னவன் புரண்டு சோர
அரனரின் வரத்தை யெண்ணி அசையாமற் படுத்தி ருந்தான் (

கங்கையின் முதலை தப்பிக் கரைசேரச் சோர்ந்து சாய
சிங்கமென் றெதிரே சேரச் சிந்தித்துப் புதரில் சேர
அங்கனம் நாகம ஏற அலைந்தோடி நதியில் வீழத்
தங்கம்கண் டுருளும வாழ்வில் தசமுகன் துள்ளி நின்றான். (234)

---

## யுத்தத்தில் மடிந்தவர்கள் விபரம்.

அனுமானால் : திரிசிரன (இராவணன மகன்) நிகும்பன், (கும்பகர்ணன் மகன்)

அங்கதனால் : மகாபார்சுவன்: (இராவணனுடைய சிறியதாய் புத்திரன்.)

நீலனால் : மகோதரன் (இராவணன் சிறிய தாய் புத்திரன்)

சுக்ரீவனால் : கும்பன் (கும்பகர்ணன் மகன்) விருபாக்ஷன் (மாலியவந்தன் மகன்)

லக்ஷ்மணனால் : அதிகாயன் (இராவணனுடைய மகன் பிரமதேவனிடத்தில் அவத்திய கவசம் பெற்றவன். இவன் தாய் தானியமாலினி ஓர்பசாசு).

ஸ்ரீராமனால் : மகாக்கண்ணன் : (கரன் மகன்)

சேனைகளால் : விகடன், நக்னன், சபனன், அதமன், ஜங்கன், ரசமிகேது, கம்பன், நராந்தகன் முதலானோர்கள்.

தவத்தையே செய்து பெற்ற சகலஅத் திரமுங் கொண்டு
பவளமா ரதத்தி லேறப் பனிபோலக் கழுகு சூழ
சிவனின்நா மத்தைப் போற்றிச் செய்ததை யெலாம்நி னைந்து
கவசகுண் டலன்முன் னாகக் கண்டகன் வந்து நின்றான். (235)

ஐயனை வலது தோளா லனுமா னும் நிறமாய்த் தாங்க
மெய்யுனு மரக்கற் கண்டு மேவியே யிரக்கம் கொண்டு
வையகம் வாழா வீணே வஞ்சகா அழிவா யென்னக்
கையில்வில் லேந்தி வந்த கண்டகன் கணையை விட்டான். (236)

துட்டன்றன் பாணம் மிஞ்சத் துடித்துமே உடனே ராமன்
அட்டதிக் கெங்கும் அஞ்ச அரக்கன்மேல் பாணம் விட்டு
இட்டமும் பூர்த்தி யாக இருபது கரம றுக்கக்
கட்டத்தான் மனம்து டித்துக் காணவும் வெட்கி நின்றான்.(237)

இருபது தோளும் பாரில் இராமனின் சரத்தால் வீழ
அருமையாய்ப் பிறந்து யர்ந்த அனைத்துமே நினைந்து வாடி
இருக்குமோ கரமி ருந்தால் இராமனின் சிரசும் என்முன்
துரும்பாகு மன்றோ வென்று துக்கித்தான் லங்கை வேந்தன். ()

போது.

மதுரநற் கனியைக் கண்டு மரமதி லேறிக் கொய்ய
எதிரான கிளையி லேவோ ரிலைதலை நாகம் சீற
மதிமயக் குற்றி றங்க மரத்தடி வேங்கை சேர
சதிசெய்சே யன்சித் தம்போல் சாமத்தால் சிந்தித் தானே. (239)

இராவணன் செயல்.

உப்புறு சலமும் சூழ ஊசியும் நுழையா வண்ணம்
எப்புரம் புகழும் பெற்ற இலங்கணி காத்து நிற்க
முப்புர மெரித்த வன்றால் முடிவில்லா வரத்தைப் பெற்றும்
குப்பைமேற் செடியே போலக் கோதண்ட னறுத்தான் அன்றோ.

மகனுடன் கும்ப னெங்கே மகோதரன் சேனை யெங்கே
வகையான மாலை யெங்கே வயிரமா முடிக ளெங்கே
சகமெல்லாம் புகழப் பெற்ற சகலஆ யுதமு மெங்கே
பகைவனின் வலிக்கு முன்னே பாவியின் செயல்க ளெங்கே.(241)

இருபது தோளு மெங்கே இந்திரன் பயந்த தெங்கே
பெருமைக ளெல்லா மெங்கே பெற்றதோர் செல்வம் எங்கே
திருபடி மேடை யெங்கே தேவர்க ளோட லெங்கே
கருவத்தின் செயலு மெங்கே காகுத்தன் வீரம் என்னே. (242)

சடையினிற் கயிலை வாழும் சங்கரக் கடவு ளோதான்
அடியினிற் கமலம் கொண்ட அயனோவிண் ணவரோ டாகிக்
கரைகடல் கிரியே தாங்கும் கர்த்தனே கருணை யுள்ளானோ
முடிவினி கூறு யந்த மூவனோ யெனம திந்தேன். (243)

முடியினில் பிறந்தோன் சொல்லைக் குணமாகக் கொள்ளா மல்நான்
வடிவினில் மயக்கம் கொண்டு வாடியே மரம்போல் நின்றேன்
அடியனைப் படவே கண்டு அண்டர்கள் நகைத்த போதும்
கொடியனைக் கொல்லா தின்னம் கோதண்டா பார்ப்ப தாமோ. ()

திசைகள்எங் கும்கொண் டாடத் திகைத்துலங் கோனும் நிற்க
விசையாக அரக்கன் மீது வீரனும் சரம்தொ டுக்க
அசையாமல் லங்கை மன்னன் அன்னையால் மண்மேல் சாய
விசையாகக் கழுக்கள் வந்து மேலுற இறந்தான் அந்தோ. (245)

அண்டர்கள் வானில் நின்று ஐயன்மேல் பூவாற் பெய்ய
மண்மீது விழுந்தே யுள்ள மன்னைவீ டணனும் காண
விண்ணவர் துயரம் தீர்த்த விமலனை வேண்ட அப்பா
புண்ணியா இரவில் காணப் போவது சரியோ வென்றான். (246)

பங்குனி அமாவா சைநள் பார்மீது மன்னன் வீழ
அங்கமும் துடித்துச் சார்ணர் அரசிமுன் னகச் சென்று
எங்குமே புகழைப் பெற்று மெதிரியில் லாமல் வாழ்ந்த
உங்களின் கணவன் மாய்ந்தான் உயர்ராமன் கணையால் என்றார். ()

கண்டகன் மரணம் கேட்டுக் கலங்கிமண் டொதரி சோர்ந்து
மண்மீது புரண்டு வீழ்ந்து மனம்போல வழுவே பாடி
கண்டக மாதர் கூடிக் கைகளைப் பிடித்தும் தாங்கார்
பெண்யானை கதறு மாபோல் பிதற்றினாள் பெருமை யாளே. (248)

பிரதமை யரக்கன் தேவி பெரியதோர் விமானம் வந்து
சிரங்கள்பத் தறுந்து மண்மேல் சிலைபோல விருக்கக் கண்டு
மரம்போல விழுந்தெ ழுந்து மார்பினில் விசையாய்க் கொட்டி
அரக்கனை யுற்று நோக்கி அவனடி கையிற் கொண்டே. (249)

### மண்டோதரி புலம்புவது.

இந்த்ராதி தேவ ரீமேதா எதிராக நகைத்து நின்றார்
சுந்தர மாமோ மாளச் சொல்லுவீ ரெனக்கு நாதா
பந்துபோ லெடுத்தீ ரல்லோ பரமன்வாழ் கிரியை யந்தோ
விந்தைதா னேதோ தேரேன் வேகுதே யுள்ள மைமயோ. (250)

உத்தமி சீதை சொல்லால் உர்மைவிட் டெப்பி ரிந்து
சுத்தியே யழவு மிப்போ கணவரே யேது செய்வேன்
உத்தமன் தம்பி சொன்ன துமக்கேன்கா தேற்க வில்லை
பத்துறு தலையும் சாயப் பார்த்துநா னழவோ சொல்வீர். (251)

எட்டுறு திசையும் பெற்ற ஏற்றமும் விடுத்தே யிப்போ
தட்டிவிட் டேக லென்னைத் தருமமோ சொல்லும் நாதா
சுட்டதோ ராமன் பாணம் சுந்தரச் சீதை யாலே
விட்டீரோ லங்கை யாசை வீரத்தை யெல்லாம் விட்டே. (252)

அரக்கிக ளோடி வந்தே அரக்கியைத் தேற்ற வங்கே
மரவுரி கொண்டு நிற்கும் மன்னனை யுற்று நோக்கி
சிரமேலே கரங்கள் கொண்டு சீராக நாமம் போற்றிப்
பொருந்திய விமானந் தன்னில் புருடனைப் போற்றிச் சென்றாள்.

தசமுக னிடமே சேர்ந்த தம்பியை யிளைய வீரத்
தசரதச் செல்வன் தேற்றத் தளர்ந்துமே விதிமு டித்து
புசகமே பள்ளி கொள்ளும் புண்ணியன் பாதம் தாழ
அசையாமல் வாரிச் சேர்த்து அன்பொடு வாழ்த்தி னானே. (254)

மங்கள மாகி நிற்பாய் மன்னவன் ராவ ணற்காய்
சங்கையே வேண்டாம் நல்லோய் சராசரம் பெற்று னென்று
அங்குலக் மணனை நோக்கி யரக்கனின் அரசைப் பட்டம்
மங்கள அபிடே கம்தான் மன்னற்குச் செய்யு மென்றான். (255)

அண்ணனார் சொல்லைக் கொண்டு அசுவினி துதிகை நாளில்
*புண்ணியன் தன்னை எங்கும் புகழவே முடியைச் சூட
மண்ணொடு விண்ணும் போற்றும் மாதாவாம் சீதை தன்னை
விண்ணவர் துயரம் தீர்த்த விமலன்பா தத்திற் சேர்த்தான். (256)

---

* விபீஷணன் மந்திரிகள்:-- சாம்புவான், அநலன், அநிலன், ஹரன், (மாலி புத்திரர்கள்.)

ஸ்ரீராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்வது.

ஒன்பது திங்க ளிங்கு ஒண்டியா யிருந்த தாலே
மன்னவர் மதிப்பா ரோதான் மாதுட னயோத்தி சேர்ந்தால்
பின்னுகை யெனக்கு நாளை பெரும்பழி வாய்ப்ப தோடு
இன்னலே சாரும் நம்தன் இரவியின் குலத்துக் கன்றே. (257)

பலவான்கேட் டுத்தி கைக்கப் படுத்துமே யனுமான் எங்க
உலகின்மேல் அன்னைக் காக உம்பரும் சோகம் கொள்ள
வலியவா னரமாம் சேனை வாடியே மண்மேல் குந்த
மலைபோல நிற்கும் லங்கோன் மனந்தானும் துடித்தான் மாதோ. ()

ஸ்ரீராமன் ஜானகிக்குச் சொல்வது.

அரக்கன்நா டேயி ருந்து அயோத்தியி லழைத்துச் சென்றால்
புரமெலாம் நகைக்கு மென்னைப் பூவையே ஏது செய்வேன்
எரிசுடர் தன்னி லிங்கே இறங்கியே வருவா யானால்
மரவுரி கொண்டு வந்த மன்னன்நான் மாதே சேர்ப்பேன். (259)

கனலையும் வளர்த்த அங்கு காகுத்தன் றன்னைப் போற்றி
வனரங்கள் வாடி நிற்க வானவர் துயரங் கொள்ள
மனத்துய ரெல்லாம் தீர்த்த மாருதி துடிது டிக்க
கனமாக வெரியும் தீயில் கலங்காமற் குதித்தாள் மாதோ. (260)

அக்னிதேவன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சுடரையும் பொறுக்க வென்றால் சுந்தரா முடிய வில்லை
வடிவைத்தான் நோக்கு வாரும் வானமும் வைய மில்லை
கொடியவன் வாழும் நாடு கொதிப்பினு லெரிந்த கண்டும்
திடங்கொள்ளா தேவீ னுகத் தேவிக்குத் துன்பம் தந்தாய். (261)

அனுமான் ஜானகியைத் துதிப்பது—வேறு.

மணிகளிற் பெருமணி மாதவன் திருமார்
பணிமணி யருள்மணி அருந்தவ மணியே
குணமணி மெய்ம்மணி குவலய மெச்சும்
துணைமணி ராகவத் தோகையா மணியே. (262)

நவமணி வளமணி ராமனுக் கேற்ற
சுவைமணி சுடர்மணி சொல்லொணு மணியே
கனிமணி கடல்மணி கறையா மணியே
தவமணி நான்பணி தாயாம் மணியே. (263)

தசரதன் வரவு—வேறு.

தந்தையாம் தசர தன்றான் தளர்ந்திடு மகனை வாரி
முந்தின தவத்தின் கூறால் முகத்தினைக் காணப் பெற்றேன்
வந்தநல் வனத்தி லிப்போ வானவர் துயரம் தீர்த்தாய்
சந்தேகம் வேண்டாம் சேயே சனகன்மா மகளா ளென்றான். (264)

ஸ்ரீராமன் தசரதனுக்குச் சொல்வது.

தவத்தின்பாக் கியமோ நானும் தான்பணிந் திடவும் வாய்த்த
பவத்தையே செய்த தாலே பாவையால் நகைக்க நின்றேன்
குவலய மெங்கும் போற்றக் குடிக்குமே பழுது வாய்க்கக்
கவலையே கொள்ளு துள்ளம் காதகற் கொன்று மீட்டும். (265)

தசரதன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மண்ணொடு விண்ணும் போற்ற மகனேசீ தையால் நின்றாய்
எண்ணத்தை யெல்லாம் நீக்க இன்னமே சாரா துன்னை
கண்ணயமா யயோத்தி சேர்ந்து கலங்கும்தா யாரைத் தேற்றி
புண்ணிய அபிடேகம்கொள் பொருந்தியே வாழ்வாய் கண்டாய்.

அண்டர்கள் வானி னின்றே அன்னையின் நிறைகொண் டாட
மண்டலம் புகழ மக்கள் மடிமிசை வாரி யேந்தி
கண்கொள்கௌ சல்யா இன்னம் காசினி வாழ்ந்து நிற்கப்
பண்ணின தவத்தின் மேன்மை பாலனே நிலைத்தாள் என்றான். ()

அரசனின் மனம்போல் வாழ்த்தி அனுமான்தன் னைப்பு கழ்ந்து
அரசன்சுக் ரீவ னன்பின் அருஞ்செய லைக்கொண் டாடி
மரவுரி கொண்டு வந்த மக்களால் விடையும் பெற்றப்
புரமெலாம் புகழத் தக்க புண்ணிய பதவி சேர்ந்தான். (268)

அன்னையாம் சனகி தன்னை அயோத்திமன் னவனும் நோக்க
இன்றுநா னறிந்தேன் கற்பை எனக்கினி யாளே யென்ன
மன்னவன் முதலோர் ஆர்க்க மாருதி குதிக்க அங்கு
துன்பமு மொழிந்த தென்று துதித்துப்பூ மாரி பெய்தார். (269)

தேவர்கள் துதிப்பது.

கண்மூடித் திறப்ப தற்குள் கமலனே யனேகர் வாழ்வு
புண்ணியா மாறிப் போகும் புவியினி லறிந்தா ருண்டோ
கண்டகர் தலைவெ றுக்கக் கர்த்தனே உதித்து மண்ணில்
விண்ணவர் துயரம் தீர்த்தாய் வீரனே போற்றி போற்றி. (270)

### இந்திரன் சொல்வது.

வேதத்தைக் கொண்டோற் கொன்றாய் விண்ணுக்காய்க் கிரிசு மந்
பாதகன் கசுவைக் கொன்று பாலனைப் பரிந்து காத்தாய் [தாய்
ஆதியே யளந்து நின்றாய் அரசுக்காய்ப் பரசுமானாய்
சோதியே அரக்கற் கொல்லத் தோன்றலாய் வந்தாய் போற்றி.(271)

### பிரமன் சொல்வது.

வேதத்தின் முதல்வ னாகி விண்ணொடு மண்ணும் மற்றும்
ஆதியே கர்ப்பம் வைத்தே ஆதரிக் கும்மெய்த் தேவே
நீதியை நிலையாய்ச் செய்ய நெடுங்கடல் மன்னைக் கொன்ற
நாதனாய் விளங்கும் எந்தாய் நாரண கமலர் போற்றி. (272)

### பரமசிவன் சொல்வது.

எண்ணத்துக் கெதிரில் லாம லெங்குமே நிறைந்தி ருக்கும்
புண்ணியா லங்கோற் கொல்லப் புவியினில் வந்தா யல்லை
பண்ணொடு விண்ணோ ரேற்றும் மாதவா வராக வாமா
கண்ணியா மறதி யேதோ காகுத்தா போற்றி போற்றி. (273)

### தேவர்கள் செயல்.

பிரமனைப் பெற்ற ஈசன் பெருஞ்செய லைப்பு கழ்ந்து
குரங்குச்சே னையையெல் லாமே குறையாம லெழுப்ப மங்கு
கரத்தையே சிரமேற் கொண்டு காகுத்தன் நாமம் போற்றி
வரதன்தே வியையும் கண்டு வணங்கியே குதித்தார் மாதோ. (274)

திரிதிகை அனையைக் கண்டு தேவர்கள் சதுர்த்தி போக
புரமெலாம் புகழப் பெற்ற புண்ணியன் லங்கை நின்ற
பரதனை அயோத்தி தன்னில் பார்க்கவே கலங்கி நிற்க
தருமத்திற் கட்டுப் பட்ட தசமுகன் தம்பி வந்தான். (275)

### விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

மலையான அரக்கர் தம்மை மன்னவா வெறுத்த தாலே
சிலநாளும் தங்கி யிங்கு சிரமத்தைத் தீர்த்துக் கொள்ள
அலையான லங்கை யிற்றன் அபிடேகம் செய்து கொண்டால்
நலமாகத் தோணு தெற்கு நாதனே கருணை செய்வீர். (276)

ஸ்ரீராமன் விபீஷணனுக்குச் சொல்வது.

பஞ்சமி நாளை மன்னா பரதனைக் காணா விட்டால்
அஞ்சாம லுயிரை நீப்பான் அன்னையர் கூட மாள்வார்
அஞ்சனா மகனை விட்டால் அயோத்திசேர் வானே யென்ன
நெஞ்சமும் உருகு திப்போ நிலையிலை மனமுந் தானே. (277)

விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

புட்பக விமான முண்டு புண்ணியா கவலை யேனோ
பட்சம்கொள் பரதன் தன்னைப் பார்க்கலாம் அயோத்தி நாளை
இட்டமே கொள்வீ ராகில் இக்கணம் வரவ ழைப்பேன்
அட்டதிக் கேற்ற வந்து அபிடேகம் முடிப்பீ ரென்றான். (278)

சேனையும் தங்க ளாமோ சேரவே அயோத்தி மட்டும்
மானவ ரேதா னேரா மனந்தானும் துடிக்கு தென்ன
வானவப் புட்ப கம்தான் வானரச் சேனை யோடு
ஞானனே தங்கு மென்ன நாதனும் மகிழ்ந்தான் மாதோ. (279)

புரமெலாம் புகழு மந்தப் புட்பக விமானம் நல்க
கரத்தில்கோ தண்ட மேந்திக் கவசகுண் டலம்வி ளங்க
அருமறை யேற்றும் ஈசன் அன்னையும் யாரும் ஏறி
பரிந்துகா ரையைக் கண்டு பரத்துவா சன்பாற் சென்றான். (280)

பரதன் செயல்.

அன்பனும் பரதன் றானும் ஆண்டுபன் னென்றும் செல்ல
முன்னோனின் வினைக ளெல்லாம் முடிந்தன இன்றோ டென்று
அன்னைகெள சல்யா நின்ற தருந்தவப் பயனே யென்று
பின்னைசத் துருக்கன் தன்னைப் பிரியமா யங்க ழைத்தான். (281)

பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

வனத்தினி லிருந்தே அண்ணா வரும்நாளின் றான தாலே
கனத்தினில் அயோத்தி யெங்கும் கடிதலங் கரிக்கச் செய்து
வனஞ்சென்ற அண்ணா னரின் வரவையும் வசிட்டர்க் கோதி
மனமகிழ் வோடு தாய்மார் மகிழவே அழைப்பாய் என்றான். (282)

சத்துருக்கன் செயல்.

அண்ணனார் சொல்லைக் கேட்டு அயோத்திமா நகரம் சேர்ந்து
புண்ணியன் வசிட்ட னோடு போற்றும்கெள சல்யைக் கோதி
கண்யமாய் அலங்க ரிக்கக் காவலர்க் குரையும் செய்து
தண்டுடன் வந்து சேர்ந்து தமையனைப் போற்றி நின்றான். (283)

பரதன் கௌசல்யாவை பணிந்து சொல்வது.

அருந்தவம் செய்து பெற்ற ஐயனை யின்று காண்பாய்
மரவுரி களைந்திட் டம்போல் மகிழ்ந்தபி டேகம் செய்வாய்
புரமெங்கும் புகழ நின்று புண்ணியன் அரசை யாள்வான்
பரதனால் வந்த துன்பம் பறந்ததின் றோடே அம்மா. (284)

கள்ளவுள் ளங்கொள் பெண்கள் கலந்துமே குடியில் வாழ்ந்தால்
கொள்ளிவாய்ப் பேய்கள் வாழும் கொடியதோர் வனமே யாகும்
தள்ளாத வயதில் பாவி தருமத்தைக் கெடுத்தாள் வீணே
பிள்ளையைப் பிரிந்த சோகம் பெற்றவர் சொர்க்கம் சேர்ந்தார் (285)

கௌசல்யா பரதனுக்குச் சொல்வது.

தவசிசா பத்தால் துன்பம் தந்தைக்கு வாய்த்த தல்லால்
தவம்செய்து உன்னைப் பெற்ற தாயினால் குற்ற மில்லை
தவசிக ளிடமே வாழ்ந்த தமையன்வந் ததுமிப் போது
புவனத்தை யாளச் செய்வாய் போனதை யெண்ண வேண்டா. (286)

பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

தஞ்சமாய் வருவே னென்ற தமயனைக் காண்கி லாதே
நெஞ்சமு முருகு தையோ நினைக்கவே யெல்லாம் தம்பி
வஞ்சிப்பாள் கைகை யென்று வனத்தினில் நின்றிட் டாரோ
அஞ்சாமல் விடுவேன் ஆவி அக்கினி தனிற்காண் தம்பி. (287)

வசிஷ்டன் பரதனுக்குச் சொல்வது.

அலைகடல் புரண்டிட் டாலும் அண்ணனுக் கபாய மில்லை
அலையாதே வீணா யப்பா ஐயனும் வந்து சேர்வான்
மலைகளும் நதியும் தாண்டி வனத்தினில் நடந்து வந்து
தலைவியோ டிங்கு சேரத் தள்ளுங்காண் தவனை தானே. (288)

பரதன் வசிஷ்டனுக்குச் சொல்வது.

என்னாலல் லோகை கேசி இப்படிக் கிடுக்கண் செய்து
மன்னவர் தம்மை நன்றாய் மண்மீது வாழா தாக்கி
அன்னைசா னகியா ளோடு அயோத்தியை யாள வந்த
அன்பனைக் கானம் விட்ட தலையுதே யுள்ள மையோ. (289)

வசிஷ்டன் பரதனுக்குச் சொல்வது.

தெரியாமல் பாசத் தாலே தேங்கினால் பலனை யில்லை
கரத்தில்கோ தண்ட மேந்திக் கானகம் சென்ற அண்ணல்
தருமத்தை நிலைக்கச் செய்து தடையின்றி வந்து சேர்வான்
பரதனே பதறு திப்போ பண்புட னிருப்பாய் சற்றே (290)

பரதன் துக்கிப்பது.

ஆண்டது பதினு லேகில் அன்னையா லெனக்கு வந்த
மூண்டதோர் வினையைப் போக்கி முடிசூட வெண்ணம் கொண்டேன்
பூண்டிடு மாவு நீயே பொருந்திடீ வனத்தில் நின்றால்
கூண்டுட னழியு மிப்போ கோசரமேன் ராமா சந்த்ரா. (291)

அன்னையும் தளர்ந்து நிற்க அயோத்திமக் களும்மே வாட
இன்னமும் வனத்தில் தங்க எண்ணமோ தோன்ற வில்லை
இன்றேதான் அழிந்து போகும் இக்ஷ்வாகு குலமு மற்றாம்
அன்றுசொல் வாறு காக்க ஆவலா ராமச் சந்த்ரா. (292)

பாதுகை நந்தி சேரப் பரதனும் தேங்கி நிற்க
மாதுரு மனம்க லங்க மானன்சத் துருக்கன் வாட
ஓதிய யானை காக்க ஓடியே வந்த வன்போல்
வேதனை தீர்க்க வாரும் விண்காண ராமச் சந்த்ரா. (293)

உடலைநந் தியிலே வைத்து உயிரைப்பின் னுக விட்டு
திடமான மனமும் கொண்டு திருவடி போற்றி வந்தும்
இடர்வந்து நேர்ந்த தாலே ஏதுமே தோன்ற வில்லை
கடந்ததே கெட்ட காலம் காக்கவா ராமச் சந்த்ரா. (294)

அனேக குற்ற மின்றி அவதரித் தனக்கு நானும்
மனம்போல நடந்த திங்கு மண்ணொடு விண்ணும் தேர்வார்
தனகரா உண்மை யாகில் தடையேது மில்லா திப்போ
கனலினில் விழுகு முன்னே காணவா ராமச் சந்த்ரா. (295)

பரதனு மழிவா னிப்போ பயனற்று நின்ற தாலே
மரவுரி தன்னை நீக்கி மாதாவைக் காக்க வாரும்
அருந்தவம் செய்து பெற்ற அன்னையே தாவா ரோமின்
துரிதமாய் வந்து சேர்ந்தால் தோசம்சே ராதே ராமா, (296)

கைகேசி தன்னால் நாமும் கானத்தில் வாழ லாச்சு
செய்தவம் செய்த தாயும் சேயினால் மாய்ந்தா ளென்று
ஐயனே வீணே பின்னால் அடியேனை நோகா திப்போ
தெய்வம்போ லேற்று மென்னைத் தேடிவா ராமச் சந்த்ரா. (297)

அண்ணனும் அப்பன் நீயே ஆதிசி ரங்கன் நீயே
கண்ணாகக் காப்பான் நீயே கர்த்தனும் குருவும் நீயே
மண்ணொடு விண்ணும் நீயே மாதாவும் மற்றும் நீயே
எண்ணம்கொண் டதுமெய் யாகில் எதிர்நிற்பாய் ராமச் சந்த்ரா.

வசிஷ்டன் பரதனுக்குச் சொல்வது.

தருமத்தின் பொருளைக் கொண்டோர் சன்னதி தனைக்கெ டுத்தோர்
குருவின்றன் மொழியை விட்டோர் கோவினை வதைசெய் தோர்கள்
கருவத்தின் வழியே நின்றோர் கணவனைப் பிரிந்தோர் தக்க
பெருகிய பொறுமை விட்டோர் பேயாகப் பிறப்பார் அப்பா. (299)

பரதன் செயல்.

வசிட்டன்றன் சொல்லைக் கேட்டு வாடியே யுள்ளம் சோர்ந்து
வசமான வரத்தைப் பெற்று வஞ்சித்த தாயை நொந்து
திசையினை விடாது நோக்கிச் சிரகின்மேற் கரங்கள் கொண்டு
அசையாது பார்த்தி ருந்தான் அண்ணலும் வருவா னென்றே.

பாத்துவாசர் ஆசிரமத்தில் ஸ்ரீராமன் செயல்.

புண்ணிய பரத்து வாசன் பொன்னடி பணிந்து நின்று
கண்டகன் லங்கோ னின்றன் காதகச் செயலைக் கூற
விண்ணவர் துயரம் தீர்த்த விமலன்றன் னையே வாழ்த்தி
கண்யமாய் விருந்த ளிக்கக் கருணையாய்த் தங்கச் செய்தான். (301)

ஸ்ரீராமன் அனுமானுக்குச் சொல்வது.

பஞ்சமித் தவணை தப்பில் பரதனும் வாடி நிற்பான்
மஞ்சுமால் கடல்க டந்த மாதீர னேயிப் போது
அஞ்சாமல் பரதன் பாற்சென் றடையாள மாழி யீந்து
சஞ்சலந் தீர்த்து வந்தால் சந்தோச மாவேன் வீரா. (302)

அனுமான் செயல்.

வேகமாய் வான்கி ளம்ப வீரனை முனியு மெச்ச
மேகங்கள் சிதறி யோட வேரொடு மரங்கள் சாய
காகுத்தன் தூதன் போகக் கானகம் இருள வெங்கும்
தேகமும் தளர்ந்த தம்பி திருமுகந் தெரியக் கண்டான். (303)

பரதன் சத்துருக்கனுக்குச் சொல்வது.

குண்டலம் காதில் வேய்ந்து குரங்குமே தோசொண் டோடி
மண்ணொடு விண்ணும் பீற மலைபோல வருவ தைப்பார்
அண்ணனூர் விட்ட தூதோ அடவிவாழ் பவனோ நேரும்
புண்ணியன் யாரோ தேரப் புகலுவாய் கண்டு தம்பி. (304)

அனுமான் செயல்.

பரதனைக் காண வெண்ணிப் பலவான்மா ருதியு மங்கு
உருவமும் சிறிதாய்க் கொண்டு உடனேதான் மண்ணில் சேர்ந்து
கரத்தையும் சிரமேற் கொண்டு காகுத்தன் நாமம் ஓதி
மரவுரி கொண்டு நிற்கும் மன்னனைப் பணிந்தான் மாதோ. (305)

பரதன் அனுமானுக்குச் சொல்வது.

வனமேவாழ் பவனீ யாரோ வந்ததை யறியேன் என்பால்
அனுப்பின வவரா ருன்னை அதனையு மெனக்குச் சொல்வாய்
தினகரன் தன்னைக் கண்டு தெரிவிக்க வந்த தூதோ
கனமதைப் பெறவா யிப்போ கலங்காமற் கூறு மென்றான். (306)

அனுமான் பரதனுக்குச் சொல்வது.

ஐயனுன் மூத்த செல்வன் அன்னையால் வனத்திற் சென்று
வையகம் எங்கும் போற்ற வஞ்சரை யெலாமொ ழித்து
மெய்ப்பத முனிவர் தம்பால் மேன்மையாய் வந்து சேர்ந்து
கையில்ஆ ழியைக்கொ டுத்துன் கவலையைத் தீர்க்கச் சொன்னார்.

பரதன் அனுமானுக்குச் சொல்வது.

தலைவியை மீட்க வெண்ணித் தசரதன் பெற்ற சீலன்
அலைகடல் அணையைக் கட்டி அரக்கன்வாழ் நாடு சேர்ந்து
மலைநிகர் லங்கை வாழும் மன்னனை யெதிர்த்து நின்று
தலையையு மறுத்தா ராசொல் தவிக்குதே யுள்ள மையோ. (308)

அனுமான் பரதனுக்குச் சொல்வது. வேறு.

பங்குனி பூரணை பகல்நா ழிகையாம்
பன்னை பம்பைவிட் டெங்கும் தங்கா
மங்களன் பிரதமை யாலைக் கரைசேர்
மன்னன் வீடணன் சரணம் தாழ

எங்கும் புகழைப் பெற்றவி ளங்கும்
இலங்கோன் வாழ்தரை சேனையோ டேக
அங்கனம் தெர்ப்பைப டுத்துத் திரிதியை
அணையிட ஆழியின் அரசன் வந்தான். (309)

எத்திசை யும்புகழ் சதுர்த்தி யினிலே
இலங்கைக் கணையிட் டட்டமி மாலை
சுத்தமாய் சேது முழுது முடிந்து
சுவேலை சேனையோ டந்திபோய் சேர
யுத்தம் நவமிது வக்கக் கும்பன்
ஒழியத் தசமிநி கும்பலை செய்த
பத்துத் தலையன் மகனைத் தம்பி
பார்மேற் கொன்றான் திரயோ தசியில். (310)

சதுர்த்தசி மூல பலமு மெதிர்க்கச்
சற்றும் அஞ்சான் நின்றுமே மாய்க்க
பதியோன் லங்கை தன்னிற் படையொடு
பலமா யெதிர்க்க அமர இரவு
பதினை நாழிகை யினிமேலே யொழிக்கப்
பாரியள் சித்திரை பிரதமை யதுவே
துதிகை வீடணன் தனக்குத் தம்பி
துரிதமாய் அபிசே கம்முடித் தாமே (311)

திரிதிகை அன்னை சானகி தானும்
தீயில் வீழ்ந்தெழ தாதைகண் டேக
வரந்தரு தெய்வ மென்றி லங்கையில்
வானவர் சதுர்த்தி வணங்கிப் போக
புரமெலாம் புகழ்சேர் புட்பவி மானம்
பூரணன் சேனையோ டேறியே சேர
வருகிட் கிந்தை தாரையை கண்டு
வழிபா துவசனை பஞ்சமி சேர்ந்தார். (312)

பரதன் அனுமானுக்குச் சொல்வது.

கரத்தில்கோ தண்ட மேந்திக் கானத்தில் வந்தி ருந்தால்
அரக்கனால் அபாயம் தானும் அன்னைக்கு நேர மாட்டா
கரிபோலக் காக்கும் தம்பி காவலில் எவ்வா றுற்றான்
சரியாக நடந்த வற்றைச் சாற்றுவா யெனக்குக் கண்டாய். (313)

பலவாறு மனுமா னங்கு பரதன்அன் பைப்பு கழ்ந்து
நலமாக வெடுத்துக் கூற நடந்தவை யெல்லாம் கேட்டுக்
குலவானுக் கங்கு நேர்ந்த கொடுமைமெல் லாம்நி னைந்து
வலைபட்ட மானைய் வாடி வஞ்சித்த தாயை நொந்தான். (314)

பரதன் அனுமானுக்குச் சொல்வது.

அண்ணனார் சேதி கூறி அல்லலை யெலாமொ ழித்த
புண்ணியா மேன்மை யாயிப் புவியினில் சுகமே வாழ்வாய்
கண்யமாய் வரத்தைப் பெற்றாக் காருத்தன் தனைக்கெ டுத்த
புண்ணிய மாதே பெண்ணைப் போற்றியே பெற்றாள் கண்டாய்.

அண்ணன்ரா மனைய ளித்த அன்னை களை சலையில் வம்மாள்
கண்யலக் குவன்சத் ருக்கற் கறந்திடு சுமித்ரை பாரு
பண்ணின பாவத் தால்நான் பாவியின் வயிற்றில் வந்து
அண்ணனை வனத்தில் விட்டு அவனியில் நகைக்க நின்றேன். ()

அனுமான் செயல்.

அனுமானு மடிப ணிந்து அங்கனம் வான்கி ளம்ப
இணையான பரதன் தன்றை டிருடியும் திகைத்து நோக்க
வனமான மரங்கள் யாவும் வானரற் கண்டு தாழ
தினகரன் தன்னைக் காணத் தீவிர மாகச் சென்றான். (317)

ஸ்ரீராமன் செயல்.

தனகான் சேனை யோடு தவசிபால் விருந்து முண்டு
வனமதிற் கண்ட காட்சி வரிசையா யங்கு கூறக்
கனமான பரதன் தன்னைக் காணவே சென்ற தூதன்
வனமதில் விரைவாய் வந்து வரதன்முன் வணங்கி நின்றே. (318)

அன்பான பரத னோடு அன்னைய ரங்கு கண்டு
துன்பமெல் லாமொ ழித்துத் துரிதமாய் வந்தே னென்ன
அன்றலை கடலைத் தாண்டி யல்லலை யொழித்த வாபோல்
இன்றுமே பரதற் கண்டு இன்பத்தைக் கொடுத்தாய் என்றான்.

ஜானகியின் செயல்.

தனக்காகக் கொடுத்த தீனத் தருணமும் பாதி கொண்டு
அனுமானுக் கீய வென்று அன்னையு மெடுத்து வைத்து
மனத்துய ரெல்லாம் தீர்த்த மாருதி வரவும் கூவி
வனரரெல் லாமக ளிக்க வாழ்த்தியே கரத்தில் ஈந்தாள். (320)

ஸ்ரீராமன் செயல்.

பவனசேய் மனமும் வீரப் பலத்தையு மிகக்கொண் டாடி
தவசியால் விடையைப் பெற்றுத் தசரதன் பெற்ற சீலன்
புவனமா மெங்கும் போற்றும் புட்பக மேறிப் போகத்
தவமேவிடம் கொண்ட தம்பி தமையனின் வரவைக் கண்டான். ()

பரதன் துதிப்பது—வேறு.

தெரியானை நம்பினவர் தமையாள் வானைத்
திருமலரின் முகத்தானைச் சித்ர கூடக்
கிரியானைக் காயாம்பூ வண்ணன் றன்னைக்
கேகைவர மீந்தபிதா வாக்கால் நாடு
தரியானைத் தாய்சொல்லைக் கடவா தானைத்
தன்கூட வரக்கெஞ்சும் மாதைத் தம்பி
பிரியானைப் பாதுகையீந் தென்னைக் காத்த
பெம்மானைக் கண்டிடவும் பெற்றேன் பேறே. (322)

வேறு.

ஐயனே யாள வந்த அண்ணலே அருளே போற்றி
வையகம் எங்கும் போற்ற வாட்டத்தை யொழித்தாய் போற்றி
தெய்வம்போல் விளங்கும் எங்கள் தேவனே கமலம் போற்றி
கையிற்கோ தண்ட மேந்தும் கர்த்தனே போற்றி போற்றி. (323)

சத்துருக்கன் ஸ்ரீராமனை துதிப்பது—வேறு.

கௌசல்யை துயரமது தீர்த்தாய் போற்றி
காசினியை யாளவந்த கண்ணே போற்றி
தசரதரின் தம்கவலை தீர்த்தாய் போற்றி
தம்பியையெக் காலத்தும் காப்பாய் போற்றி
தசமுகனைக் கொன்றஎங்கள் தேவே போற்றி
தாயையன்போ டேகாக்க நிற்பாய் போற்றி
திசையெட்டும் புகழ்பெற்ற அண்ணா போற்றி
திருமலர்த்தாள் எந்நாளும் போற்றி போற்றி. (324)

ஸ்ரீராமன் சீதைக்குச் சொல்வது.

பரதன்கோ லத்தைக் காணப் பதறுதே யுள்ள மிப்போ
வரத்தினால் மன்னன் பெற்றும் வறுமைதான் தீர வில்லை
அரக்கர்பூண் டைத்தொ லைத்து அயோத்திவந் ததுவும் இந்த
தீரணியிற் புகழே பெற்ற தம்பியின் தவமே யாகும். (325)

புட்பக விமானம் விட்டுப் புண்ணியன் தன்னைச் சேர்ந்து
இட்சுவாகு குலத்தின் மேன்மை இன்றும்மால் கண்டேனென்று
பட்சமாய் சத்துருக் கற்குப் பலபல சொல்லித் தேற்றி
இட்டதெய் வம்போல் ஆசா னிணையடி துதிக்கான் ராமன். (326)

ஸ்ரீராமன் கைகேசிக்குச் சொல்வது.

அன்னையே உமகன் பாலே அண்டராற் புகழப் பெற்றேன்
ஒன்றுமே கவலை வேண்டாம் உமக்குமே பழிநே ராது
இன்னமும் வனத்தில் வாழ எனக்குமே பிரியம் தாயே
பின்னைஎன் பரதற் காணப் பிரியமாய் வந்தேன் இங்கே. (327

கைகேசி ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

சொல்லாண்டு பதினான் காகச் சுந்தர வனமே சென்று
எல்லாண்டு வந்தாய் போதும் இனிமேலே கவலை வேண்டாம்
வல்லாண்டு அறுபதாயிரம் மன்னர்கை கொண்ட மேன்மை
பல்லாண்டு பல்லாண் டாய்வாழ் பார்புகழ் அயோத்தி நின்றே. ()

கௌசல்யா ஸ்ரீராமனுக்குச் சொல்வது.

முற்றுமே துறந்தோர் பக்கம் முடிவாக வாழ்ந்தாய் போதும்
பெற்றநாள் முதற்கொண் டுன்னைப் பிரியமா யிவளே காத்தாள்
குற்றமா யுளமே சோராய் குழந்தையே கைகை சித்தம்
சற்றுமே கலங்கச் செய்யாய் தந்தையின் வினையால் கெட்டாள்.

எங்குமே புகழ்தந் தானே இப்படிச் சொல்வ தாமோ
மங்கள அரசைத் தானே மகனேநீ அபிசேகம்கொள்
திங்களை யணிந்தோன் கையை திருத்தோள்கொண் டானைக் கொன்று
எங்களைக் காக்கா யேனும் இளைஞன்கோ லத்தைக் காண்பாய்.

காயாம்பூ வணன்மகிழ்ந்து கைகையா தத்தில் வீழ்ந்து
வாயாரத் துதிக்கும் சேயை வாரிமார் போடு சேர்த்து
பேயாய்வந் தவளால் கெட்டேன் பெருமையாய் வாழ்மென்று
வாயாரச் சீதா வென்ன வாடியே யருகில் வந்தாள். (331)

### கைகேசி சீதைக்குச் சொல்வது.

குடிப்பிறந் தவளின் மேலாய்க் குலத்தில்வந் தவளே மேலாம்
துடிக்கவிட் டேனே யுன்னைத் துட்டன்ரா வணனி டத்தில்
வடிவின்றன் அழகும் மாறி வலிமையும் குறைந்து வந்தாய்
கொடியது செய்தே னென்று குறையாக வெண்ணு யம்மா. (332)

### சீதை கைகேசிக்குச் சொல்வது.

பெண்கொண்ட பாக்ய மன்றோ பெருமையாய் வாழ்வ தெல்லாம்
பண்ணின பாவத் தின்பேர் பகவனை வனமும் சேர்த்தல்
கண்டக னிடமே சிக்கிக் காலனூர் சேர்த்த தும்தன்
புண்யமே காத்த திங்கு பொன்னடி போற்றி போற்றி. (333)

வரிசையாய்ப் பாதம் போற்றி வாழ்த்தியும் பெற்று நிற்க
புரமெல்லாம் புகழப் பெற்ற புண்யனைக் கௌசல் யைத்தாய்
மரவுரி தன்னைக் காண மைந்தனே துடிக்கு துள்ளம்
துரிதமாய் நீக்கி விட்டுத் துன்பத்தை யொழிப்பாய் என்றாள்.

அரசனு முதலா னோர்கள் அன்னைகோ சலையைப் போற்ற
வரிசையால் வாழ்த்த வங்கு வரமுனி தன்னைப் போற்றி
பரதன்சத் துருக்க னைத்தான் பலவாறு துதிக்கச் செய்து
மரவுரி தன்னை நீக்க மன்னனை வேண்டி னாரே. (335)

### அனுமான் செயல்.

சிரஞ்சீவி வாயு சேயன் சேனையைத் தூரம் விட்டு
வரதனைப் பெற்ற தாயை வலம்புரி யாகச் சுற்றி
திருதாளைப் பணிந்து நின்று தெய்வம்போல் துதியும் செய்ய
கரமதால் அன்பு காட்டிக் கருணையாய் வாழ்த்தி னாளே. (336)

வரமுனி திதிசட் நாளில் வரிசையா யவர்கள் கொண்ட
மரவுரி தனையும் நீக்கி மாதாக்கள் மகிழச் செய்து
பரதன்பா துகையைக் கொண்டு பாதமே சேர்த்துப் போற்ற
கரமதால் தழுவிக் கொண்டு கருணையைப் புகழ்ந்தான் அம்மா. ()

குகனுமே விரைவாய் வந்து கோதண்டன் பாதம் வீழ
செகமெலாம் போற்றும் ஈசன் சேர்த்துமே கரத்தாற் கொண்டு
சுகமாக வாழ்வே சொல்லிச் சுக்ரீவன் நேசம் செய்து
பகைவனின் சேதி கூறப் பதைபதைத் தானே மாதோ. (338)

அயோத்திநற் குடிகள் வந்து ஐயனைப் பணிந்து நிற்க
வையத்தை யாளச் சொல்லி வசிட்டன்முன் னுகை வேண்ட
செய்யாத தவத்தில் வந்த செல்வனும் மனமகிழ்ந்து
பொய்யுரை சேரா மக்கட் பொருந்தவே செய்தான் மாதோ. (339)

ஸ்ரீராமன் அயோத்தி சேர்வது.

புரவிக ளெட்டு கொண்ட புகழ்ரத மேபொ ருந்த
கரிபடை யெதிரே நிற்கக் காவலர் நாற்பால் காக்க
பரதன்சா ரதியம் செய்ய பால்யர்சா மரையும் வீச
அரசனு முதலா னோர்கள் அயோத்தியை அடையச் சென்றார்.

மலைமகள் கொடிபி டிக்க மரமொடு மரமும் கொஞ்ச
சிலைகள்தீ வட்டி தாங்கத் தென்னையும் விடாயைத் தீர்க்க
இலைகள்சா மரைபோல் வீச இனிமையாய்ப் பட்சி பாட
குலைகளும் நடனம் செய்யக் கோதண்ட னயோத்தி போனான்.

ஐயனு மயோத்தி சேர அண்டரும் விண்ணிற் சூழ
வையக மகிழச் சேனை மன்னவர் வரிசை சூழ
தையலர் வாழ்த்து கூறச் சான்றவர் கவிகள் பாட
மெய்முனி புகழச் சென்ற மேன்மையை விளம்பற் பாற்றே ()

திருநகர பிரவேசம்.

திருமக ளேற்றும் ஈசன் திருநகர் வந்து சேர்ந்து
திருவீதி அழகைக் கண்டு தேவிக்கு முழுதும் காட்டி
திருமாளி கையி றங்க தேவர்மங் களமும் பாடத்
திருசீரா லாத்தி செய்யத் திருவாண் மனையுட் சேர்ந்தான். (343)

## ஸ்ரீராமர் பட்டாபிஷேகம்.



வரமுனி சப்த மிப்பேர் மகிழபி ஷேகம் செய்து
அரசினை ராமற் கீய அன்னைசா னகியைச் சார
பரதசத் துருக்கர் பின்னால் பலவான்லக் மணனு முன்னால்
திருபத மனுமன் தாங்கத் தேவர்பூ மாரி பெய்தார். (344)

செகமெலாம் புகழ்ப் பெற்ற செல்வனும் மனம கிழ்ந்து
நகர்வாழும் குடிக ளுக்கு நலமான வார்த்தை கூறி
வகையான பரிசு மிக்க வரிசையாய்த் தரவே யங்கு
சகலர்க்கும் விடையு மீந்து தரணியை யாண்டான் மன்னே. ( )

யுத்தகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீ ராமர் தாலாட்டு



### இராகம் - நீலாம்புரி.

தாலேலோ—தாலேலோ
தாலேலோ—தாலேலோ

பூலோக மீலோகம் போற்றவே வந்துதித்து
கோலோச்சிக் கண்டகரைக் கூற்றனூர் சேர்த்தவனே (தா)

மன்னவனே தசாதன்தன் மாதவத்தில் வந்துதித்துப்
பின்னவனே ஆளவைத்துப் பேதமின்றிச் சென்றவனே (தா)

கைவண்ணம் கால்வண்ணம் கண்டவிசு வாமித்திரன்
மெய்வண்ணம் நீயென்றே விண்காணத் துதித்தானே (தா)

ஆரணனே பூரணனே அயோத்தியில் வந்தவனே
காரணனே நாரணனே கைகைசொல் கொண்டவனே (தா)

நித்தியனே நின்மலனே நீலநிற மேனியனே
சத்தியனே சக்கரனே சாலந்தா னேனுமுன் (தா)

அத்திதனக் கருள்செய்தாய் ஆலிலையி லேபடுத்தாய்
பத்திக்கு வித்தான பாலனைமுன் காத்தவனே (தா)

மாயவனே கல்லான மாதுதுயர் தீர்த்தவனே
நாயகனே வானரர்க்கும் நாதனாய் நின்றவனே (தா)

திண்ணியனே புண்ணியனே காதகரை வெறுத்தவனே
மண்ணைமுன் னளந்தவனே மாதவர்கள் கொள்மருந்தே (தா)

அனகன்நீ யென்றுன்னை அஞ்சலித்துன் னடிபணிந்தேன்
சனகனது மருமகனே சஞ்சலத்தைப் போக்கிடவா (தா)

அஞ்சனையாந் தேவிபெற்ற அனுமந்தன் தோள்தாங்க
வஞ்சனைசெய் யாமலிங்கு மனம்கொண்டு வாருமையா (தா)

பாடவுமே வரம்தருவாய் பாருமை யாகவந்தேன்
தேடவுனை வழியறியேன் சீர்கொண்ட தாரகமாம் (தா)

நாமமதாய் வந்தவனே நான்முகனைத் தந்தவனே
சேமமதே பெறவருள்வாய் தேன்துளப மாலையனே (தா)

மங்களம்! மங்களம்!! மங்களம்!!!

ஸ்ரீ ராமஜெயம்.

ஸ்ரீ ஆஞ்சநேயர் துணை.

# பூஜா சுந்தரகாண்டம்

## அகவல்

1. அஞ்சனை பெற்ற வனுமந்த வீரா
அஞ்சாது கடல்கடந் தரக்கனூர் சேர்ந்து
2. வடவாயில் காத்த வரக்கியை மாய்த்தே
அடைவுடன் தேடி யன்னையைக் காணமல்
3. கண்ணியமா யங்கு கர்த்தனைப் போற்றி
கண்டகன் தனைக்கொலக் கருதியே நின்றாய்
4. அரக்கியர் கூவல்கேட் டசோக வனம்போய்
மரத்தில் தங்கி மாதாவைக் கண்டாய்
5. ஐயன் தூதென வன்னை மதிக்க
கைதந் தாழியைக் கவலை தீர்த்தாய்
6. துன்பத்தைத் தீர்க்கத் தூதுவந் தாயென்
றன்னை மகிழ்ந்தங் கன்புடன் வாழ்த்த
7. மன்னன் தனது மனது மகிழ
அன்பாய் மணியை யடையாளம் கொண்டு
8. வனம தழிக்க வலிகொள் சேனை
கனமா யெதிர்க்கக் காலனூர் சேர்த்தாய்
9. இந்திர னஞ்ச மிந்திர சித்தன்
வந்தங் கெதிர்த்து வலமாய்க் கட்ட
10. புண்ணியா வஞ்சாப் புலிபோல் சென்று
அண்டரை வருத்திய வரக்கனைக் கண்டு
11. அன்னையை விடாயென் றறத்தைக் கூற
மன்னன் வெகுண்டு வாலைக் கொளுத்த
12. நாமத்தைப் போற்றி நாட்டை யெரித்துச்
சேமமாய்த் தாயைச் சேவித்துப் பாய்ந்தாய்
13. அங்கத னறிய வனைத்தும் கூற
மங்கள வார்த்தை வானரர் சொல்ல
14 அதிவிரை வாக வாவலா யோடி
மதுவன மதனில் மதுவை யுண்ண
15. ததிமுக னதனைத் தடுக்கவே மோதி
மதிதளர்ந் திருந்த மன்னனைக் கண்டு
16. மணியைத் தந்து மலரடி தாழக்
குணவா னங்கு கொடுத்தான் வரத்தை
17. நம்பின வர்க்கு நலமே செய்யும்
கம்பீர வீரா கடைக்கண் பாராய்
18. சரண மையா சாந்த சீலனே
அரணாய் நின்றுகாப் பாயடி யேனையே

ஸ்ரீ ஆஞ்சநேயர் திருவடிகளே சரணம்.

## மாருதி பிரார்த்தனை

1. சுக்ரீவ நேசம் வீராதி வீரா.
துக்க நிவர்த்தி ராகவ தூதா.

2. காம நிவாரணம் வீராதி வீரா.
ராம சகாயம் ராகவ தூதா.

3. மந்தரபர்வதம் வீராதி வீரா.
சுந்தரகோஷ்டம் ராகவ தூதா.

4. லங்கேணிவதம் வீராதி வீரா.
மங்கள ஞானம் ராகவ தூதா.

5. ராக்ஷசகோரம் வீராதி வீரா.
தாஷ்டிகரூபம் ராகவ தூதா.

6. துஷ்ட சம்ஹாரம் வீராதி வீரா.
கஷ்டநிவர்த்தி ராகவ தூதா.

7. லங்காதகனம் வீராதி வீரா.
எங்கும் பிரகாசம் ராகவ தூதா.

8. சேதுபந்தனம் வீராதி வீரா.
காதக நிக்ரகம் ராகவ தூதா.

9. சஞ்சீவி பர்வதம் வீராதி வீரா.
சஞ்சல விமோசனம் ராகவ தூதா.

10. கருணாகரமே வீராதி வீரா.
சிரஞ்சீவி பட்டம் ராகவ தூதா.

11. தேவதாபயம் வீராதி வீரா.
ராவணஹாரம் ராகவ தூதா.

12. மந்திரப் பலம் வீராதி வீரா.
சுந்தரப்பட்டம் ராகவ தூதா.

13. சரணம் சரணம் வீராதி வீரா.
தரும சகாயம் ராகவ தூதா.

ஸ்ரீ ஆஞ்சநேயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீராமர் பிரார்த்தனை.

பரப்ர்ம்மசொரூபனே நமஸ்கரிக்கிறேன். அயோத்தி யென்னும் வைகுண்டத்திலிராங்கிய நாராயணரென்னும்! ஸ்ரீராமப்பிரபுவே உம்மை நமஸ்கரிக்கிறேன், ஞானியென்னும் கௌஸல்யைக்கு ஆனந்தமென்னும் முத்தியைக் கொடுத்த ஸ்ரீராகவா உம்மை நமஸ்கரிக்கிறேன் ; நித்திய மென்னும் ஸீதாதேவியை பத்னியாய்க்கொண்ட பிரபுவே உம்மை நமஸ் கரிக்கிறேன் ; க்ஷாமமென்னும் நோயைப்போக்க நாமமாய்வந்த புருஷோத்தமா உம்மை நமஸ்கரிக்கிறேன், முத்தியென்னும் வீட்டைப் பெறப் பத்தியென்னும் பாதனைக்காட்டின ஓ ! பரந்தாமா ! உம்மை நமஸ்கரிக்கிறேன், தொண்டென்பதைக்காட்ட புண்ணியனை லக்ஷ்மணனைக் காட்டின கருணாநிதியே உம்மை நமஸ்கரிக்கிறேன் ; ஓ ! ராகவா ! எட்டிக்காய் பார்வைக்கழகாய் இருப்பினும், குணத்தில் எவ்வாறு கசப்பாய் இருக்குமோ அவ்வாறே அடியேனுக்கு அவயவங்களெல்லாம ஒழுங்காய் இருப்பினும் எனதுள்ளம் கொடிய கசப்பாக இருக்கின்றது., ஓ பரமதயாநிதியே, விஷங்களென்னும் கொடிய தேள்களும், இந்திரியமென்னும் கொடிய ஸர்ப்பங்களும், காமமென்னும் காண்டா மிருகமும், குரோதனமென்னும் நரிக்கூட்டமும், எண்ணமென்னும் மந்திரிகளும், அகங்காரமென்னும் மதயானைகளும், அபிமானமென்னும் முள்ளம் பன்றிகளும், இச்சையென்னும் கோறைகளும், அஞ்ஞானமென்னும் இருள் கூட்டங்களும் சூழ்ந்த இந்த தேகமென்னும் காட்டில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கிறேன், ஓ ! கருணைக்கடலே, தேவரீருடைய திருமார்பில் திருமகள் வீற்றிருப்பதால், தேவரீரிடத்தில் எல்லா கல்யாணகுணங்களும் நிறைந்திருக்கின்றன. ஓ ! தேவர்க்கு முதல்வா ! விஷ்ணு நீரே ! நாராயணன் நீரே ! ஈசுவரர்களுக்கெல்லாம் ஈசுவரன் நீரே ! முன்னும நீரே ! பின்னும் நீரே ! உள்ளும் நீரே ! புறமும் நீரே ! குருவும் நீரே ! விண்ணும் நீரே ! கண்ணும் நீரே ! கர்த்தனும் நீரே ! கண்ணனும் நீரே ! வேதமும் நீரே ! நாதனும் நீரே ! சந்ததியை அளிப்பவரும் நீரே ! அவைகளைக் காப்பவருமநீரே ! சக்கரதரனும் லக்ஷ்மிபதியாயும், பிரபுவாயுமுள்ள ஸ்ரீராம ! சந்த்ராநிதியே ! சபரிதந்த பழங்கள் குற்றமாயிருந்தும் குற்றத்தைநீக்கி, குணமாய்க் கொண்டதுபோல், அடியேனிடத்தில் குற்றமிருந்தாலும் அதைக் குணமாய்க்கொண்டு காப்பது தேவரீருடைய கடமையாகும். ஓ ! தசரதானந்தா நூறுதடவை நமஸ்கரிக்கிறேன் ! ஸீதாகாந்தா ! ஆயிரம் தடவை நமஸ்கரிக்கிறேன் ! ஸத்திய விரதா ! பதினாயிரம் தடவை நமஸ்கரிக்கிறேன் ! பிரயபாராயணா ! கோடிதடவை நமஸ்கரிக்கிறேன், ஓ! சங்கடஹ்ரணா ! பல ஆயிரம் கோடி தடவை நமஸ்கரிக்கிறேன். பரிபூரணா ! சர்வகாரணா ! வெங்கட்டரமணா ! ஸ்ரீதரா! தாமோதரா ! முகுந்தா ! வைகுந்தா ! ஸ்ரீரங்கா பாண்டுரங்கா ! மாதவா ! ராகவா ! யாதவா ! கேசவா ஓ ! தேவதேவா ! ஆதிதேவா ! ஓ ! ஸ்ரீமந்நாராயணா! ஓ! கருணாநிதியே அடியேனை எந்த வேளையிலும் அரணாக நின்று காப்பாற்ற பிரார்த்திக்கின்றேன். ஹரி ஓம் :

ஸ்ரீராமசந்த்ர பரபிரம்மனே நம:
ஸ்ரீ ஆஞ்சநேயர் திருவடிகளே [illegible].

